ஆனந்த நாவல்

விலை ரூ.15

# எனது ஆன்மீக அனுபவங்கள்

பாலகுமாரன்



யோகி ராம்சுரத்குமார் கடை:044-24336824

# சக்தி ஜெம்ஸ்

## வாசலில் ஒரு வாசகரோடு எழுத்துச்சித்தர் பாலகுமாரன் அவர்கள் பேசியதில் ஒரு பகுதி.

வாசகர் : ஸார். இந்த ராசிக்கல்லெல்லாம் உண்மையா. நீங்க நம்பறீங்களா. நான் குதர்க்கமா கேட்கலை. தெரிஞ்சுக்கணும்னு கேட்கறேன்.

பாலகுமாரன் : நீங்கள் கேட்ட தன்மைக்காக நான் உங்களுக்கு பதில் சொல்கிறேன். ஜோசியத்தை நீங்கள் நம்பினால் ராசிக்கல்லையும் நம்பித்தான் ஆக வேண்டும். ஜோசியம் என்பது மிக நுணுக்கமான விஞ்ஞானம். இதைக் கற்றுத் தெரிந்தவர்கள் மிகச் சிலரே.

என்னுடைய மகன் வேங்கடரமணன் என்கி சூர்யாவிற்கு ஒரு பச்சைக்கல் ராசி என்று கொடுக்கப் பட்டது. கல் அணிந்த நாள் முதலாய் அவருக்கு ஆட்டம் பாட்டம் அதிகமாயிற்று. நண்பர்கள் சேர்க்கையால் இடையறாத ஊர் சுற்றுதல்தான் முதன்மையாயிற்று. யதார்த்த ஜோதிடருமான திரு.ஷெல்வீ அவர்கள் இந்தச் பச்சை தவறு என்று அவருக்கு ரூபி என்கிற கல்லை மாற்றிக் கொடுத்தார். வணிகவியலில் மத்திமமாகத் தேறிய என் மகன் அடுத்தபடி எம்.பி.ஏ. சேர்ந்து முதல் வகுப்பில் தேறி நல்லவிதமாக புராஜக்ட்டும் செய்து முடித்துவிட்டார். வேலை செய்யும் இடத்தில் நல்ல பெயரும் எடுத்தார்.

உடல் நலம் சரியில்லாத என் உறவினர் ஒருவர் சக்தி ஜெம்ஸிடம் போய் நின்று அவர்களிடம் பேசி விசாரித்து தன்னுடைய ரத்தக் கொதிப்புக்கு பவழமும், கனக புஷ்பராகமும் ஏற்றது என்று வாங்கி நெஞ்சில் அணிந்து கொள்ள அவரின் கோபதாபங்கள் மிகவும் குறைந்தது. நோய் மட்டுப்பட்டது.

இருபத்தாறு வயதாகியும் வாசகியான ஒரு பெண்ணுக்கு திருமணமாகாமல் பல வரன்கள் தட்டிப் போன நிலையில் சக்தி ஜெம்ஸை அணுகி அவர்கள் குறிப்பிட்ட கல்லை வாங்கிப் போட்டுக் கொள்ள முப்பத்தேழாம் நாள் திருமணம் நிச்சயமாயிற்று. மூன்று



VOL - VI - April - 2005 - Issue - 9

யோகி ராம்சுரத்குமார் ஜெயகுருராயா

# ஆசிரியர் பக்கம்



தோழமைக்கு, வணக்கம்.

கதையா, கட்டுரையா எது சிறந்தது என்று பட்டிமன்றம் தலைப்பு வைப்பது போல பாலா சாருது இருக்கும். இரண்டுமே.. ஒன்றுக்கு ஒன்று விட்டு கொடுக்காமல் நிற்கும் என்று அரபு நாடுகளில் வேலை பார்க்கும் நண்பர் திரு.கல்யாண் நமது அலுவலகத்திற்கு வந்திருந்த போது சொன்னார்.

வருடத்திற்கு ஒருமுறை விடுப்பில் வரும் அவர்.. சென்னை மண்ணை மிதித்ததும் நேரே நமது அலுவலகத்திற்குதான் வருவார். எழுத்துச் சித்தர் கதைகளின் மீதும், கட்டுரைப் புத்தகங் களின் மீதும் மாறாத காதல் கொண்டவர்.

இந்த மாதம் எழுத்துச்சித்தரின் கட்டுரை தொகுப்பு ஒன்று **'எனது ஆன்மீக அனுபவங்கள்'** என்ற தலைப்பில் வெளிவருகிறது என்று சொன்னதும் தான் தாமதம், அவர் முகத்தில் அப்படி ஒரு சந்தோஷம்.

அந்த கட்டுரையில், அப்படி எழுதியிருந்த தால்தான் நான் இந்த மாதிரி.. நகங்களை எல்லாம் வெட்டி சுத்தமாக விரல்களை வைத்திருக்கி றேன். என் வேலைகளை சோம்பல் இல்லாமல் இன்று செய்வதற்கு சாரோட இன்னொரு கட்டுரை காரணம். இந்த விஷயம் பழகுவதற்கு இந்தக் கட்டுரைதான் எனக்கு வழி காட்டிற்று என்று பட்டியல் போட்டு விளக்க ஆரம்பித்தார்.

கற்றுக் கொண்ட சந்தோஷமும், அதனால் வாழ்வு மேன்மையடைந்ததும், இதைப்போல இன்னோரன்னவர்கள் பயன் பெற்றதையும்



சொல்லி எனக்குச் சொல்லொணா உற்சாக மூட்டினார்.

கற்றுக் கொண்டால் குற்றமில்லையில் ஆரம்பித்து மேய்ச்சல் மைதானம் என்று அவரின் விசாலம் பரந்து விரிந்திருந்தது. இந்த புத்தகம் உங்களுக்கு என்று கொன்றை மர நிழலில் என்ற ஒரு புத்தகத்தைப் பரிசளித்து விட்டுப் போனார்.

இந்த மாதிரி நண்பர்கள், வாசகர்களின் பேராதரவினால்தான் நமது பல்சுவை குடும்பம் பல்கிப் பெருகி எங்கும் பரவி வியாபித்திருக்கிறது என்பதைச் சொல்லவும் வேண்டுமா.

எழுத்துச்சித்தர் இப்படி சொல்லித் தருவதும், நாம் கற்றுக் கொள்வதும் ஒரு பெரிய கொடுப்பினை. இந்த தருணம் இவை இரண்டும் இங்கு ஒருசேர நடை பெறுகிறது. இந்த இன்பம் எல்லோரும் பெற சத்குரு நாதன் யோகி ராம்சுரத்குமார் அருள் செய்வாராக..

மற்றபடி, பல்சுவை நாவலில் எழுத்துச் சித்தர் பாலகுமாரன் எழுதும் 'உடையார்' எட்டாம் புத்தகம் இன்னும் சில தினங்களில் கடைகளில் கிடைக்கும்.

லேடீஸ் நாவலில் எழுத்துச்சித்தர் பால குமாரன் எழுதும் 'திருவடி' இப்போது கடை களில் விற்பனையாகிக் கொண்டிருக்கிறது.

க்ரைம் ஸ்டோரி ஸ்பெஷலில் இந்திரா சௌந்தர்ராஜன் எழுதிய 'துள்ளி வருகுது வேல்!' வெளிவந்துள்ளது.

டுடே க்ரைமில் இந்திரா சௌந்தர்ராஜன் எழுதிய 'காற்றாய் வருவேன்' வெளி வந்துள்ளது.

அனைத்தையும் கேட்டு வாங்கி படித்து விட்டுக் கடிதம் எழுதவும்.

உங்கள் கடிதங்களுக்காகவே காத்திருக்கிறேன்.

தோழமையுடன்,

**பொன். சந்திரசேகர்**

# பாலகுமாரன் பேசுகிறேன்



இனிய ஸ்நேகிதங்களுக்கு வணக்கம். வாழிய நலம். 'எனது ஆன்மீக அனுபவங்கள்' என்ற தலைப்பில் அங்கங்கே வெளியான சில கட்டுரைகளை ஒன்றாகத் தொகுத்து ஒரு புத்தகமாக்கியிருக்கிறேன். இம்மாதிரி நான்கைந்து வெளிவந்து பிறகு அவை திருமகள் நிலையத்தில் ஒரே புத்தகமாக வெளிவரும்.

ஆன்மீகமான விஷயத்தில் இதுதான் என்று முடிவான முடிவாக எவரும் பேச இயலாது. தெளிவானவர்கள் அப்படிச் சொல்ல முற்படுவதும் இல்லை.

கடவுள் என்ற விஷயம்பற்றி இப்படி இருக்கலாம், இப்படி இருக்கக்கூடும். புகை யிருப்பின் நெருப்பு இருக்கலாம் என்ற அனுமானம் போலவும் சொல்வார்கள்.

பகவான் ஸ்ரீ ரமண மகிரிஷியிடம் ஒரு வட இந்திய அன்பர் அருகே வந்து தனக்கு கிருஷ்ணன் அடிக்கடி காட்சி கொடுக்கிறான் என்றும், தன்னோடு பேசுகிறான் என்றும், தன்னோடு கைகோர்த்து ஆடுகிறான் என்றும், தன்னைப் போலவே பாடுகிறான் என்றும், தன் பாட்டைக் கேட்டு குழல் ஊதுகிறான் என்றும் விவரித்துச் சொன்னார். அந்த நேரத்தில் தானும் மெய் மறந்து ஆடிப்பாடுவதாக உணர்ச்சி பொங்க விவரித்தார். அருகிலுள்ளோர்கள் அவர்



சொல்வதைக் கேட்டு ஆனந்தமயமானார்கள். ஆச்சரியப்பட்டார்கள். ஆனால் பகவான் ஸ்ரீ ரமணர் இப்போது அந்தக் கிருஷ்ணர் எங்கே என்று கேட்க, அவர் இப்போது இல்லை. விரும்பும்போதுதான் வருவார். இப்போது போய்விட்டார் என்று பதில் சொன்னார்.

பகவான் ஸ்ரீ ரமணர் அந்த வட இந்திய அன்பரைப் பார்த்து, வரும்போகும் கடவுளோடு இருப்பதைக் காட்டிலும், நிரந்தரமாய் நெஞ்சுக்குள் நீங்காதிருக்கிற கடவுளைக் காணுவதற்கு முயற்சி செய்யுங்கள் என்று சொல்லி அனுப்பினார். அந்த வட இந்திய அன்பருக்குப் புரிந்ததா என்று தெரியவில்லை.

என்னுடைய இந்தக் கட்டுரைகள் பக்தி அனுபவத்தை, பக்தியை வெளிப்படுத்தும் கோவில் அனுபவத்தை, நாயன்மார்கள் கதையை, சுற்றியுள்ளோரின் குணநலன்களைக் கூர்ந்து பார்த்தும், அதேவிதமான விமர்சனத் தோடு என்னையும் கூர்ந்து கவனித்தும் எழுதியிருக்கிறேன்.

யாரையும் சரி, தவறு என்று சொல்வதற்கோ அல்லது உங்களுக்கு தெள்ளத்தெளிவாக இதுதான் கடவுள் என்று விளக்குவதற்கோ எழுதப்பட்ட கட்டுரைகள் அல்ல. உங்கள் சிந்தனைகளைத் தூண்டும் வண்ணமே, கடவுள் பற்றி நீங்கள் தனியே அமர்ந்து சிந்திக்க வேண்டுமென்ற எண்ணத்துடனே இவை எழுதப்பட்டன. இதைப்படித்து மிகமிக நெருங்கிய நண்பர்களோடு விவாதிப்பதின் மூலமும், தனியே அமர்ந்து உண்மையில் இது என்ன, இவர் என்ன சொல்கிறார் என்று ஆழ யோசிப்பதின் மூலமும் மேல் நோக்கி சில படிகள் போக முடியுமென்று நினைக்கிறேன்.

எதற்கு கடவுள் தேடல் என்று அடிப்படை யாய் ஒரு கேள்வியும் எழலாம்.

எதற்கு சாப்பிடுகிறாய். எதற்கு திருமணம் செய்து கொள்கிறாய். எதற்கு உடை உடுத்து



கிறாய், ஏன் உத்தியோகத்திற்கு போகிறாய் என்றெல்லாமும் கேள்வி கேட்க முடியும்.

என்ன செய்தாலும் மரணம்தான் சாஸ்வதம். அதிலிருந்து தப்பித்துக் கொள்ள முடியாது என்பதுதான் வாழ்க்கையினுடைய அடிநாதமாக இருக்க, வாழ்க்கை என்ன எதற்காக இங்கு பிறந்திருக்கிறோம். எது பிறந்திருக்கிறது. எது உண்மையான நான் என்ற கேள்வியும் மிக இயல்பாகவே நமக்குள் எழுகிறது. நம்முடைய இயல்பு என்ன என்று பார்க்கிறபொழுது சந்தோஷம் தேடுதலே என்பது தெள்ளத் தெளிவாகிப் போகிறது.

அதேசமயம் எது சந்தோஷம் என்ற கேள்வியும் உடனேயே வருகிறது. அம்மாதிரி கேள்விகளை கேட்டுக் கொண்டு போக நம்மைப் பற்றிய பல லட்சணங்கள் வெளியே வந்து விழுகின்றன. லௌகீகமான வாழ்க்கையில் நிம்மதியடையவும் இம்மாதிரியான உள் மன வேஷங்கள் வெளிவருவது நல்லது.

இந்தக் கட்டுரைகள் எழுதியதால் எனக்கு எல்லாம் தெரிந்தது, நான் பெரிய கொம்பு என்ற எந்த அர்த்தமும் வந்துவிடவில்லை. எனக்கு ஒரு குரு கிடைத்தார். வழிகாட்டினார். நல்ல பாதைக்கு திருப்பி வைத்தார். நான் அறிந்தவைகளை உங்கள் முன் வைக்கிறேன்.

எதையாவது கிளறினால்தான் கோழிக்கு உணவு கிடைக்கும். கடவுள் தேடலும் அவ்விதமே. நீங்கள் தொடர்ந்து நல்லபடி உங்களை நீங்களே விசாரிக்க என் பிரார்த்தனைகள்.

யோகி ராம்சுரத்குமார்..
யோகி ராம்சுரத்குமார்..
யோகி ராம்சுரத்குமார்
ஜெயகுருராயா..

என்றென்றும் அன்புடன்,
**பாலகுமாரன்**



# வாசகர் ஸ்கேனிங்



■ எங்கள் குடும்பத்தில் அனைவரும் நீண்ட நாட்களாக தங்களுடைய புத்தகங்களைப் படித்து அதிலேயே திளைத்தவர்கள். தற்பொழுது டிசம்பர் 26ல் ஏற்பட்ட சுனாமியால் எங்களுக்கு ஏற்பட்ட அனுபவத்தை தங்களிடம் பகிர்ந்துக் கொள்ள ஏதோ ஓர் ஆர்வம். யாரிடமாவது சொல்ல வேண்டுமே என்ற மன உந்துதல். தங்களை விட பொறுத்தமானவர் யாருமில்லை என்று அடி மனதில் ஓர் எண்ணம்.

நாங்கள் எங்கள் மாமனார் காலத்திலிருந்து ஐம்பது வருடங்களாக நாகை பீச் ரோட்டில் மரவாடி நடத்தி வந்தோம். அந்த இடம் மாதாக் • கோயிலுக்கு சொந்தமானது. அங்கு ஒரு ஸ்கூல் இருக்கிறது. அதற்கு விளையாட்டு மைதானம் கட்ட வேண்டுமென்று கோவிலில் கேட்டார்கள். எங்கள் மாமனார் கேட்டுக் கொண்டபடியால் மேலும் பத்து வருடத்திற்கு எழுதிக் கொடுத்திருந்தார்கள். எங்களுக்கு காரைக்காலிலும் ஒரு கடை இருக்கிறது. ஐந்நூறு வருடங்களுக்கு பிறகு எங்கள் மாமனார் இறந்த பிறகு ஒண்டியாக இரண்டு கடையை பார்ப்பது கடினம். வயதும் ஆகி விட்டது. சர்ச் சொத்து நமக்கு வேண்டாம் என்று நானும் எனது கணவரும் தீர்மானித்து மாமனார் எழுதிய கெடுவிற்கு இரண்டு வருடம் முன்பே எந்த நிபந்தனையும் இல்லாமல் எல்லாவற்றையும் காரைக்காலுக்கு மாற்றி எல்லா ஆட்களுக்கும் தகுந்த Compensation கொடுத்து கடையை காலி செய்து சாவியை சர்ச் பாதரிடம் ஒப்படைத்து விட்டோம். அதன் பிறகு ஒன்றரை வருடம் கழித்து சுனாமி வந்து கடை இருந்த இடமே தெரியாமல் ஒரே வெள்ளக்காடாய் இருந்தது. ஒரு வேளை அந்த இடத்தில் கடை இருந்திருந்தால் பெருத்த நஷ்டம், மனக் கஷ்டம். அந்த சுனாமி



வந்த அந்த காலை நேரம் தான் கடை திறக்கும் நேரம். இதையெல்லாம் நினைக்கும் போது தெய்வம் நிச்சயம் நம்மை எந்த சமயத்தில் எப்படி வழி நடத்த வேண்டுமோ அப்படி நடத்தி செல்கிறது. இது தெய்வ சங்கல்பமே அல்லாது மனித முயற்சியே இல்லை.

நாங்கள் நீண்ட நாட்களாக சத்ய சாய்பாபாவின் பக்தர்கள். வருடம் ஒரு முறையாவது புட்டபர்த்தி சென்று ஸ்வாமியை தரிசனம் செய்பவர்கள். அதுவும் தவிர யோகி ராம்சுரத்குமார் அவர்களிடமும் ஈடுபாடு உள்ளவர்கள். திருவண்ணாமலை சென்று தரிசனம் செய்யும் பாக்கியம் பெற்றவர்கள். அங்கு ஒரு வேளை உணவும் உண்டு, அங்கு நடைபெறும் ராமஜெபத்தில் கலந்து கொண்டவர்கள்.

நாகப்பட்டிணத்தில் எங்களுக்கு வீடு இருக்கிறது. தற்சமயம் காரைக்காலில் கடை, மேலே வீடு. பேரன் வினாயகா மெடிக்கல் காலேஜில் படிக்கிறான். அந்த கல்லூரி கடற்கரை ஓரத்தில் இருக்கிறது. சுனாமி வருவதற்கு முதல் வார ஞாயிற்றுக்கிழமை கூட கல்லூரியில் ஏதோ டெஸ்ட் வைத்தார்கள். ஞாயிற்றுக்கிழமை அவன் பரிட்சை முடித்து கிறிஸ்துமஸ் பண்டிகைக்காக ஒரு வாரம் விடுமுறை என்று சொல்ல, நாங்கள் அனைவரும் கிளம்பி குடந்தை சென்றோம். குடந்தையில் எனது மகளும், மருமகளும் டாக்டராக இருக்கிறார்கள்.

ஒரு வாரம்தான் விடுமுறை இருக்கிறதே என்று அங்கிருந்து செவ்வாய் கிளம்பி புதன் பெங்களூர் சென்றோம். பெங்களூரில் எங்களது இளைய மகள் இருக்கிறாள். இரண்டு, மூன்று நாள் கழித்து புட்டபர்த்தி செல்லலாம் என்று தீர்மானித்து நான், எனது கணவர், எனது இளைய மகள் வசந்தி மூவரும் ஞாயிரன்று காலை (சுனாமி வந்த அந்தக் காலைப்பொழுது) கிளம்பி பஸ்ஸில் புறப்பட்டு புட்டபர்த்தி சென்றோம். மத்தியானம் ஸ்வாமி தரிசனம் செய்ய சென்றோம். ஸ்வாமி நான்கு மணிக்கு காரில் வந்தார். தரிசனம் செய்துவிட்டு திரும்பி விட்டோம். மறுநாளும் காலை ஸ்வாமி தரிசனம் செய்தோம். அதாவது ஞாயிறு, திங்கள், செவ்வாய் காலை நான்கு வேளை தரிசனம். நாகப்பட்டிணத்தில் சுனாமி வந்து உலகமெல்லாம் தெரிந்த விஷயம் எங்களுக்கு சுத்தமாக தெரியாமல் போய்விட்டது. அந்த இரண்டு நாளும் பிரசாந்தி நிலயத்தில் ஸ்வாமியின் பாதுகாப்பில் இருந்திருக்கிறோம். எந்த சேதியும் தெரிய





வில்லை. எங்களுக்கு வயதானபடியால் தாங்க சக்தி இருக்காது என்று ஸ்வாமி நினைத்துவிட்டார் போலும். பேரனுக்கு அன்று கல்லூரி இருந்திருந்தால், எங்களுக்கு பீச் ரோட்டில் கடை இருந்திருந்தால், நாங்கள் அன்று நாகையில் இருந்திருந்தால், இதையெல்லாம் நினைக்கும் போது தெய்வம் நேரில் பேசுவதில்லை. நம்முடைய ஒவ்வொரு செய்கையையும் பார்த்துக் கொண்டிருக்கிறது. புட்டபர்த்தியிலிருந்து சாதாரணமாக மகளுக்கு போன் போட்டு கேட்டபோது நாகையில் கொஞ்சம் சேதம் என்று அதோடு முடித்துவிட்டார். பெங்களூர் வீட்டிற்கு வந்து சன் நியூஸ் போட்டவுடன் இவ்வளவு நடந்திருக்கிறது என்று தெரிந்தது. மூன்று நாட்களாக டி.வியை போட்டால் எங்கு பார்த்தாலும் ஓலம். இதற்கு மேல் இழப்பு ஏற்பட முடியாது என்று அனைவரும் கூறினார்கள். சுனாமியின் போது நாங்கள் புட்டபர்த்தியில் ஸ்வாமியின் பாதுகாப்பில் இருந்ததை நினைக்க நினைக்க இப்படியெல்லாம்கூட நடக்க முடியுமா என்று பிரமிப்பாக இருக்கிறது.

**-கே.சிவகாமிகிருஷ்ண மூர்த்தி**
**காரைக்கால்.**

# ஸ்நேகிதம்



இனிய
ஸ்நேகிதமுள்ளவர்கள்
அனைவரும் கடிதம் மூலம்
இங்கு கை குலுக்கிக்
கொள்ளலாம்.

| | |
|---|---|
| செ.கோவிந்தராஜன்,<br>2, இளங்கோ தெரு,<br>அய்யப்ப நகர்,<br>திருச்சி - 620 021. | ப.மின்னல்நாசர்,<br>27/சி, வடக்கு<br>காசிம் தெரு,<br>கரூர்-1. |
| பொன் துரை,<br>11/17எ, முதல் தெரு,<br>ஜெயபுரம்,<br>திண்டிவனம்-604 002. | S.PRABU,<br>POWER HOUSE,<br>403 FD AMB<br>102 INF BDE<br>C/o 56 Apo. |
| தி.பசுபதி,<br>பெரிய வீரசங்கிலி போஸ்ட்,<br>விஜயமங்களம் வழி,<br>பெருந்துறை தாலுக்கா,<br>ஈரோடு - 638 056 | கே.அஸ்வீன்,<br>525, திருவள்ளுவர் நகர்,<br>சரபோஜி போஸ்ட்,<br>தஞ்சாவூர்-613 005. |

# பாலகுமாரன் பதில்கள்

**குணசேகரன்,**
**பேர்ணாம்பட்டு.**



☐ **எங்கள் கிராமத்தில் வில்வக்கன்றுகள் நிறைய கிடைக்கும். நான் பல கோயில்களில் கொண்டு போய் நல்ல வில்வக்கன்றுகள் கொடுத்து அவை மரமாகியிருக்கின்றன. உங்களுக்கொரு வில்வக்கன்று கொடுக்கட்டுமா.**

★ *மிக்க நன்றி. வில்வம் சிவனுக்கு மிக பிரியமான தளம். ஆனால், என் வீட்டில் ஒரு வில்வமரம் வளர்க்கக்கூடிய அளவுக்கு தோட்டமில்லை. என் வீடு சுற்றி சுவரோரமாக இருந்த மண்ணைக் கொத்தி, எரு விட்டு சிறிய பூச்செடிகள் வைத்திருக்கிறேன். செம்பருத்தி, அடுக்கு நந்தியா வட்டை, சாதாரண நந்தியாவட்டை, ஆல்மண்டா, முல்லை, மல்லி, விருட்சி, மந்தாரைப் பூக்கள் என்று பலதும் வளர்கின்றன. ஒரு பவழமல்லி மரமும், முன்னே ஒரு சரக்கொன்றையும் நன்கு வளரத் துவங்கி விட்டன. மருதாணி மரமும் இருக்கிறது. இவைகளைப் பராமரிப்பதே கடினமாக இருக்கும் போது, வில்வம் வைத்து நட்டு எப்படி வளர்ப்பது. வில்வ மரம் கொண்டு வந்தால் மயிலாப்பூர் சிவன் கோயில் ஏதேனும் ஒன்றில் நட்டு வளர்க்க முயற்சிக்கிறேன்.*

மணிவண்ணன், ஜெயமங்களம்.

☐ **சிலர் கோயில் சொத்துக்களை கூசாமல் கொள்ளையடிக்கிறார்களே, அவர்களை என்ன செய்வது.**

★ நீங்கள் எதுவும் செய்ய வேண்டாம். முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும். கோயில் சொத்தை எடுத்தவர் வாழ்ந்ததாக சரித்திரமேயில்லை. சமீபமாக ஆர்.பொன்னம்மாள் என்பவர் எழுதிய ஷீரடி சாய்பாபாவின் சாய் ஸத் சரிதம் என்ற நூலுக்கு முன்னுரை எழுதுவதற்காக முழுவதும் படித்தேன். ஆடுகளையும், நாய்களையும் உற்றுப்பார்த்து, போன ஜென்மத்தில் அவைகள் என்னவாக இருந்தன, எப்படி ஏமாற்றின, என்னவிதமான அக்கிரமங்களெல்லாம் செய்தன என்று விவரித்து, அதனால்தான் அவர்கள் இப்போது விலங்காகப் பிறந்திருக்கிறார்கள் என்று விவரமும் சொல்லி, எதிரே இருக்கும் நண்பர்களுக்கு யார் காசுக்கும் ஆசைப்படாத, மற்றவரை ஏமாற்றாத, குறிப்பாய் கோயில் சொத்துக்களை அபகரிக்காத புத்தியைக் கொடுக்கிறார். என்னுடைய அனுபவத்தில் கோவில் சொத்தை எடுத்து அனுபவித்தவர்கள் மிக வேகமாக புறக்கணிக்கப்பட்டிருக்கிறார்கள். உறவுகளாலும், நண்பர்களாலும் வெறுக்கப்பட்டிருக்கிறார்கள். தனித்துப் போய் மனவுறுதியின்றி அழுது அழுது மரணமடைந்திருக்கிறார்கள். கடும் நோயால் சித்ரவதையை அனுபவித்திருக்கிறார்கள். எல்லாக் குற்றங்களையும்விட பொதுச் சொத்தை அபகரிப்பது கேவலமான குணம். வெகுநிச்சயமாய் அதற்கு தண்டனை வந்து சேரும். எல்லா அட்டகாசங்களுக்கும் உடல் வலு தான் காரணம். ஆனால், உடல் வலு என்பது சொடுக்கு நேரத்தில் காணாமல் போய் விடக் கூடியது. ஒரு வேளை உணவு செரிமாணம் ஆகாவிட்டாலும் உடம்பு முழுவதும் விஷம் பரவி அலற நேரிடும், நோயுற்றிருப்பினும், உள்ளே தெளிவிருப்பின் அந்த நோயோடு நிம்மதியாக வாழ முடியும். நோயை மெல்ல மெல்ல தீர்த்துக் கொள்ள முடியும்.

**எஸ்.லக்ஷ்மி, சௌகார்பேட்டை.**

☐ **நீங்கள் ஏன் காதற்கதையே எழுதுவதில்லை. திரும்பத் திரும்ப ஆன்மீகமாகவே செய்கிறீர்கள்.**

★ காதலும், ஆன்மீகமும் ஒன்றுதான். காதல் பழுத்து கனிந்து நறுமணம் வீசும் நேரம் ஆன்மீகம் வந்துவிடுகிறது. நல்ல விதமாய் காதலை அனுபவித்தவன் ஆன்மீகவாதியாகிறான். மனிதர்களை வெறுப்பவனால் ஆன்மீகவாதியாக ஆகவே முடியாது. மனைவியை இழிவுபடுத்தியவன், அடித்துத் துவைத்தவன், அல்பத்தனமாய் நடந்தவன், மனைவியால் மிக மோசமாய் புறக்கணிக்கப்பட்டவன் ஆன்மீகத்திலும் ஈடுபட முடியாது. காதலிலும் வெற்றி பெற முடியாது. மனித உறவு, பரஸ்பர நம்பிக்கை, பெண் மீது ஆண் காட்டும் கனிவு, ஆண் மீது பெண் வைக்கும் நம்பிக்கை இவையெல்லாம் நிறைய எழுதியிருக்கிறேன். மீண்டும் எழுதினாலும் எழுதுவேன். ஆன்மீகக் கதைகள் காதலுக்கு எதிரானவை அல்ல. அவை நன்கு கனிந்த காதற்கதைகள் என்று நீங்கள் எடுத்துக் கொள்ளலாம். அப்படிப் புரிந்து கொள்ள உங்களுக்கும் ஒரு பக்குவம் வரும்.

**கே.சந்தானம், விருத்தாசலம்.**

☐ **எழுத்தாளர் திரு.ஜெயகாந்தன் அவர்களுக்கு ஞானபீட விருது கிடைக்கிறதே, அது குறித்து உங்கள் அபிப்ராயம் என்ன.**

★ தகுதியானவருக்கு தகுதியான பரிசு கொடுக்கப்பட்டிருக்கிறது. எப்பொழுது யார் பரிசு கொடுத்தாலும், யார் பரிசு வாங்கினாலும், எழுத்தாளர்களிடையே சலசலப்பும், சண்டையும், அபிப்ராய பேதமும் ஏற்படும். இப்போது அந்த அபிப்ராய பேதங்கள் ஏற்படாது என்று நினைக்கிறேன். தமிழ் சிறுகதை உலகமும், இலக்கியமும் ஒரு தேக்க நிலையில் இருந்தபோது ஜெயகாந்தன் அவர்களுடைய எழுத்துக்கள் அதற்கு புத்துயிர் கொடுத்தன. வாரப்பத்திரிகைகளுக்கு ஜெயகாந்தன் அவர்கள் கதையால் மரியாதை ஏற்பட்டது.



விற்பனை அதிகரித்தது. புத்தகங்கள் படிப்பது மட்டுமே வாழ்க்கையின் மிக உயரிய லட்சியமாய் கொண்டிருந்த என் போன்றவர்களை ஜெயகாந்தன் அதிகம் கவர்ந்தார். அன்றைய தேதிக்கு அதிர்ச்சியூட்டும் கதைகளாக அவை இருந்தன. அவருடைய கதை நடையும் ஆரவாரமாக இருந்தது. அந்த ஆரவாரமான நடையை பல இளைஞர்கள் நண்பர்களுக்கு கடிதம் எழுதும் போதும் கைக் கொண்டனர்.

"ஓ.. அவள் எவ்வளவு அழகா இருந்தாள்."

"ஓ.. நீ என் நண்பன் என்பதில் எவ்வளவு சந்தோஷம் எனக்கு." என்றெல்லாம் எழுதினார்.

அத்தனை தாக்கம் அவர் எழுத்தில் தமிழ்நாட்டுக்கு இருந்தது. அவரை எழுத்தில் மட்டும் அறிந்தவன் இல்லை. நேரேயும் பல முறை பார்த்திருக்கிறேன். எழுத்தால் கவரப்பட்டு ஆழ்வார்பேட்டையிலுள்ள அவர் சபைக்குப் போயிருக்கிறேன்.

சந்தர்ப்பவசத்தால் கற்பை இழந்த ஒரு கல்லூரி மாணவியின் கதை பற்றி பேச்சு வந்தது. அவள் தாயார் அவள் தலையில் ஒரு தவலை தண்ணீர் கொட்டி எல்லாம் சரியாயிற்று. எதுவும் நடக்கவில்லை என்று நினைத்துக் கொள் என்று அந்தப் பெண்ணை சுத்தப்படுத்தி விடுவாள். அவருடைய இந்தக் கதை தமிழ்நாட்டில் மிக பலத்த சர்ச்சையை ஏற்படுத்தியது. கதை வெளியான ஐந்து வருடங்கள் கழித்துத்தான் அவரைச் சந்தித்தேன். அது ஏற்படுத்திய சர்ச்சை பற்றியும், நாங்கள் வசித்த வீடுகளில் அந்தக் கதைபற்றி பேசப்பட்டதையும் அவரிடம் சொன்னேன். அந்தக் கதையைப் புரிந்து கொள்ள வேண்டுமென்றால் அந்தப் பெண்ணுக்கு தாயாக இருந்து பார் என்று ஒரே வார்த்தையில் எனக்கு வழிகாட்டினார். அந்தக் கதையைப் படித்து குற்றம் சொன்னவர்கள் அத்தனை பேரும் அந்தப் பெண்ணுக்கு அன்னியர்களாகத்தான் இருந்தார்களே தவிர, உறவாக இல்லை. அவளுடைய நல்ல உறவு அவள் தாய்தான். அவள் தாயாக இருந்து அந்தக் கதையைப் படித்தால் ஒரு தவலை ஜலத்தை தலையில் கொட்டி எல்லாம் சரியாயிற்று என்றுதான் சொல்லத்தோன்றும்.

அவருடைய அன்றைய பேச்சு எனக்குள் மிகப் பெரிய விழிப்பைக் கொடுத்தது. மனிதநேயம்தான் மிக முக்கியம். இதற்



குத்தான் எழுத்து. இதற்குத்தான் வாழ்க்கை என்று நான் முற்றிலும் மாறிப் போனேன். எனக்குள் ஒரு கல்புரண்டு உள்ளிருந்த சிநேகித நீர் கொப்பளித்து வந்தது. எழுத்து மட்டும் நல்ல திக்கில் பயணப்படவில்லை. என் வாழ்க்கையும் நல்ல திக்கில் பயணப்பட எழுத்தாளர் திரு.ஜெயகாந்தன் அவர்கள் காரணம். ஒரு தலைமுறையையே நல்ல விதமாக மாற்றியமைத்த அந்த எழுத்தாளருக்கு ஞானபீட பரிசு கிடைத்திருப்பது உன்னதம்தான்.

**சண்முகம், திருவண்ணாமலை.**

☐ **உங்கள் வீட்டிலிருந்த சிறிது நேரத்தில் உங்கள் துணைவியார் டேப் ரிகார்டரில் பாட்டு கேட்டுக் கொண்டிருப்பதை கவனித்தேன். அவரும் அந்தப் பாடலை பாடிக் கொண்டிருந்தார். இவை என்ன பாடல்.**

★ மயிலை கபாலி கோவிலைச் சேர்ந்த ஓதுவார் சற்குருநாதன் பாடிய தேவாரத் திருவாசகங்கள். சற்குருநாதன் அவர்களுக்கு இனிமையான குரல். நல்ல பாவத்தோடு பதிகங்கள் பாடுவார்கள். பதிவு செய்து தினமும் திரும்பத் திரும்ப போட்டுக் கேட்பது எங்கள் வீட்டாரின் வழக்கம். குறிப்பாய் என் துணைவி யாருக்கு மிகப் பெரிய பொழுதுபோக்கு. உழைக்க வேண்டிய காலங்களில் நன்கு உழைத்தாகி விட்டது. இது பாட்டுக் கேட்கின்ற காலம். கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

**குமார், திண்டுக்கல்.**

☐ **சினிமாவில் ஏன் ஒழுக்கக் கேடுகள் அதிகமாக இருக்கின்றன.**

★ சினிமாவில் மட்டுமா. எல்லாத் துறையிலும் ஒழுக்கக் கேடுகள் உண்டே. போலீஸில் இல்லையா. பொதுப் பணித் துறையில் இல்லையா. அரசியல்வாதிகளிடம் இல்லையா. உங்களுக்கு சினிமாக்காரர்களை எளிதாக அடையாளம் தெரிகிறது. எனவே, அவர்களே பத்திரிகையில் அதிகம் பலியாகிறார்கள். பத்திரிகைகள் செய்த கொடூரத்தை இப்பொழுது மீடியாக்கள் செய்து கொண்டி

ருக்கின்றன. ரகசிய கேமரா மூலம் விஷயங்கள் செய்தால் தான் டி.வி. சேனல் உயிர் வாழ முடியும் என்ற நிலை வந்தாலும் ஆச்சரியப் படுவதற்கில்லை. ரகசிய கேமராக்கள் வைப்பதையே டி.வி.சேனல் தங்கள் கொள்கையாக மாற்றிக் கொண்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. மீடியாக்கள் வேகமாக இதைப் பரப்ப இதெல்லாம் ஒன்றும் தவறேயில்லை என்ற ஒரு நிலை வரும். சினிமாக்களில் ஆட்டம் பாட்டங்கள் அதிகமானதும், அரைகுறை உடைகள் அதிகமானதும், மீடியாக்கள் தூண்டிவிட்டதால்தான். இன்னும் ஐந்து வருடத்தில் மீடியாக்கள் காம சூத்திரம் சொல்லித்தர முயற்சித்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. அப்போது பத்திரிகைகள் என்ன செய்யும் என்பது தான் கேள்விக்குறியாக இருக்கிறது.

---

**ராஜேஸ்வரி, உடுமலைப்பேட்டை.**

**☐ ஜெயலட்சுமி என்கிற அந்தப் பெண்ணை ஏன் இப்படி சித்ரவதை செய்கிறார்கள்.**

★ இந்த விஷயத்தில் உண்மை என்ன என்று கண்டுபிடிப்பதும், அதை வெளிக்கொணர்வதும் மிகவும் கடினம். அதிகார மமதை உள்ளவர்கள் கடைசி வரையில் உண்மையைச் சொல்லவே மாட்டார்கள். வெவ்வேறு விதமாய் திரித்துக்கூறத் தான் முயற்சி செய்வார்கள். காவல்துறை அதிகம் அதிகாரமுள்ளது. எனவே, என்ன உண்மையான விஷயம் என்பது ஒரு பொழுதும் வெளியே வராது. கால், அரைக்கால் வாசி வெளியே வந்தால் பெரிது. உண்மை வெளியே வந்து ஆக வேண்டியது என்ன. இம் மாதிரி விஷயங்கள் வெளியே வருவதால், தவறு செய்வதை கவனமாகச் செய்ய வேண்டும் என்ற எண்ணம்தான் வருமே தவிர, தவறே செய்யக்கூடாது என்றெல்லாம் எவரும் திருத்திக் கொள்ளப் போவதில்லை.

---

**சக்திவேல், சேலம்.**

**☐ இப்போது தமிழ்நாட்டு இளைஞர்கள் எப்படி இருக்கிறார்கள்.**

★ ஐந்து வருடம் முன்பு ஐந்தாயிரம் ரூபாய் சம்பளத்தில் கம்ப்யூட்டர் கம்பெனியில் இருந்த எம்.சி.ஏ. படித்த இளைஞன், படிப்பை முடிப்பதற்கு முன்பே வேலை கிடைத்து படிப்படியாக உயர்ந்து இப்பொழுது ஒரு லட்ச ரூபாய் சம்பளத்தில் அரபு தேசத்தில் புதிய மனைவியோடு மிக வசதியாக சுபிட்சமாய் வாழ்க்கையைத் துவக்கியிருக்கிறார். கடும் உழைப்பும், கெட்டிக்காரத்தனமுமே இதற்குக் காரணம். குறைவாகச் சாப்பிட்டு, குறைவாகத் தூங்கி, குறைவாகப் பேசி, காரியத்திலேயே கண்ணாக இருக்கின்ற இளைஞர்கள் விரைவாக ஜெயிக்கிறார்கள். அதிகம் உண்பவர்கள் அதிகம் தூங்குகிறார்கள். அதிகம் தூங்குகிறவர்கள் தான் ஜெயிக்காததற்கு காரணங்கள் அதிகம் பேசுகிறார்கள். இப்படிப்பட்ட இளைஞர்கள் பெற்றோருக்குச் சுமை, பெற்றோரின் பாபம். முப்பது வயதிலும் வெற்றிப் பாதையை நோக்கி ஒருவர் நடக்க முடியவில்லையெனில் எப்பொழுது தான் நடப்பார். வெற்றிக்காக முயற்சி இப்போது செய்யவில்லையெனில் வேறு எப்போது தான் செய்வார்.

---

**நடேசன், மும்பை.**

**☐ தமிழுக்காக போராட்டமும், போர்க்குரலும் தேவைதானா.**

★ நிச்சயம் தேவைதான். தமிழை தமிழர்கள் புரிந்து கொள்ள இம்மாதிரியான போர்க்குரல்களும், போராட்டங்களும் உதவும். அகநானூறு, புறநானூறு, பத்துப்பாட்டு, குறுந்தொகை, எட்டுத்தொகை போன்ற அற்புதமான விஷயங்களை தமிழர்கள் மனப்பாடம் செய்யவும், தேவார திருவாசகங்களை விடாது தினந்தோறும் படிக்கவும், தமிழ் அற்புதமாக விளையாடுகின்ற நாலாயிர திவ்யப்பிரபந்தங்களையும் நம் வீட்டுக்குழந்தைகள் மனனம் பண்ணி பாடவும், ஆடவும், தெருவெங்கும் திருக்குறள் ஒப்பிக்கும் போட்டி நடைபெறவும் அல்லது திருக்குறளை பிழையின்றி எழுதுபவருக்கே கல்லூரியில் இடம் என்று சட்டம் வரவும், தமிழைக் கொச்சையின்றிப் பேசவும், ஒவ்வொரு மாவட்டத்திற்கும், ஒவ்வொரு விதமாக இருக்கிற

தமிழ் முற்றிலும் நீங்கி ஒரு பொதுத்தமிழ் உருவாக வும் இம்மாதிரியான போராட்டங்களும், போர்க் குரல்களும் உதவி செய் யும் என்று நம்பலாம். தமிழ் மொழி பல்பேரைக் காப்பாற்றி நல்ல நிலை யில் உயர்த்தி வைத்திருக் கிறது. அது மறுபடியும் நடக்கும். தமிழ் வளமான மொழி. வற்றாத நதி. எல்லோருக்கும் வாரி வாரி நிச்சயம் கொடுக்கும்.

---

**ஜெயந்தன், பெங்களூர்.**

☐ **பெண்களிடையே உடுத்துதல் பற்றி ஒரு வெறியே இருக்கிறது. சமீப காலமாய் அது அதிகரித்து வருவதையும் பார்க்க முடிகிறது. இதற்கு என்ன காரணம்.**

★ பெண்களுக்கு சுதந் திரம் கூடுதலாகக் கிடைத் ததும், பொருளாதார மேம் பாடும் இதற்குக் காரணம். தனி மனித வருமானம் உயர்ந்து விட்டது. தரமான பொருட்களை மக்கள் விரும்ப ஆரம்பித்து விட் டார்கள். ஆடையில்லா மனிதன் அரை மனிதன் என்கிற வாசகம் மறைந்து போய், மனிதன் நன்கு உடுத்துகின்ற முழு மனித னாக மாறி, இன்னும் கவர்ச்சிகரமாக உடை உடுத்தி, மூன்றுபடி உயர மாகவே இப்போது நிற்கி றான். விஞ்ஞான வளர்ச்சி உடை தயாரிப்பில் உச்ச நிலைக்குப் போயிருக் கிறது. ஐம்பது வருடங் களுக்கு முன்னால் கை ராட்டினமே என்று பாடிக் கொண்டிருந்தோம். எழு பது வருடங்களுக்கு முன் னால் அன்னிய துணி கள் எரித்துக் கொண்டி ருந்தோம். இப்போது நிலைமை மாறிவிட்டது. அன்னியத் துணிகளுக்கு இணையாக இந்தியத் தயாரிப்புகள் இருக்கின் றன. அவைகள் ஏற்று மதியாகின்றன. வெறும் ரவிக்கைத்துணி விற்பவர் கூட நல்ல லாபம் சம்பாதிக் கின்ற நிலைமை உண் டாகி விட்டது. நானூறு ரூபாய் புடவையை முத லில் நூறு ரூபாய் கொடுத்து வாங்கி நான்கு மாதத்தில் நூறு ரூபாய் கட்டி தவணை முறையில் புடவை வாங்குவது உத்தி யோகஸ்தர்களுக்கு எளிதா கிறது. எங்கிட்ட நாப்பது புடவை இருக்கு. இது நாப்பத்தொண்ணு. இருக் கட்டுமே என்றுதான் தோன்றுகிறதே தவிர, போதும் என்ற எண்ணம் உடைகளில் வருவதே

யில்லை. பெண்கள் சுதந்திரம், மக்கள் வருவாய் என்று பல்வேறு விஷயங்கள் ஒன்று சேர்ந்து உடை விஷயத்தை ஒரு தூக்கு தூக்கிவிட்டன. இப்போது மேக்கப் சாமான்களுக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது என்று ஒரு வாரப் பத்திரிகையில் கட்டுரை எழுதியிருக்கிறார்கள். குறிப்பாய் லிப்ஸ்டிக் போடும் வழக்கம் மத்திய தர வர்க்கத்தினரிடையே வெகுவேகமாய் புழங்கும் என்றும், பவுடர் பூசுவது குறையும் என்றும், இரவு நேர க்ரீம், முகமலர்ச்சிக்கான, நிறம் கூட்டுவதற்கான அழகுப் பொருட்கள் அதிகம் விற்பனையாகும் என்றும் சொல்லப்படுகின்றன. ஸ்டிக்கர் பொட்டு சந்தடியின்றி உள்ளே நுழைந்தது போல க்ரீமும் உள்ளே நுழையும் என்கிறார்கள். சிகப்பழகு க்ரீம் பற்றி விளம்பரப்படுத்தாத பத்திரிகை இல்லை. விளம்பரமில்லாத சேனல்கள் இல்லை.

முன்பெல்லாம் பள்ளிக்கூட பெண்கள் பாட்டுப் பாடுவார்கள். 'கெட்ட பெண்மணி இவள் கெட்ட பெண்மணி எட்டரைக்கு எழுந்திருப்பாள் பெட் காபி குடித்திடுவாள். ப்ரஷ் ஷாலே பல் தேய்ப்பாள். சோப்பு போட்டு குளித்திடுவாள்' என்று பாடி தங் தங்கென்று ஆடுவார்கள்.

எல்லா நியதிகளும் வேறுவிதமாகப் போய் விட்டன. சரியா, தவறா என்ற பேச்சுக்கெல்லாம் இடமில்லை. தமிழ்நாட்டு கிராமங்களில் பனியனும், பேண்ட்டுமாய் பெண்கள் உலாவரப் போகும் காலங்களை நாம் நிச்சயம் எதிர் பார்க்கலாம்.

---

**ஈஸ்வரன், திருநெல்வேலி.**

**☐ பெட்ரோல் விலை ஏறிக்கொண்டே போகிறதே.**

★ எந்த அரசு வந்தாலும் பெட்ரோல் விலையையும், கனிமப் பொருட்களின் விலையையும், தங்கத்தின் விலையையும் ஒரு கட்டுக்குள் கொண்டு வர முடியாது. எப்பேர்ப்பட்ட பொருளாதார நிபுணர் வந்தாலும் அந்த நிபுணர்களுக்கு இந்த விஷயங்கள் பெப்பே காட்டி தன்னுடைய இஷ்டத்திற்கு நகர்ந்து கொண்டுதான் இருக்கும். இதெல்லாம் உலக வியாபாரம். இந்த விலை நிர்ணயங்கள் எல்லாம் வேறெங்கோ நடைபெறுபவை. இந்தியா போன்ற ஏழை நாடுகள் வெறுமே கையைக் கட்டிக்



கொண்டு அராபியர்களுக்கும். ஐரோப்பியர்களுக்கும் சலாம் வைத்துக் கொண்டிருக்க வேண்டுமே தவிர, எந்த விதமான கட்டுப்பாடும் கொண்டு வர இயலாது. பெட்ரோல் விலை ஏறினால், இரண்டு சக்கர வாகனங்கள் தயாரிப்பு சற்று சுணங்கும். ஆயிரத்தோரு ரூபாய் கொடுத்து ஒரு மோட்டார் சைக்கிளை எடுத்துக் கொண்டு போ என்று இப்போது கூவுகிறார்கள்.. இரண்டு மோட்டார் சைக்கிள் வாங்கினால் ஒரு ஸ்கூட்டர் இலவசம் என்று பிற்பாடு சொல்வார்கள். ஒரு இருசக்கர வாகனம் விற்றுக் காசாவதற்கு நான்கு மாதங்கள் ஆகின்றன என்று ஒரு வியாபாரக் குறிப்பு சொல்கிறது. அந்த நான்கு மாத வட்டியும் மறைமுகமாக அந்த வண்டியில் திணிக்கப்பட்டிருக்கிறது. பெட்ரோல் விலை உயர்ந்தால் என்ன. வாழ்க்கை மறுபடியும் சகஜமாகத் தொடரும்.

**கண்ணன், சென்னை.**

**☐ அடிக்கடி சுனாமி வந்து பயமுறுத்துகிறதே.. என்ன செய்வது.**

★ பயப்பட வேண்டாம் என்கிறார் என் நண்பரும், யதார்த்த ஜோதிடருமான திரு.ஷெல்வீ அவர்கள். அடிக்கடி சுனாமி பயமுறுத்தும். ஆனால் பாதிப்பு இருக்காது என்கிறார். தமிழ்நாட்டில் ஒரு வேளை ராமேஸ்வரத்தில் ஒரு சில பகுதிகள் பாதிக்கப்படலாம். ஆனால் வெகு நிச்சயம் தமிழ் நாட்டில் வேறு எங்கேயும், எதுவும் நிகழாது. இலங்கை கடுமையாக பாதிக்கப்படும். அதுமட்டுமில்லாது இந்தியாவில் மும்பை இயற்கை சீற்றத்தால், மிகக் குறிப்பாகப் பூகம்பத்தால் பாதிக்கப்படும். ஈவு இரக்கமற்ற பேராசைக்காரர்களும், உலோபிகளும், பெண்களை இழிவு படுத்துகிறவர்களும் மும்பையில் அதிகமாகி விட்டார்கள். இந்தியாவின் தலையெழுத்தை மாற்றக் கூடிய பெரும்புரட்டர்கள் அங்கு இருக்கிறார்கள் என்றும் சொல்கிறார். இதனாலேயே மும்பை ஒருமுறை குலுங்கி விழப்போகிறது. இரண்டாயிரத்து ஆண்டின் மிகப் பெரிய சோகமாக மும்பை நகரம் திகழும் என்றும் ஜோதிடர் ஷெல்வீ சொல்கிறார். தமிழ்நாட்டில் நல்ல மழை பெய்யும். பயிர் பச்சைகள் நன்கு விளையும். கோடை காலத்திலும்



மழை பெய்ய வாய்ப் புண்டு என்கிறார். எனவே சுனாமி பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். மும்பை இப்படிக் குலுங்கு வதற்குக் காரணம் என்ன என்பது பற்றியும் யதார்த்த ஜோதிடர் ஷெல்வீ விளக்குக்கிறார்.

மும்பை ஒரு மகா லக்ஷ்மி தேசம். அங்கு மகா லக்ஷ்மி வழிபாடு சரியாக இல்லாது, அவரவர் மதப் படி நடக்க வேண்டிய வழி பாடும் சரியாக இல்லாது, செல்வம் துஷ்பிரயோகம் செய்யப்படுகிறது. காசு தான் வாழ்க்கை என்பதும், கொடுமையான புத்தியும், கடுஞ்சொற்களும் அதிக மிருக்கின்றன. கடுஞ் சொற்கள் மகாலக்ஷ்மிக்கு எதிரானவை. எனவே தீது நடப்பது உறுதி என்கிறார். அவரவர் தெய்வ வழிபாட்டில் அமைதியாக ஈடு பட்டால் சேதம் குறைவாக இருக்குமாம்.

---

**எம்.அம்பிகாதேவி, சென்னை.**

**☐ இந்த மே பதினோராம் தேதி அட்சய திருதியை. அன்று தமிழ்நாட்டிலுள்ள எல்லா மக்களும் தங்கம் வாங்க வேண்டும், நகைகள் வாங்க வேண்டும், ஒரு கிராம் தங்கமாவது வாங்க வேண்டுமென்று பரபரக்கிறார்கள். அப்படியே வியாபாரிகளும் விளம்பரம் செய்கிறார்கள். இது நகை வாங்கும் நாளா. இல்லை, வியாபாரிகளின் விதம்விதமான தந்திரங்களில் ஒன்றா.**

★ இது வெறும் வியாபாரத் தந்திரம். அட்சய திருதியைக்கும், நகைக்கும் எந்த சம்மந்தமும் இல்லை. அக்காலத்தில் அரசர்கள் இந்த அட்சய திருதியையின் போது தங்களுடைய நெல் கொட்டாரங்களை சுத்தம் செய்து, தீபதூபம் காட்டி, மெழுகி, மூலிகைகளால் ஓரம் எழுதி, நெல் சேர்ப்பார்கள். அந்த நெல் ஆபத்து காலங்களில் ஜனங்களின் பொது வினியோகத்திற்காக பயன்படும். ஊர் மக்களுக்கு பரிசளிக்கவும் இந்த கிடங்கிலிருந்து நெல் எடுத்துக் கொடுப்பார்கள். அம்மாதிரியான கிடங்கு குறையாமல் நிறைவாக இருக்க வேண்டுமென் பதற்காக தானிய கொள் முதல் நாள்தான் அட்சய திருதியை.. நகை வாங்கு வதற்கும் இதற்கும் எந்த சம்மந்தமும் இல்லை எதை வாங்கினாலும் வ



ரம், என்பது அப்படியும். குறிப்பாக தங்கம் வாங்கு கிறீர்கள் அன்று உங்களுடைய நட்சத்திரம் என்ன. உங்களுக்கு அன்று விரய நட்சத்திரமாக இல்லாமல் இருக்கிறதா. அன்றைக்கு உங்களுடைய நட்சத்திரத்திற்கு சந்திராஷ்டமம் இல்லாமல் இருக்கிறதா என்று பார்த்துதான் வாங்க வேண்டும். அட்சய திருதியை அன்று நகை வாங்கினால், அது உங்களுக்கு விரய நட்சத்திரமாக இருந்தால், நீங்கள் என்ன தலைகீழாக கரணம் அடித்தாலும் உங்களுடைய பழைய நகைகள் அடமானத்திற்கு போகுமே தவிர, நகைகள் அதிகமாகாது. இருப்பு சேராது என்று தெள்ளத் தெளிவாக சொன்னவர் எனது நண்பரும், யதார்த்த ஜோடருமான திரு. ஷெல்வீ அவர்கள். இதைத்தவிர என்னுடைய இன்னொரு நண்பர் திரு.கோபாலகிருஷ்ணன் அவர்கள் அட்சய திருதியை அன்று தங்கம் வாங்குவதற்கான நாள் என்று மட்டும் கொள்ளக் கூடாது. அந்த நாள் வழங்குவதற்கான நாளும் கூட. அன்று அன்னதானம் செய்தால் மிக உன்னதமான பலன்கள் ஏற்படும். வீட்டில் சுபிட்சம் நிறையும், மங்களம் பெருகும். அமைதி ஏற்படும். பிரச்சினையிலிருந்து மீட்பு கிடைக்கும். அமைதி பெருகி இறை சிந்தனை அதிகரிக்கும். எனவே, வெகுநிச்சயமாய் அன்னதானம் செய்ய வேண்டிய நாள் வருடத்தில் அட்சய திருதியைத்தான் என்று அடித்துச் சொல்கிறார். அன்றைக்கு தங்கம் வாங்குவதை தவிட ஒரு மூன்று பொட்டலம் உணவு உண்மையிலேயே உழைக்க முடியாத வறியவருக்கு கொடுத்துப் பாருங்களேன்.

---

**சுந்தரேசன், கும்பகோணம்.**

**☐ விஞ்ஞானிகள் கடவுள் இல்லை என்று சொல்கிறார்களே.. இது நியாயமா.**

★ அது ஒரு கேலிக் கூத்து. தான் என்ற அகங்காரத்தின் உச்சகட்டம். பென்சிலின் கண்டு பிடித்த விஞ்ஞானியிடம் எய்ட்ஸ் என்ற நோய் இருக்கிறதென்றால், அப்படியா என்று தலையைச் சொறிவார். இருக்காதே என்பார். டெலிபோன் கண்டு பிடித்தவரிடம் கம்பியில்லாத் தந்தி பற்றியும், சேட்டிலைட் பற்றியும் சொன்னால் இதெல்லாம் சாத்தியமே இல்லை என்றும் அப்போது சொல்

லியிருக்கக்கூடும். உலகம் உருண்டை என்று சொன்னவரிடம் சந்திரனில் கால் பதிப்போம் என்று சொன்னால் வாய்விட்டுச் சிரித்திருப்பார். மனிதர்கள் தேடித் தேடி கண்டுபிடித்து அதற்குப் பிறகு இது, இதற்குப் பிறகு அது என்று படிப் படியாய் முன்னேறிக் கொண்டிருக்கிறார்கள். தேடியதன் விளைவு இன்றைய வளர்ச்சி. தேடாத தன் விளைவு நாத்திகம். கடவுள் என்பது வெங்காய பஜ்ஜியோ, உருளைக் கிழங்கு போண்டாவோ அல்ல. அதுவொரு வஸ்து அல்ல. அது ஒரு மனிதரல்ல. கடவுள் சார்பாக ஏற்பட்ட மதக் கற்பனைகளை வைத்துக் கொண்டு கடவுள் தேடக்கூடாது. அதை ஏற்கவும் செய்யாது, புறக்கணிக்கவும் செய்யாத ஒரு நிலையில் இந்தத் தேடல் ஆரம்பிக்கிறது. அது ஒரு தனித்த சிந்தனை. தனி வழி. கடவுள் எங்கும் வெளியில் இல்லை. அதன் இருப்பை ஒவ்வொரு மனிதனும் தனக்கு உள்ளுக்குள்ளே உணரலாம். அது தனி மன மாற்றம். புத்தியின் எல்லாச் செயல்களையும் நிறுத்தி விட்டுப் பார்க்கும் போது ஏற்படுகின்ற திகைப்புணர்ச்சி. எங்கு தேடியும் கடவுள் இல்லையென்று எவர் பேசினாலும், எழுதினாலும் அவர் பொய்யர். தேடவில்லை என்பது தான் அதன் அர்த்தம். தேடாது பிதற்றுகிறார் என்பதுதான் அதன் பொருள். கடற்பாசியிலிருந்து உயிரினங்கள் தோன்றின என்று விஞ்ஞானம் சொல்கிறது. கடற்பாசி எங்கிருந்து தோன்றியது. பிரபஞ்சத்தின் தோற்றம் எப்போது. பூமியில் இத்தனை கிரகங்களும் இத்தனைச் சீராகச் சுழல்வது எதனால். இங்கே புரிந்து கொள்ளுதல் தவறாகப் போகிறது. இந்தப் பிரபஞ்சம் இயங்குவது. எவரால் என்று கேட்கப்படின் அவர் என்பது ஒரு ஆணுக்குப் போய் விழுந்து விடுகிறது. மீசை வைத்த, தாடி வைத்த, கிரீடம் வைத்த மனிதரை மனம் உருவகப் படுத்திக் கொள்கிறது. கடவுள் என்பது மனித ரூபம் அல்ல. எந்த உருவமும் அதற்கு இல்லை. அது ஒரு அசைவு. ஒரு சலனம். சக்தி. ஆட்டம். பிரபஞ்சத்தில் சலனம் இல்லையென்று விஞ்ஞானி சொல்கிறாரா. சலனத்தின் மூலத்தை விசாரிக்கிற போது கடவுள் என்ற விஷயம் புரிபட்டுவிடும். அது பெரிதினும் பெரிதான விஷயம். பேசி மாளாத சமாச்சாரம். ●

# எனது ஆன்மீக அனுபவங்கள்



## பாலகுமாரன்

# பூஜை

இன்னிக்கு என்ன விசேஷம். இவ்ளோ நேரம் பூஜை.

என் வீட்டிற்கு வந்திருந்த என் நெருங்கிய உறவுக்காரர் கேட்டார்.

அவர் கேள்வி எனக்கு ஆச்சரியமாக இருந்தது. சற்று நேரம் திகைப்பில் இருந்து விட்டு பிறகு மெல்ல இது தினந்தோறும் நடக்கின்ற பூஜைதான். எந்த விசேஷமும் இல்லை என்று சொன்னேன். இப்பொழுது திகைப்பு அவர் பக்கம் போய்விட்டது. அவர் முகத்தில் ஒட்டிக் கொண்டு விட்டது.

"தினமுமா. ஒண்ணேகால் மணி நேரமா. இத்தனை பூ, இத்தனை சாமான்களோடயா" என்று அவர் கேட்க, "நான் ஆமாம்" என்று தலையசைத்தேன்.

"இந்த மாதிரி பூஜை பண்றேன்னு ஏதேனும் வேண்டுதலா?

அவர் மறுபடியும் சற்று தயக்கத்திற்குப் பிறகு கேட்டார். நான் "அப்படி ஏதும் இல்லை" என்று சொன்னேன்.

"உங்க குருநாதர் யோகிராம்சுரத்குமார் சொன்னாரோ. இப்படி பூஜை பண்ணணும்னு."

"இல்லை, அவரும் சொல்லவில்லை. ஏனெனில் அவர் பூஜை செய்வதில்லை. யாரையும் இந்த பூஜை செய், அந்த பூஜை செய் என்று சொல்லுகிற வழக்கமும் அவரிடம் இல்லை, தொடந்து ராமநாமம் சொல்லும்படிதான் கேட்டுக்கொள்வாரே தவிர, பூஜை புனஸ்க்காரங்கள் பற்றி அவர் வற்புறுத்துவதேயில்லை."

"யார் சொல்லி, எதுக்காக இந்த பூஜை" அவர் விடாப்பிடியாக் கேட்டார்.

"நானாக நினைத்துக் கொண்டு செய்கிற பூஜைதான். இதுவொரு பயிற்சி, இது மன ஒருமைக்கான பயிற்சி" என்று சொன்னேன்.

அவர் சற்றுநேரம் யோசித்துவிட்டு "இரண்டு மணிநேரம் துணி துவைக்கலாமே. அதுவும் மன ஒருமைக்கான பயிற்சி ஆகுமே" என்று சொன்னார்.

அவர் முகத்தில் ஒரு சிரிப்பு இருந்தது. மன ஒருமைக்காக பூஜை செய்யும் பட்சத்தில், மன ஒருமைக்காக துணி துவைக்கலாமே, மன ஒருமைக்கான பயிற்சிதான் பூஜை எனில், அந்தப் பயிற்சியை துணி

துவைப்பதால் செய்யலாமே. துணி துவைப்பது போலவும் ஆகும். மன ஒருமைக்கான பயிற்சியைச் செய்தது போலவும் ஆகும் என்று கேலியாகச் சொன்னார்.

நானும் சிரித்தேன்.

துணி துவைப்பதை மன ஒருமையோடு செய்ய முடியுமெனில் தாராளமாகச் செய்யலாம். துணி துவைப்பது மட்டுமல்ல, சவரம் செய்வது, சாப்பிடுவது, வீடு பெருக்குவது, அலுவலகத்தில் வேலையைச் செய்வது போன்ற எல்லாவற்றையும், மன ஒருமையோடு செய்ய முடியுமெனில் அவைகளெல்லாம் பூஜைகள் போலவே உண்டான விஷயங்கள் என்று சொன்னேன்.

அவருக்குப் புரியவில்லை. ஏனெனில் அவருக்குப் புரிந்து கொள்ளும் ஆர்வம் இல்லை. இதுவொரு அபத்தமான விஷயம். இதை நான் செய்வதைவிட வேறு ஏதேனும் செய்யலாம் என்று பூஜையை அவர் மனம் கேலி செய்யத்துவங்கிவிட்டது. புறக்கணித்துவிட்டது.

அவர் ஒரு நிலை எடுத்துக்கொண்டு விட்டார். தன்னைப் பூஜை செய்தற்கு எதிரானவனாக தீர்மானித்துக் கொண்டுவிட்டார். எனவே, பூஜை செய்வது என்றால் என்ன என்பதை அவருக்கு எவ்வளவு விளக்கிச் சொன்னாலும் புரியாது.

ஜப்பானில் தேனீர் விருந்து என்று ஒன்று ஏற்பாடு செய்வார்கள். அதுவொரு மதச் சடங்கு. ஜப்பானிய கலாச்சாரம். வழிவழியாக வந்த சம்பிரதாயம்.

ஒரு விசாலமான அறையில் காற்றோட்டமான நிலையில் வசதியாக அமர்ந்து கொண்டு இருபுறமும் கையெட்டும் தூரத்தில் மனிதர்கள், உட்கார்ந்திருக்க ஒருவருக்கொருவர் முகமன் கூறி, நலம் விசாரித்து, விடியற்காலை எவ்வளவு அழகாக இருந்தது என்றோ, சூர்யோதயம் பற்றியோ அல்லது தென்றல் வீசுவது பற்றியோ அல்லது பனிப்பொழிவு பற்றியோ பேசிய பிறகு அந்தத் தேனீர் விருந்துக்குண்டான சிறு கிண்ணங்களை அங்கங்கே நிறுத்தி தேனீர் ஊற்றி எடுத்துக் கொள்ளுங்கள் என்று மறுபடியும் சிரம்தாழ்ந்து பணிந்து கேட்டுக் கொண்டு அவர்கள் குடிக்கும் போது அவர்களுடைய முகபாவத்தையே பார்த்து மறுபடியும் தேனீர் ஊற்றி என்று ஒருமணிநேரம் தேனீர் விருந்து நடைபெறும்.

மிகக் குறைவாக, ஆனால் தேர்ந்தெடுத்த

வார்த்தைகளைச் சொல்லி விருந்தினரை சந்தோஷப் படுத்தி, அந்தத் தேனீர் விருந்து குடித்து முடித்ததும் மிகப்பெரிய செயல் ஒன்றை செய்தது போல ஒரு நிறைவும், நிம்மதியும் ஆனந்தமும் ஏற்படும்.

விருந்து கொடுத்தவரிடமும், விருந்தில் கலந்து கொண்டவரிடமும் மிகப்பெரிய அன்னியோன்யம் நிலவும். பாசப்பிணைப்பு அதிகரிக்கும். உற்று கவனித்தால் இந்து மதத்தில் செய்யபடுகின்ற இந்தப் பூஜைகளும் அந்த ஜப்பானிய தேனீர் விருந்து போல ஒரு நிம்மதியையும், ஆனந்தத்தையும் தரவல்லது.

பஞ்சலோக வினாயகர் சிலையை உச்சிஷ்ட கணபதியாக்க வரித்து, இந்த பூஜை விக்னமின்றி நடக்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டு, நான் சைவமரபு என்பதால் ஒரு சிவலிங்கத்தை வைத்து, பிறகு உடல் ஆரோக்கியத்திற்காக ஸ்படிக சூரியன் வைத்து, சக்தி வழிபாடு செய்வதால், அந்த மந்திரங்கள் பலரும் சுற்றியிருப்பதால் ஸ்படிகத்திலேயே மேருவை வைத்து, பிறகு தாமிரத்தகட்டில் எழுதிய ஸ்ரீ சக்கரத்தை வீட்டின் நலனுக்காகவும், செல்வச் செழிப்பிற்காகவும் வைத்து, ஒரு விஷ்ணு துர்க்கைச் சில்லை எனக்குப் பிடித்த மூகாம்பிகை சிலையாக வரித்து இந்த விக்ரஹங்களுக்கு வாசனைத் திரவியத்தாலும், பாலாலும், கங்கை ஜலத்தாலும் தினசரி பூஜை செய்வது வழக்கம்.

அபிஷேகம் முடித்த பிறகு மெல்ல பருத்தித் துணியால் ஈரம் போகத் துடைத்துவிட்டு, சந்தனக் குங்குமம் அலங்கார செய்து பட்டுத்துணிகள் விரித்த ஆசனத்தில் அமர்த்தி மூலமந்திர ஜபம் சொல்லிப் புஷ்பங்கள் சார்த்தி, அர்ச்சனை செய்து கஸ்தூரி மஞ்சளும், குங்குமமும் விரல் நுனியில் மணக்க, உள்ளங்கையில் சந்தனம் கமகமக்க, வீடு முழுவதும் ஊதுவத்தியின் நறுமண வாசனை பரவ உதடு பிரியாமல் மந்திரஜபம் செய்வது தினசரி வழக்கம். இப்படி அந்த பூஜையில் மட்டுமே மனம் லயித்திருக்கும்.

விக்ரஹங்களை எடுப்பதும், வைப்பதும் அதற்கு விதம்விதமான நீரால் அபிஷேகம் செய்வதும் முழுமனத்தோடு ஒன்றி செய்யப்படும். வேறு ஏதேனும் காரணங்களால் உடல்நிலையில் சின்ன ஊசலாட்டம் இருப்பினும் அந்த ஊசலாட்டத்தைத் தாண்டி மனம் மெல்ல அந்த பூஜையில் ஒருமுகப்படும். அப்படிப் பூஜை செய்துவிட்டு எழுந்திருக்கும் போது கண் இமைப்பையில் அமைதியும், நெஞ்சில் ஒரு நிம்மதியும்,

புத்தியில் ஒரு குளுமையும், வெகுதிடமாய் பரவியிருப்பதை நான் உணர்ந்திருக்கிறேன். இந்த பூஜையின் சந்துஷ்டி அந்த நாள் முழுவதும் பரவியிருக்கும். விசேஷ நாட்களில் பூஜை நேரம் கூடும். ஜபம் செய்வது அதிகரிக்கும்.

ஜப்பானியத் தேனீர் விருந்தை மிகப்பெரிய கலாச்சாரமென்றும், அற்புதமான சடங்கு என்றும் விவரித்துக் கூறுகின்ற இந்திய ஐரோப்பிய ஆராய்ச்சி யாளர்கள் இந்துமதம் சொல்கிற இந்த தினசரி பூஜையைப் பற்றி ஏதும் தெரியாதவர்களாக இருக்கிறார்கள்.

பூஜைகள் இப்படித்தான் செய்ய வேண்டும் என்று விதிமுறை உண்டா.

உண்டு. அந்த விதிமுறையின்படியும் செய்யலாம். உங்கள் மனம் என்ன கட்டளையிடுகிறதோ அதுபடியும் செய்யலாம். ஒரேயொரு விஷயம். பூஜையை முழுமனதாய் வேறு எந்த சிந்தனையும் இல்லாமல் பூஜையை மட்டுமே செய்கின்ற ஒரு தெளிவோடு இருப்பதுதான் நல்லது.

இந்தப் பழக்கம் பலப்பட பலப்பட நீங்கள் எந்த வேலை செய்தாலும் அது சமையல் வேலையாக இருந்தாலும் அல்லது அலுவலக வேலையாக இருந்தாலும் அல்லது வீட்டைச் சுத்தம் செய்வதாக இருந்தாலும் முழு மனதாய் மிகத் தெளிவாய்ச் செய்யலாம்.

முழு மனதாய்ச் செய்கின்ற வேலைகள் மிகச் சுத்தமாக இருக்கும். வேலையில் சுத்தமாக இருப்பவர்கள் மனது அமைதியாக இருக்கும். மனது அமைதியாக இருப்பவர்கள் அடுத்தவரோடு பேசுவதிலும், பழகுவதிலும், புரிந்து கொள்வதிலும் தெளிவாக இருப்பார்கள். எனவே, பூஜை என்பது ஒரு நல்ல பயிற்சி. வாழ்வியல் வெற்றிகளைக் கொண்டு வந்து கொடுக்கின்ற பயிற்சி.

முழுமனதாய் பூஜை செய்ய நீங்களும் பழகலாம்.

## விரத மகிமை

இந்தக் கார்த்திகை-மார்கழி மாதத்தில் தமிழ் நாட்டில், விரதமிருப்பது என்பது தொன்றுதொட்டு செய்துவரும் பழக்கமாக இருக்கிறது. இப்பழக்கம் சமீப

காலங்களில் பல்கிப் பெருகி லட்சக்கணக்கில் மக்கள் விரதமிருப்பதில் விருப்பம் கொண்டு. 'நான் விரதமிருக்கிறேன்' என்று அறிவிப்பதற்கான உடைகள் உடுத்துச் சின்னங்கள் அணிந்து கம்பீரமாக வலம் வருகின்றார்கள். விடிகாலையிலும், பின் மாலையிலும் இம்மாதிரி விரதமிருப்பவர்கள் கும்பல் கும்பலாக கோவில்களுக்குப் போயும், பூஜைகளுக்குப் போயும் இறைவழிபாட்டில் ஈடுபடுகிறார்கள்.

கும்பல் கும்பலாக செல்வதாலேயோ, குறுகிய காலத்தில் மட்டுமே விரதத்தில் ஈடுபடுவதாலேயோ, விரதத்தினுடைய ஆழம், இந்த விரதத்தால் ஏற்படுகின்ற அமைதி ஜனங்களுக்கு வருவதேயில்லை. எனவே, இந்த விரதம் பற்றி உரத்த குரலில் சிந்திக்க வேண்டியிருக்கிறது.

விரதம் பற்றிப் புராணங்களில் ஏதாவது சொல்லப் பட்டிருக்கின்றதா.

கிருஷ்ணருடைய கதையில் சொல்லப்பட்டிருக் கிறது. கிருஷ்ணருடைய தங்கை அர்ஜுனனைத் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்று நினைத்து மனம் வருந்தி, அதனால் உடல்நலம் சீர்குலைந்த போது, யாதவ குலமே வேதனைப்பட்டது. ஊர் மக்கள் எல்லோரும் அந்தப் பெண் குழந்தை நல்லபடி உடல்நலம் தேறி, நல்ல இடத்தில் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்று விரதமிருந்தார்கள்.

கிருஷ்ணரும் விரதமிருந்ததாக கிருஷ்ணருடைய கதை சொல்கிறது. அதாவது அரசருக்காக, ஆள்பவரின் நலனுக்காக யாருமே அழைக்காமல், அறைகூவாமல் மனமுவந்து ஊரே விரதத்தில் ஈடுபட்டிருக்கிறது. விரதத்தின் பலனாக, கிருஷ்ணருடைய தங்கை உடல் நலம் தேறி அர்ஜுனனைக் கைப்பிடித்தாள் என்றும் கதை சொல்கிறது. அதாவது விரதம் பலிதம் ஆகியது. விரதம் இருப்பதைப் பற்றி ஆண்டாளும் சொல்கிறார்.

"நெய் உண்ணோம், பால் உண்ணோம்,
நாட்காலே நீராடி
மையிட்டு நாம் எழுதோம்,
மலரிட்டு நாம் முடியோம்
செய்யாதன செய்யோம்,
தீக்குறளைச் சென்றோதோம்"

என்று தொடர்கிறார்.

போஷாக்கான உணவுகளைத் தவிர்த்து

விடுவோம். விடியற்காலையில் எழுந்திருப்போம். நீராடுவோம். இறை வழிபாடு செய்வோம். கண்களுக்கு மையெழுதியோ, தலைக்கு மலர் சூட்டியோ எங்களை அலங்கரித்துக் கொள்ள மாட்டோம். செய்யக் கூடாதவைகளை வெகு நிச்சயமாகச் செய்ய மாட்டோம். ஒருபொழுதும் தவறான வார்த்தைகளை உச்சரிக்க மாட்டோம் என்று திட்டவட்டமாக அறிவிக்கிறார். அப்பொழுது தான் உய்ய முடியும், உருப்பட முடியும் என்றும் பேசுகிறார்.

விரதமிருப்போர் செய்ய வேண்டிய முறையை வெகு எளிதாக ஆண்டாள் சிற்சில வார்த்தைகளில் சொல்லி விடுகிறார்.

விரதமிருப்பவர் முதலில் உணவு பற்றிய தெளிவோடு இருக்க வேண்டும். உணவுக்கும் மனதிற்கும் சம்மந்தம் உண்டு.

கொழுப்புச் சத்து மிக்க உணவுகளை உண்போமானால் மனதில் கோபமும், காம எண்ணங்களும் தலைதூக்கும். எனவே, மனம் அலையாதிருக்க உடம்பின் வலுவை சற்றுக் குறைக்க வேண்டும். கொழுப்புப் பொருட்கள், காரம், மணம், மசாலா போன்ற விஷயங்களை அதிகம் தூக்கலாக செய்யப்படும் உணவுகளை தவிர்த்து விட்டு, நடமாடுவதற்கு மட்டும் தெம்புவரக்கூடிய சாத்வீகமான உணவையே சாப்பிட வேண்டும். சைவ உணவு தான் சாப்பிட வேண்டும். அதையும் குறைவாகச் சாப்பிட வேண்டும்.

வயிறு முட்ட தின்பவருக்குக் களைப்பும் தூக்கமும் ஏற்படும். ஏனெனில் தின்று தூங்கியவருக்கு உடம்பில் மதமதப்பு அதிகமாகும். அப்படி மதமதப்பு அதிகமானால் பெரும் குரலும், பெரும் சிரிப்பும், அட்டகாசமான நடவடிக்கைகளும் உள்ளுக்குள் கிளறும். அது விரதமிருப்பதன் அடையாளம் அல்ல.

விடியற்காலையில் குளித்தல் என்பது உடம்பைக் குளிரச் செய்யும் விஷயம். உடம்பு குளுமை அடைந்தால், புத்தி இன்னும் அதிகமாக குளுமை அடையும். புத்தியில் அமைதி படரின், சிந்தனையில் தெளிவு உண்டாகும். இறைவழிபாட்டில் மனம் ஒருமித்து கூடும்.

இறைவழிபாட்டில் மனம் ஒருமித்துக் கூடுவது என்பது சாதாரணமான விஷயம் அல்ல. செய்யும் தொழிலில், பேச்சில், வாழ்க்கை யுத்தத்தில் மனம்

ஒருமைப்பட இறைவழிபாட்டு ஒருமை நிச்சயம் உதவும்.

நன்கு ஒருமைப்பட்டவருக்குக் கோபமோ, ஆத்திரமோ, பொறாமையோ இருக்காது. மாறாய் அம்மாதிரி உணர்ச்சிகள் எழும்போது அவற்றை மெல்லப் பிரித்துப் பின்னுக்கு ஒதுக்கிவிட்டு, எதனால் இவை ஏற்படுகின்றன என்று ஆராயும் மனப்பக்குவமும் வந்து, அது ஏற்படாதிருப்பதற்கு என்ன செய்ய வேண்டும் என்ற யோசனையும் ஏற்பட்டு, அதைச் செயல்படுத்தக்கூடிய திறமையும் அவர்களுக்கு வந்துவிடும்.

சூரியன் உதிப்பதற்கு முன்பு எழுந்து விடுபவர்கள் தான் வாழ்க்கைப் போராட்டத்தில் நிச்சயமாகவும், எளிதாகவும் ஜெயிக்கிறார்கள். விடியலில் எழுந்திருக்கும் போது பேச்சிலும், செயலிலும் மிகப் பெரிய மாறுதல்கள் ஏற்படுகின்றன. ஆனால் இதையும் தாண்டி மனித மனத்தைத் தொந்தரவு செய்வதற்கு இன்னொரு விஷயமும் இருக்கிறது. அது தான் தன்னுடைய தோற்றம் பற்றிய கர்வம்.

தன்னை அலங்கரித்துக் கொள்ளுதல். தன்னை மிக முக்கியமானவனாகக் காட்டுதல், ஆடைகளில் கவனம் செலுத்துதல். இவை இரண்டும் இருப்பின் அந்த தோற்றப் பொலிவு, அபரிமிதமான கர்வத்தை ஒரு மனிதருக்குத் தரக்கூடும். தான் அழகாகவும், கம்பீரமாகவும் இருக்கிறோம். தன்னுடைய தோற்றத்தை எல்லோரும் உற்றுப் பார்க்கிறார்கள் என்று ஒருவர் மனதில் தோன்றி விட்டால், தன்னுடைய புத்தி பின்னடைந்து தோற்றத்தை முன்நிறுத்துவதே முதன்மையான வேலையாகப் போய் விடும்.

உடை ஒரு மாயச் சூழல். உள்ளத்தை மறைக்கின்ற வித்தை. உண்மையான அழகை விட, உண்மையான கம்பீரத்தைவிட, அதிகப்படுத்திக் காட்டுகின்ற ஒரு ஏமாற்று வேலை. குறிப்பாய் பெண்கள், இந்த மாய வலைக்குள் சிக்கித் தோற்றத்தைப் பற்றி அதிக கவலை கொண்டு மற்றவர்கள் தன்னை எவ்விதம் பார்க்கிறார்கள் என்பதையே சிந்தித்துத் தன்னைத் தான் பார்க்க முடியாத நிலைக்குத் தள்ளப்பட்டு விடுகிறார்கள்.

மானம் மறைக்கத்தான் உடைகள் என்பது விரதத்தில் இருப்பவருக்கு நன்கு புலனாக வேண்டும். அழகான உடைகள் உடுத்தினால் எங்கும் உட்கார

முடியாது. எங்கும் நடக்க முடியாது. எனவே, விரதத்தில் இருப்பவர்கள் அவ்விதம் இல்லாமல் எளிமைக்கு எளிமையாய், எங்கு வேண்டுமானாலும் அமர்ந்து கொள்ளும் வசதியாய் மண்ணோ, மரத்தடியோ, கருங்கல்லோ, கட்டாந்தரையோ எங்கும் சுருண்டு படுக்கும் விதமாய் மெல்லிய கருப்பு ஆடை அணிந்திருப்பார்கள்.

இதையெல்லாம் விட முக்கியமானது என்ன என்று ஆண்டாள் சொல்கிறார் தெரியுமா.

'செய்யாதன செய்யோம்'

விரதத்தில் இருக்கும்போது என்ன செய்யக் கூடாதோ அதைச் செய்ய மாட்டோம் என்று உறுதி கூறுகின்றார்.

என்ன செய்யக்கூடாது.

ஒரு மோட்டர் சைக்கிளில் மூன்று இளைஞர்கள் உட்கார்ந்து கொண்டு, மூன்று பேரும் கருப்பு ஆடை அணிந்து கொண்டு, ஐயப்பன் மாலை போட்டுக் கொண்டு, 'சாமியே சரணம் ஐயப்பா' என்று உரக்கக் கத்திக் கொண்டு, ஒரு தெருவில் முன்னும் பின்னும் வேகமாக மோட்டர் சைக்கிளில் போகிறார்கள்.

'இன்னிக்கு சாயந்தரத்தில மட்டும் பத்து பூஜையில் கலந்துக்கணும்ப்பா' என்று இடுப்பில் கை வைத்து டீக்கடை வாசலில் உரத்த குரலில் பேசுகிறார்கள்.

அந்த இளைஞர்களுக்கு தெரியவில்லை இந்த விஷயங்கள் செய்யக் கூடாதவைகள் என்று புரியவில்லை.

ஆண்டாள் கடைசியாக சொல்கின்ற வார்த்தை இன்னும் மிக முக்கியமானது.

'தீக்குறளைச் சென்றோதோம்'

மனம் தெளிவாக இருந்தால், சொல் தெளிவாக இருக்கும். மனம் இலேசாக இருந்தால் சொற்கள் மிருதுவாக இருக்கும். மனம் இறுக்கமாக இருப்பின் வன்முறையான சொற்கள் வாயிலிருந்து வெளியே வந்துவிடும். உங்களுடைய பேச்சு சொல்லிவிடும் உங்கள் விரதத்தின் லட்சியத்தை. உங்கள் சிரிப்பு சொல்லிவிடும் நீங்கள் விரதம் எப்படி இருக்கின்றீர்கள் என்பதை, அட்டகாசமான சிரிப்பும், ஆரவாரமான பேச்சும் நீங்கள் விரதம் என்பதில் சிறிதளவு கூட ஈடுபடவில்லை என்பதை வெளிப்படுத்துகின்றன.

நல்லபடியாய் விரதமிருப்பது எப்படி. அதன் லாபம் என்ன.

விடியற்காலை குளியல், எளிமையான உடைகள், குறைவான, சாத்வீகமான உணவு, அமைதியான பேச்சு, பல நேரங்களில் மௌனம். மௌனம் இருப்பதற்கு ஏற்றதாக உள்ளுக்குள் எப்பொழுதும் இறைவன் நாமாவளி, அவன் பெயரையே திரும்பத் திரும்பச் சொல்லுதல். பூஜைகளில் கலந்து கொண்டு சிறிய வேலைகளைச் செய்தல் அல்லது ஒரு ஓரமாக அமைதியாக இருந்து பூஜையைப் பார்த்தால். மன சஞ்சலம் இல்லாத உடம்பு, அமைதியான தூக்கம், மறுபடி விடியற்காலையில் எழுந்து மீண்டும் குளுமையான குளியல்.

இது என்ன லாபம் தரும். இந்தக் குளியலும் குறைவான உணவும், உடம்பைச் சூடு ஏறாமல் குளுமையாக வைத்திருக்கும். கருப்பு மெல்லிய உடைகள் உங்களைக் கர்வம் கொள்ளாமல் வைத்திருக்கும். நெற்றியில் விபூதி தவிர எந்த பூச்சும் இல்லாமல் காட்சி தரும்போது மனதில் அமைதி பலப்படும்.

அந்த அமைதியோடு பூஜை புனஸ்காரங்களில் கலந்து கொள்ள நேர்ந்தால், மௌன விரதம் மேற் கொண்டால், நீங்கள் உங்கள் மனதைக் கவனிப்பதற்கு வாய்ப்பு ஏற்படும்.

ஏதோ ஒரு கணத்தில் உங்கள் புத்தியும் மனதும் ஒரு லயத்தில் வந்து நிற்கும். அதாவது புத்தி கூர்மையாகி மனதில் என்ன எண்ணங்கள் போய்க் கொண்டிருக்கின்றன. என்ன விதமான மனிதனாக நான் இருக்கிறேன் என்று உங்களை எடைபோட ஆரம்பித்து விடும். இன்னும் ஆழமாகப் போய் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறேன். எதைப் பற்றி ஏன் நினைத்துக் கொண்டிருக்கின்றேன் என்கிற இடத்திற்கு அழைத்துப் போகும். இன்னதை நினைக்கிற ஆள் யார் என்று அடுத்த கட்டத்திற்கு மனம் நகரும். இந்த 'நான்' என்பது எது என்பதை யோசிக்க ஆரம்பிக்கும்.

எனவே, ஏதோ ஒரு மையத்தில் இருந்து தான் இந்த எண்ணங்கள் கிளம்புகின்றன. எழுந்த இடத்திலேயே எண்ணங்களை உற்றுக் கவனிக்க ஆரம்பித்தால், நம்முடைய செயல்பாட்டினுடைய உத்தேசம் புரிந்து விடும்.

இவைகள் விரதத்தால் ஏற்பட்ட மகிமை. மாறாக விரத காலங்களிலும் ஆரவாரம் செய்தீர்கள் என்றால், விரத உடையையும் அலங்காரம் என்று நினைத்தீர்கள்

என்றால், விரதத்தோடு நடை பெறும் பூஜையை வெறும் கொண்டாட்டமாக நினைத்தீர்கள் என்றால், வாழ்க்கை மிகப் பெரிய சிக்கலாகி, பரபரப்புகளில் மனம் சிக்கி, சின்ன தோல்விகளுக்கு மிரண்டு போய், சிறிய வெற்றிகளுக்கு அலட்டுதல் ஏற்பட்டு, மற்றவரோடு பிரிவினையும், தடித்த பேச்சுவார்த்தைகளும், மன முறிவுகளும் ஏற்படும்.

வாழ்க்கை என்பது தொடர்பு கொள்ளுதல். மற்றவரோடு தொடர்பு கொள்ளுதல்.

ஒரு மனிதன் தன் குடும்பத்தாரோடே நல்ல தொடர்பு வைத்துக் கொள்ள முடியவில்லையெனில் வேறு யாரோடு என்னவிதமான தொடர்பு வைத்துக் கொள்ள முடியும்.

தன் குடும்பத்தாரையே வசீகரிக்க முடியவில்லை யெனில் வேறு யாரை வசீகரித்து என்ன பயன்.

கூடி வாழ்தல் கோடி நன்மை
கூடி வாழத்தான் விரத மகிமை.

## இறை தரிசனம்

உலகில் அனேகம் பேர் இறை தரிசனத்தை அடைந்திருக்கிறார்கள். அடைந்து கொண்டும் இருக்கிறார்கள். என் குருநாதர் திருவண்ணாமலை மகான் கடவுளின் குழந்தை அடியார்க்கு நல்லான் யோகி ராம்சுரத்குமார் அவர்களால் எனக்குக் கொடுக்கப்பட்ட இறை தரிசனத்தை உங்களோடு பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன்.

அது நல்ல பகல் நேரம். கடுமையான வெய்யிலும் இல்லாமல் அதிகமான குளிரும் இல்லாமல் தட்ப வெப்ப நிலை மிதமாக இருந்த நேரம். நான் திருவண்ணாமலை சன்னதித் தெருவில் யோகிராம்சுரத்குமாருக்கு அருகே அவருடைய பாயின் ஒரு முனையில் உட்கார்ந்திருக்க மறுமுனையில் அவர் அமர்ந்திருந்தார். என் தோளில் கை வைத்தபடி "பாலகுமார், நீ என்ன எழுதுகிறாய்." என்று கேட்டார். நான் பதில் சொன்னேன் "கதைகள் எழுதுகிறேன்".

"எதைப்பற்றி."

"வாழ்க்கையைப் பற்றி. ஆண்-பெண் உறவுகளின் நடுவே இருக்கிற பனிக்கட்டிகளை உடைப்பதே என் கதைகளின் லட்சியமாக இருக்கிறது. நல்ல ஆண்-

பெண் உறவுதான் நல்ல குழந்தைகளைக் கொடுக்கும். நல்ல குழந்தைகள்தான் எதிர்காலத்தில் நல்ல பிரஜைகளாவார்கள். பிரச்சினையைத் தீர்ப்பார்கள்." என்று சொன்னேன்.

"ஆண்-பெண் உறவு என்பது நீ பிறந்த நேரத்திலிருந்து வந்ததல்லவே. பல ஆயிரம் ஆண்டுகளாகத் திருமணம் என்கிற அற்புதமான விஷயம் - சிஸ்டம் இந்தப் பாரத தேசத்தில் ஏற்பட்டு விட்டதே. அப்போது எங்கேயிருந்து வந்தது பனிக்கட்டி." அவர் கேட்டார்.

"சரி, நான் என்ன எழுதவேண்டும் என்று எதிர்பார்க்கிறீர்கள்."

"கடவுளைப் பற்றி எழுது."

உடனடியாக பதில் சொன்னார்.

"எனக்குக் குடும்பம் தெரியும். அதன் குதூகலம் தெரியும். அதன் நல்லது கெட்டது தெரியும். ஆனால், கடவுள் பற்றித் தெரியாது. அதைப் பற்றி எனக்குப் பலத்த சந்தேகமும் இருக்கிறது. ஒரு அந்தணக் குடும்பத்தில் கடவுள் பக்தி ஊட்டி வளர்க்கப்பட்டாலும் இவை அனைத்தும் கற்பனையா, நமது பயத்தின் காரணமாக ஏற்பட்டதா என்ற ஒரு கேள்வி இடையறாது என்னுள் இருக்கிறது. எனவே, நீங்கள் கடவுள்பற்றி எனக்குத் தெளிவுபடுத்தினால், கடவுளை எனக்குக் காட்டினால் நான் அதைப் பற்றி எழுத முடியும்." என்று சொன்னேன்.

அவர் மெல்லியதாய் பதற ஆரம்பித்துவிட்டார்.

"பால்குமார், இந்தப் பிச்சைக்காரனிடம் கடவுளைக் காட்டு என்று சொல்கிறாய். பால்குமாரனுக்கு இந்தப் பிச்சைக்காரன் கடவுளைக் காட்ட முடியுமா. இந்தப் பிச்சைக்காரனுக்கு இது சாத்தியமா. தெரியவில்லையே" என்று சொல்லியபடி என் தலை, கழுத்து, முதுகு, இடுப்பு என்று தடவி, தன்னை என் பக்கம் இழுத்துக் கொண்டு என்னைப் பலமுறை உற்றுப் பார்த்து, தன் இடது கை பெருவிரலையும் ஆட்காட்டி விரலையும் வேகமாகத் தேய்த்துக் கொண்டு, மாலை உருட்டுவது போல் செய்து கொண்டு தொடர்ந்து பேசிக் கொண்டிருந்தார்.

"பால்குமார், மகான்களால் கடவுளைப் பார்க்க முடிந்திருக்கிறது; பேச முடிந்திருக்கிறது. கடவுளைப் பார்க்காமலேயே பார்த்தேன் என்று மகான்கள் சொல்வதில்லை. அவர்களுடைய அனுபவத்தைச்

சொல்ல முடியாமல் தவித்திருக்கிறார்கள். எப்படிச் சொன்னால் புரியும் என்று பல்வேறு விதமாகச் சொல்ல முயற்சித்திருக்கிறார்கள். நூற்றுக்கணக்கில் உபமானம் காட்டியிருக்கிறார்கள். சில உபமானங்கள் மயிர்க்கூச்செரிபவை. தீக்குள் விரலை வைத்தால்.. என்று பாரதி பாடுகிறான். படித்திருக்கிறாயா. அப்படித் தான் அது. அந்த உணர்வுதான் அது. அது தீ. ஆனால் அதில் விரலை வைத்தால் சுடாது. வேறொரு உணர்வு தோன்றும். என்ன உணர்வு அது. வார்த்தைகளால் சொல்ல முடியாது. நீ அந்தப் பாரதி பாடலை முழுவதும் படித்திருக்கிறாயா. இந்தப் பாரத கண்டத்தில் எத்தனை இலக்கியங்கள், எத்தனை விதமான கடவுள் வெளிப்பாடுகள், மனிதனுடைய நீண்ட காலத்தேடல் இது மட்டுமே. இது நிற்பதில்லை. நிற்கப் போவது மில்லை" என்று பேசிக் கொண்டிருக்க நான் வேறுவிதமான உணர்வை அடைந்தேன்.

என் அடி முதுகு வலித்தது. வேறு எந்த வலியும் இல்லை. மெல்ல மெல்ல வலி கடுமை ஆவதை நான் உணர்ந்தேன். அடி முதுகில் ஒரு பந்து போன்று ஏதோ ஒரு விஷயம் திருகுவதும், சுழலுவதும், ஏதோ ஒன்று வெளிவரத் தவிப்பதும் என்னால் உணர முடிந்தது. எதிரே உள்ளவரை, தெருவை, அந்த பகல் நேரத்து மனிதர்களின் அசைவை, ஒலிகளை நான் உணர்ந்து கொண்டிருந்தாலும் என் மனம் அவைகளைத் தொட்டு விட்டு எந்த உணர்ச்சியுமில்லாமல், எந்த அபிப்பிராயமுமில்லாமல் திரும்பிக் கொண்டிருப்பதை உணர்ந்தேன். நம் மனது எதைப் பார்த்தாலும் பார்த்தது பற்றி ஒரு அபிப்ராயம் ஏற்படுத்திக் கொள்ளும். சில சமயம் உரக்கச்சொல்லும்.

நையாண்டியாகவோ, கோபமாகவோ, ஆதரவாகவோ, பிரியமாகவோ அந்த அபிப்ராயங்கள் இடையறாது தோன்றிய வண்ணமே இருக்கும். ஆனால், இந்த நிலையில் எந்த அபிப்ராயமும் தோன்றாமல், நான் பார்த்துக் கொண்டிருப்பதை வெறுமே பார்த்துக் கொண்டிருப்பதாகவே உணர்ந்தேன். இந்த நிலை ஆச்சரியமாக இருந்தது. எனது மனம் அசைவற்று இருந்தது. இதுதான் திட மனமா, மனம் மனதைப் பார்த்துதான் வியந்ததே யொழிய மற்றவரைப் பார்த்து எந்த அபிப்ராயமும் கொள்ளவில்லை. மனம் உள்ளுக்குள் மனதைப் பார்க்கத் துவங்கிவிட்ட ஒரு வினோத நேரத்தை,

நிலையை நான் தெளிவாக உணர்ந்தேன்.

முதுகு வலி அதிகமாயிற்று, ஏதோ நகர்ந்தது. அந்த நகர்வு நிலை எனக்குப் பிடிக்கவில்லை. செத்துப் போய்விடுவோமோ என்கிற பயம் ஏற்பட்டது. ஆனால், என்னால் எதிர்க்க முடியவில்லை. இயங்க முடியவில்லை. வெறுமே கிடந்தேன். உட்கார்ந்து ஒருவர் கை பிடித்துக் கொண்டிருப்பினும் நான் எந்த அபிப்ராயமும் இல்லாமல் வெறுமே கிடப்பது புரிந்தது. உள்ளுக்குள் கவனித்துக் கொண்டிருப்பது புரிந்தது. முழுவதுமாய் என் உடம்புக்குள்ளும், என் மனத்திற்குள்ளும் நான் கிழித்துக் கிடத்தப்பட்டேன். அடி முதுகிலிருந்து ஒரு மாபெரும் சக்தி உடைந்து எங்கிருந்தோ வெளியேறி வேகமாகச் சீறி நெஞ்சுக்கூட்டைத்தாக்கி ஏறுவதை உணர்ந்தேன்.

அந்த வேகம் அசுரவேகம். ஒரு இடத்தில் உட்கார்ந்திருந்தாலும் இடுப்பிலிருந்து மார்புக்குள் வருவதற்குள் பல நூறு கிலோ மீட்டர் வேகத்தில் வெகுதூரம் வெகுநேரம் பயணப்பட்டது போல் ஒரு மிகப்பெரிய பிரமை ஏற்பட்டது. நாம் இருக்கின்ற காலம் வேறு, மனம் கொள்கின்ற காலம் வேறு என்பது புரிந்தது. அது சில நொடிகளே பல மணி நேரங்கள் போல விவரித்து, விகசித்து எனக்குக் காட்டப்பட்டது. நெஞ்சுக்கூட்டில் முட்டியதும் மிகப்பெரிய நீலப்பரப்பில் அறுகோண முக்கோணமும் சித்திர எழுத்துகளும் கருப்பு வெள்ளை புகைச்சுருளும் கண்டேன். காதோரம் ரீங்காரமும் கேட்டது. நான் நெருங்கிப் போக அந்த இடம் அந்த அறுகோண முக்கோணம் நகர்ந்து வழி விட்டது. நான் மறுபடியும் மிகப்பெரிய நீலத்திற்குள் நுழைந்தேன். நான் வாய்விட்டு அலறினேன். என் இடதுகை நெஞ்சுக் கமலத்தைத் தாங்கியிருக்க வலதுகை விரிந்து வானம் பார்க்க ஒரு விசித்திரமான முத்திரையை என் உடம்பு வெளியிட்டது. அது நான் செய்ததல்ல, வேறு ஏதோ செய்தது. என்னைச் சுற்றி மேலும், கீழும், இடதும், வலதும் உள்ளும் புறமும் ஒரு சக்தி அசைந்து கொண்டிருக்கிறது. மணல் துகள் போல் பரப்பப்பட்ட சக்தி. இடையறாது நகர்ந்து கொண்டிருந்தது. எதிரேயுள்ள பெண்மணியில், தெருவே போகும் நாயிடத்தில், தொலைதூரத்தில் பாத்திரம் தட்டிக் கொண்டிருந்த அந்தத் தொழிலாளியிடத்தில், வெறும் வெளியில், வானத்தில், பூமியில், இடப்பக்கம் அமர்ந்திருந்த குருவின் நெஞ்சுக்

கூட்டுக்குள் என்றெல்லாம் அந்தச் சக்தி பரவிக் கிடந்தது. குருவை இன்னும் உற்றுப் பார்க்க ஒரு திகழ்ச் சக்கரமாய் அந்தச் சக்தி மற்றவரையும் விட அடர்த்தியாய் இருப்பதை உணர்ந்தேன். சிரித்தேன்.

ஒரு மெல்லிய சிரிப்பு, பல் தெரிய எந்த எண்ணமுமின்றி வெகுளியாய் சிரித்தேன். எதைப் பார்த்தாலும் சிரிக்கத்தான் தோன்றியது. ஒரு சந்தோஷமான சிரிப்பு அது. எதையோ அடைந்து விட்டது அல்ல அந்த சந்தோஷம். நான் முழுவதும் சந்தோஷமாக இருந்தேன். இதுதான் என் இயல்பு என்பது போன்ற சந்தோஷத்தில் இருந்தேன். எதைப்பற்றியும், யாரைப்பற்றியும் கவலைப்படாமல் சந்தோஷத்தில் இருந்தேன். என்னை மீறி என் சந்தோஷம் பொங்கி வழிந்து கொண்டிருந்தது. என் அனுமதியின்றி தான் எல்லாமும் நடந்து கொண்டிருந்தன. நான் உள்ளுக்குள் வேறு என்பது வெகு நன்றாய்த் தெரிந்தது.

உலகம் எவ்வளவு அழகு. உயிர்கள் எவ்வளவு அழகு. சகலமும் எவ்வளவு அழகாக இருக்கின்றன என்றுதான் மிதந்து கொண்டிருந்தேன். எதுவும் யோசிக்காமல் வெறுமே கிடக்கின்ற மனம் என்கிற விதவிதமான உணர்வு வஸ்துவையும் என்னால் உணர முடிந்தது. என் இருப்பிடமும் இருப்பும் தெரிந்தன.

மூளை ஒரு மெமரி பாக்ஸ். உடம்பு ஒரு அனுபவத் தொழிற்சாலை. இந்த அனுபவத் தொழிற்சாலையில் ஏற்படுகின்ற அனுபவ விஷயங்களை மூளை சேமித்து வைத்துக் கொள்கிறது. மனம் அவ்வப்போது எடுத்து உபயோகப்படுத்திக் கொள்கிறது. மனம் என்பது உறுப்பல்ல. ஹிருதயம் உறுப்பு. ஆனால் ஹிருதயத்திற்கு அருகேதான் மனம் இருக்கிறது. அது ஒரு வெட்டவெளி. பெரும் சக்தி. அது ஒன்றுமில்லை. ஆனால் எல்லாமும் அதுதான். ஒருவர் மனிதன் உடலாய் இருக்கும்போதும் இருப்பது, இறந்த பின்னும் வாழ்வது. அது சுடாத நெருப்பு, அணையாத தீ. அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் இருக்கின்ற இயல்பு, அது சொல்லமுடியாத சுகம். சந்தோஷ பூமி. எத்தனை மணி நேரம் திளைத்திருந்தேன். என்று எனக்குத் தெரியவில்லை. என்னிடம் நேரமில்லை. நேரம் அழிந்து போயிருந்தது. இப்பொழுது இங்கு எழுதப்பட்ட வார்த்தைகளெல்லாம் கூட ஐந்து சதவீதம் தான் என் மனோநிலையை வெளிப்படுத்துகின்றன.

பாக்கி தொண்ணூற்றைந்து சதவீதம் சொல்ல முடியாமல் நாக்கு ஒட்டிக் கிடக்கிறது.

"பாலகுமார்."

அவர் என் மீது மோதினார்.

ஒரு சிறிய கல்கண்டு கொடுத்தார். சுவைத்து அந்த நீர் உள்ளே இறங்கியதும் நான் பூமிக்குத் திரும்பினேன். தித்திப்பு என்பது பூமி, இனிப்பு அதிகம் சாப்பிடுபவர்கள் பூமியோடு சம்பந்தப்பட்டவர்கள். பூமி சிற்றின்பக்கூடம், இனிப்பும் சிற்றின்பமும் நெருங்கிய தொடர்புடையவை.

எது சிற்றின்பம். ஆண்-பெண் உறவா.

இல்லை. நான் என்கிற அகங்காரம் தான் அந்த அனுபவம்தான், நான் என்ற அகந்தையின் சந்தோஷம் தான் சிற்றின்பம். நான் பிடுங்கி விடுவேன், கிழித்து விடுவேன் என்று அகங்காரப்படுதல் எல்லாமே சிற்றின்பங்கள்தான். ஆண், பெண் கூடலைப் போன்ற சந்தோஷங்கள் தான். அகங்காரத்தின் இன்னொரு வகை வெளிப்பாடுதான் ஆண், பெண் கூடல். அந்த அகங்காரத்தின் உடம்பு ஆட்டம்தான் ஆண் பெண் கூடல். சிற்றின்பம் தகர்க்கப்பட வேண்டுமெனில் நான் என்ற திமிர் தகர்க்கப்பட வேண்டும். அந்தத் தித்திப்பு உண்ட பிறகு நான் என் இருப்பை, உடம்பு இருப்பை கனத்தை அறிந்தேன். நான் என்கிற அகங்காரம் என்னுள் பரவியது.

'நான் அடைந்த கடவுள் அனுபவம்' என்ற வியப்பும், திமிரும் எனக்குள் தோன்றின. இதுவொரு கேவல ஸ்திதி. இதுவொரு லாக்அப். ஆனால் ஏதாவது ஒரு வழியில், ஒரு விதத்தில் எனக்குள் நான் என்கிற அகங்காரம் புகுத்தப்படும், இதை ஏற்றுக் கொண்டுதான் ஆகவேண்டும். இதை மறுதலிக்க, மறுதலிக்க இன்னும் இறுக்கிப் பூட்டுவார்கள். இங்கு அடங்கி இருப்பது போல இருந்து மிக நேர்த்தியாகத் தப்பிக்க வேண்டும். அந்த லாக்அப் பூட்டைத் திறக்க, அந்தக் கம்பியை வளைத்து வெளியே எடுக்க சில வழிகள் இருக்கின்றது. அதை இதற்கு முன்பு தப்பித்தவர்தான் சொல்லித்தர முடியும். அவருக்குத்தான் குரு என்று பெயர். அவர்தான் வழிகாட்ட முடியும். அந்த லாக்அப்பிலிருந்து வெளியே வந்து என்ன செய்வது.

நோக்கமற்று வெறுமனே திரியலாம். அப்படித் திரிந்தவருக்கு யோகி என்று பெயர். பாலர், பேயர், பித்தர் என்றும் அவர்கள் அழைக்கப்படுவார்கள். அந்த

மனதிற்கு எந்த நோக்கமும் கிடையாது. எந்தக் குறிக்கோளும் இல்லை. அது வெறுமே மிதந்து கொண்டிருக்கும். அவர்கள் பார்ப்பதற்குப் பிச்சைக்காரனாய் அடையாளமின்றி உலவிக் கொண்டிருப்பார்கள் அல்லது வேறு என்ன செய்யலாம். மறுபடியும் லாக்அப்பிற்குப் போகலாம். நம்மை நாமே பூட்டிக் கொள்ளலாம். நான் எழுத்தாளன், நான் அப்பா, நான் புருஷன், நான் பிராமணன், நான் இந்து, நான் இந்தியன் என்று விலங்கிட்டுக் கொள்ளலாம். விலங்கிட்டுக் கொள்ளும் போதே வெளியே இதெல்லாம் தாண்டிய ஒரு இடம் இருக்கிறதே என்பதும் நமக்குப் புரிந்து போகும். அந்த இடத்திற்கு அடிக்கடி போய்வரவும் முடியும்.

வேறு என்ன செய்வது. வெறுமே இப்படியே இருந்துவிட்டுப் போக வேண்டியதுதான். உனக்கு என்ன அடையாளங்கள் உலகம் கொடுத்தாலும் அதையெல்லாம் சுருட்டி கக்கத்தில் வைத்துக் கொண்டு எந்த எதிர்ப்பும் காட்டாமல், இணக்கமும் காட்டாமல் வெறுமே சும்மா இருந்துவிட்டுப் போக வேண்டியதுதான். இதுதான் உண்மையான கடவுள் தரிசனம். கடவுள், குரு, சத்தியம் எல்லாம் ஒன்றே.

இதை நான் இங்கே எழுதக் காரணமும் என்னைச் சொல்லிக் கொள்ள அல்ல. கைக்குக் கிடைத்த பழைய வாரப்பத்திரிகையை ஆவலோடு பார்ப்பதுபோல மிக இயல்பான ஒரு விஷயம். புரட்டிப் பார்த்துவிட்டு மறுபடியும் ஷெல்பில் வைத்துவிட வேண்டியதுதான்.

இறை தரிசனம் என்பது தன்னைக் காணுதல். வேறெதுவும் இல்லை.

## கோயிலும் சில உரத்த சிந்தனைகளும்

கிட்டத்தட்ட நாற்பது வருடங்களுக்கு முன்பு அதாவது, ஆயிரத்து தொள்ளாயிரத்து அறுபத்து மூன்றாம் வருடத்து ஆரம்பத்தில் ஒரு வேலை நாளில் பகல் நேரப் பத்து மணிக்கு சிவன் கோயிலுக்குப் போயிருந்தேன். கோவில் திறந்திருந்தது. அது பெரிதும் இல்லாத, சிறிதும் இல்லாத சிவன் கோயில். காவலாளி என்று யாரும் கிடையாது. கருவறைகளும்

திறந்திருந்தன. ஆனால், தீபங்கள் எரியவில்லை. சிறிது நேரம் கோவில் மண்டபத்தில் அமர்ந்து பார்த்தேன். அர்ச்சகர் வரவில்லை. சரி, வெறுமே கோயிலை சுற்றி வரலாம் என்று சுற்றி வந்த போது, கோவிலின் பின் பக்கத்தில் சண்டிகேஸ்வரர் சிலைக்கு அருகே சுவரோரமாய் அர்ச்சகர் சுருண்டு படுத்திருந்தார். எண்ணெய் சொம்பு ஓரமாய் உருண்டு கிடந்தது. நான் பதறிப்போய் அவரைத் தொட்டு உலுக்கினேன். ஐம்பது வயது மதிக்கத்தக்க அந்த சிவாச்சாரியார் தள்ளாடி எழுந்து உட்கார்ந்தார்.

"என்னமோ முடியலை. தலையச் சுத்தறது" என்று சொன்னார்.

வரும்போது ஒரு டாக்டரைப் பார்த்து வணக்கம் சொல்லி விட்டு வந்தது ஞாபகம் வந்தது. அவரை எழுப்பி உட்கார வைத்து, குடிக்க ஜலம் கொடுத்து விட்டு அந்த டாக்டர் வீட்டுக்கு ஓடினேன். சிவாச்சாரியார் விழுந்து விட்டார், வந்து பாருங்கள் என்று சொல்ல, அவர் வேட்டியும் சட்டையுமாய் கோயிலுக்கு வந்தார். சிவாச்சாரியாரை பார்த்தார். சோதித்தார்.

"சாப்பிட்டீங்களா" என்று முதல் வார்த்தை கேட்டார்.

சிவாச்சாரியார் பதில் சொல்லவில்லை.

"தம்பி, அவர் சாப்பிடலைடா. சாப்பாடு வாங்கிக் கொடுங்க, சாப்பிடாம தலை சுத்தியிருக்கு" டாக்டர் எழுந்து போய் விட்டார்.

"நான் ரெண்டு இட்லி வாங்கிட்டு வரட்டுமா" என்று கேட்க சாப்பிட மாட்டேன் என்று சிவாச்சாரியார் மறுத்தார். எனக்கு மேற்கொண்டு என்ன செய்வதென்று தெரிய வில்லை.

அவர் காட்டிய தீபத்தைக் கண்ணில் ஒற்றிக் கொண்டு அவர் தட்டில் நாலணா போட்டேன். அதை வாங்கி இடுப்பில் செருகிக் கொண்டார். என் நெற்றியில் கட்டைவிரலால் திருநீறு இட்டார். உச்சந்தலையில் திருநீறு தெளித்தார்.

சௌக்கியமா இருப்பே என்று ஆசீர்வதித்தார்.

அந்த ஆசீர்வாதம் என் வயிற்றைப் பிசைந்தது. நான் வீட்டிற்கு ஓடினேன். நடந்ததைச் சொன்னேன். அம்மா சட்டென்று ஒரு படி அரிசி தனியாக ஒரு பையில் போட்டு இது சுந்தரேஸ்வரருக்குன்னு சொல்லிக் கொடு. அவருக்குன்னு கொடுக்காதே. அதேவிதமாய்

வந்து இது சுந்தரேஸ்வரருக்கு என்று சொல்ல அவர் முகமலர்ச்சியோடு வாங்கிக் கொண்டார்.

நான் சிவனை நோக்கிக் கைகூப்பினேன்.

"உனக்காக பூஜை பண்ணுகிறவர் வயிறு வாடுகிறாரே. இதை நீ சரி செய்யக் கூடாதா." என்று வேண்டினேன்.

இவை எதுவும் மும்முரமாக, முனைப்பாக செய்தது அல்ல. என்னமோ செய்யத் தோன்றிற்று. செய்தேன்.

அந்த அர்ச்சகர் பசியால் சுருண்டு கிடக்கிறார் என்கிற பரிதாபம் என்னைத் தாக்கியது. நான் பரிதவித்தேன்.

ஆனால், நாற்பது வருடம் கழித்து இன்றைக்கு கோயில்களைச் சுற்றி வருகிற பொழுது வறுமை மிகுந்த இடுங்கிய கண்களோடு ஒல்லியான அந்த ராயப்பேட்டை சுந்தரேஸ்வரர் கோயில் குருக்கள் ஞாபகம் வருகிறது.

இந்துமத எதிர்ப்பை, பார்ப்பன எதிர்ப்பாகக் காட்டி பார்ப்பான் ஒழிக என்று ஒரு பெரிய இயக்கம் இருந்தபொழுதும் இந்துமதக் கோயில்கள் க்ஷீணமடையவில்லை. யாரும் ஒழித்துவிடவில்லை. மாறாய் முன்னிலும் பலமாக கோயிலும், கோயிலைச் சார்ந்த அர்ச்சகரும் கிளர்ந்து எழுந்திருக்கிறார்கள்.

இதற்கு என்ன காரணம்.

என் நண்பர்கள் கூட்டத்தினிடையே நான் இதை விவாதித்தேன்.

முதல் காரணம் ஜனத்தொகை என்று ஒரு நண்பர் சொன்னார். ஜனங்களுக்கு ஆசை. பேராசை அதுதான் காரணம் என்று இன்னொரு நண்பர் சொன்னார். இந்து மதம் பற்றிய பிரசாரம் மிகச்சரியாக நடைபெறுகிறது. மீடியாக்கள் எல்லாமும் மதம் இல்லாமல் இல்லை. தமிழ்மொழியின் உயர்வை, பழந்தமிழ் பாடல்களை அதன் சுவையை, கம்பராமாயணத்தை, சிலப்பதிகாரத்தை இந்த மீடியாக்கள் சொல்லவில்லை. மாறாக, இந்து மதத்தைப் பற்றி விரிவாகச் சொல்லுகின்றன. குறிப்பாய் பத்திரிகைகள் இந்துமத பிரச்சாரத்தை மிக அழகாகச் செய்கின்றன. இன்னும் குறிப்பாய் ஜோசியர்கள் பரிகாரங்கள் சொல்வதின் மூலம் பல கோயில்களுக்கு ஜனங்களை அனுப்பிக் கொண்டிருக்கிறார்கள். இன்னும் குறிப்பாய் உங்களைப் போன்ற நாவலாசிரியர்கள் உள்மனதில் தைக்கும்படி ஆன்மீக விஷயங்கள் எழுதி சில கோயில்களைப் பற்றி

விளக்கம் தர, அங்கேயும் கூட்டம் சாய்கிறது. இப்படியும் ஒரு நண்பர் பேசினார்.

திராவிட இயக்கங்களின் கடவுள் எதிர்ப்புதான் காரணம். எதிர்ப்பு இல்லாமல் இருந்தால் அது தனிநாதமாக ஒலித்துக் கொண்டிருக்கும். இந்து மதத்தை கேலி செய்ய பிள்ளையாரை உடைக்க இப்போது ஆயிரக்கணக்கில், லட்சக்கணக்கில் பிள்ளையார்கள் விற்பனையாகிக் கொண்டிருக்கின்றன. எது எதிர்க்கப்படுமோ அது வீர்யம் கொண்டு வளரும். எந்தக்கிளை வெட்டப்படுகிறதோ அதில் அனேக கிளைகளும், இலைகளும் துளிர்க்கும். இப்படித்தான், இந்த எதிர்ப்பால்தான் இந்துமதம் வளர்ந்திருக்கிறது. வினாயகரை போட்டு உடைக்கிறார்களே, வினாயகர் யார் தெரியுமா என்று கேள்வி வர, யார் வினாயகர் என்று ஜனங்கள் கூர்மையானார்கள்.



வினாயகர் என்பது ஞானத்தின் உருவம். யானைத்தலை என்பது புத்தியின் சூட்சுமம். நினைவாற்றல். ஒரு கால் மடித்து, ஒரு கால் குத்திட்டு உட்கார்ந்திருப்பது அரச போகம். பிரம்மச்சரியம் என்பது ஒழுக்கம் என்று விதம்விதமாய் சொல்லிக் கொடுக்க பிள்ளையார் மீது பிடிப்பு வந்துவிட்டது.

குரு பெயர்ச்சிக்கு அப்பொழுது கூட்டம் இருக்காது. எவருக்கும் தெரியாது. ஆனால், இன்று குரு பெயர்ச்சியும், ராகு-கேது பெயர்ச்சியும், சனிப் பெயர்ச்சியும் அட்டகாசம் செய்கின்றன. அங்கு நடக்கும் ஹோமங்கள் பெண்களை மட்டும் ஈர்க்க வில்லை. ஆண்களும் அதிக அளவில் கலந்து கொள்கிறார்கள். பெரிய மனிதர்கள் முன் வரிசையில் உட்கார்ந்து நிறைய திரவியம் கொடுத்து ஹோமம் பலமாய் செய்வதற்குண்டான உதவிகளைச் செய்கிறார்கள். வைதீகர்களும், சிவாச்சாரியார்களும்

பலமாக இருக்கிறார்கள்.

ஒரு கணபதி ஹோமம் செய்ய குறைந்த பட்சம் ஐநூறு ரூபாய். ஆயிரம் ரூபாய்க்கு ரசீது போட்டு கிரகப் பெயர்ச்சிகளில் கலந்து கொள்வது சர்வசாதாரணமாகி விடுகிறது.

ஒரு கல்யாண மண்டபம் பிடித்து வேண்டுமென்ற திரவியங்களைச் சேகரித்து நண்பர்களை வந்து கலந்து கொள்ளச் சொல்லி பக்தகோடிகளை நேரே போய் விண்ணப்பித்து ஒரு கிரகப் பெயர்ச்சி யாகம் செய்தால் செலவெல்லாம் போக வெகு எளிதாக ஐம்பதாயிரம் ரூபாய் நிற்கும். இது இன்று அட்டகாசமான வருமானம்.

மறுபடியும் கோயிலுக்குப் பின்னே சுருண்டு விழுந்த சிவாச்சாரியாரின் முகம்தான் எனக்கு நினைவுக்கு வருகிறது.

அவருக்கு ஆறு பையன்கள். மஹாபெரியவா சொன்னார் என்று தனது ஆறாவது பையனை அவர் வேதபாட சாலையில் சேர்ந்தார். மற்ற ஐந்து பையன்களும் தந்தையின் மீது மிகக் கோபமாக இருந்தார்கள். முடியாது. அவர் சொல்லை மீறமாட்டேன் என்று தந்தை கடுமையாக எதிர்க்க என் வயது ஒத்தவனை நாங்கள் பரிதாபமாகப் பார்க்க மிகுந்த தயக்கத்தோடுதான் காஞ்சிபுரத்திற்கு வேதம் படிக்கப் போனான். வாலிப வயதில் மேற்படிப்புக்கு, சென்னை சமஸ்கிருதக் கல்லூரியில் வந்து சேர்ந்தான். அவனுக்குத் துணையாக அவன் தந்தை மயிலாப்பூரில் சந்து வீட்டில் வந்து தங்கினார். அவரே சமைத்துப் போட்டார்.

என் திருமணப் பத்திரிகையைக் கொண்டு போய் கொடுக்கும்போது, அவனுக்கும் திருமணப் பேச்சு வார்த்தைகள் நடந்து கொண்டிருந்தன. எப்படிப்பட்ட பெண்ணை மனைவியாய் தேர்ந்தெடுப்பாய் என்று அவனிடம் கேட்டபோது, என்னுடைய உத்தியோகத் திற்கு மதிப்பு கொடுக்கிற பெண்ணைத்தான் நான் தேர்ந்தெடுப்பேன். வேலைக்குப் போகிற பெண்ணை நான் விரும்பவில்லை என்றான். உன் வேதியம் நிரந்தரமில்லாத உத்தியோகமல்லவா என்று நான் சொன்ன போது உலகத்தில் எது நிரந்தரம் என்று அவன் பேசினான்.

ஆனால், எனக்கு முன்னரே மோட்டார் சைக்கிள் வாங்கினான். நான் வீடு வாங்குவதற்கு முன்பாகவே

நங்கநல்லூரில் வீடு வாங்கினான். அவன் வீடு வாங்கக்கூட இல்லை. நங்கநல்லூரில் வீடு கட்டி வேண்டாம் என்று மறுபடியும் பட்டணத்துக்கு வந்தவர் அதை அவனுக்கு சல்லீசாகக் கொடுத்தார். தவ்ணை முறையில் கொடுத்தார். பத்து ரூபாய் மதிப்புள்ள வீடு. எட்டு ரூபாய்க்குக் கிடைத்தது. ஐந்து ரூபாய் கொடு. பிறகு மெல்ல மெல்ல மற்றவையும் கொடு என்று சொல்லப்பட்டது. ஒரு பைசா வட்டி கூட வாங்க வில்லை. அந்தக் கடன் அடைக்க அவன் அதிகம் உழைத்தான். நகரின் பல இடங்களில் நான் அவனைப் பார்க்க நேர்ந்தது.

இஷ்டி செய்து வைக்கிற வேதியனாக அவன் மிளிர்ந்தான்.

உங்களுக்கு அதிகம் காசு வேண்டுமா. வீட்டில் தடைபடுகின்ற திருமணம் நடக்க வேண்டுமா. உடம்பு ஆரோக்கியம் வேண்டுமா. தொழில் மேன்மையாக வேண்டுமா. சொத்து பத்துக்கள் விருத்தியாக வேண்டுமா. இதற்குண்டான ஹோமங்களைச் செய்வதற்கு அவனுக்குத் தெரிந்திருந்தது. இப்படிச் செய்ய வேண்டும் என்று அவன் பலருக்கு விளக்கிச் சொல்ல, அதிகம் பேர் அவ்விதமான ஹோமங்களைச் செய்ய முன் வந்தார்கள். அதற்கு தனிக்கட்டணம் வசூலிக்கப்பட்டன. அவன் செய்து சில பேர் சிறக்க அவனுக்கு மதிப்பு அதிகம் கூடியது. அவன் வெறும் வேதியனாக மட்டும் இல்லாமல் பாடம் சொல்லித்தரும் உபாத்யாயனாகவும் இருந்தான். தனியாக வேத பாடசாலை துவக்கினான். கெட்டிக்கார மாணவர் களைச் சேர்த்துக் கொண்டான்.

வேதபாடசாலைக்கு நன்கொடையாகவும் அவனிடம் காசு சேர்ந்தது. அவனுக்குத் திருமணமாகி குழந்தைகள் பிறந்து அவன் குழந்தைகளை நல்ல இடத்தில் திருமணம் செய்து கொடுத்திருக்கிறான். அவனுடைய இரண்டு பையன்களும் ப்ளஸ்டூ முடித்து பிறகு அவனிடத்திலேயே வேதம் கற்றார்கள். அவர் களும் வேதியர்களாக மாறினார்கள். மாப்பிள்ளை யையும் வேதியனாகவே தேர்ந்தெடுத்தான்.

"எங்கப்பா கொண்டு வந்து வேதம் படின்னு காஞ்சிபுரத்துல விட்டபோது நான் பிழியப்பிழிய அழுதேன். ஏன் அழறேன்னு தெரியாமல் அழுதேன். எல்லாரும் கிராப்பை வச்சுண்டு அரைக்கால் சட்டை போட்டுண்டு பள்ளிக்கூடம் போறபோது, நாம இப்படி

வேட்டி கட்டிண்டு தலையில் வட்டை வச்சுண்டு கும்பலோட கும்பலா சாப்டுண்டிருக்கோமேன்னு வேதனைப்பட்டேன். தீபாவளிக்கு மட்டும்தான் ஆத்துக்கு போகலாம். மத்த நேரங்கள்ல பாடசாலையிலேயே இருக்கணும். எல்லாப் பண்டிகைகளையும் பாடசாலையிலேயே கொண்டாடணும். முதல் வருஷம் ஒண்ணுமே புரியலை. நல்லவேளையா எங்கப்பா வந்து அடிக்கடி பார்ப்பார். என் ரெண்டு, மூணு ஸ்நேகிதாளோட அப்பாக்கள் ஒரு தடவை கூட வந்து பார்க்கலை. அவங்களை பார்த்துட்டு என்னை சமாதானப் படுத்திண்டேன். குடுமி குடுமின்னு எங்க அண்ணாக்களே என்னை இழுப்பா. க்ராப் வச்சுண்டா வேதம் படிக்க வராதோ. என்னத்துக்கு தலையை இப்படி கோரம் பண்ணிண்டிருக்கான். முன்பக்கம் மழிச்சுண்டு பின்பக்கம் தொங்க விட்டுண்டு அப்படின்னு எங்க அண்ணா ஒருத்தன் காலேஜ்ல படிச்சவன் அலட்டிண்டான். எங்கப்பா அவனை அதட்டி அடக்கினார். குடுமி வச்சுண்டா தான் வேதம் படிக்க வருமா அப்படின்னு கேட்டேன். அப்பா ரொம்ப நிதானமா சொல்லிக் கொடுத்தார்.

பின் மண்டை சூடாயிடுண்டா. அந்த இடத்துல சூடாகாம இருக்கிறதுக்காக குடுமி வச்சுக்கறது நல்லது. முன் மண்டை கர்த்தோட்டமா இருக்கணும். முடி வந்து முகத்துல விழப்படாது. ஒருதடவை எண்ணெய் தடவி கேசத்தை இறுக்க கட்டிண்டுட்டா அப்புறம் கேசத்தை தொடக்கூடாது. நிறைய பேர் தலை மயிரை தள்ளிக் கொண்டே இருக்கா. அது அசிங்கம். ஆபாசம் அப்படின்னார். அப்பா தலைமயிரைத் தொட்டா கையலம்பிக்கணும்னு சொன்னார். சாப்பிடும்போது பரிசேஷணம் பண்றது. 'அன்னதாதா சுகிபவ' யார் சாதம் போட்டாளோ அவாள சௌக்கியமா இருக்கச் சொல்லி ஆசீர்வதம் பண்றது. எல்லாத்துக்கும் காரணம் காட்டினார்.

கார்த்தால நாலேகால் மணிக்கு எழுந்துடறதால மத்தியானம் தூக்கம் வரும். ஆனா, தூங்கப்படாது. ஒரு அரைத்தூக்கமா பேசாம உட்கார்ந்துண்டிருப்பேன். நாளாக நாளாக அதுவே தியானமா மாறிப்போயிடுத்து. ஒன்பதேகால் மணிக்கு அத்தனை பேரும் படுத்துருவோம். எட்டு மணிக்குச் சாப்பிட்டவுடனே கண் இழுக்கும். பெரிய ஆசைகள் எதுவும் இல்லையா, அதனால நன்னா தூக்கம் வந்துரும்."

"அப்படியா. ஆசை எதுவும் இல்லையா."

நான் அவனை மடக்கிக் கேட்டேன்.

"என்ன இருக்க முடியும். நாலு கௌபீனம். நாலு வேட்டி, நாலு மேல் துண்டு. எங்கிட்ட செருப்புகூடக் கிடையாது. வேண்டாம்னு தீர்மானம் பண்ணேன். செருப்பை ஒரு தடவை கல்யாண வீட்டு வாசல்ல வச்சுட்டு வந்தேன். ஒரு பையன் கண்ணு முன்னாடி திருடிண்டு போனான். சரி போகட்டும்னு விட்டுட்டேன். அப்போதிலேர்ந்து நான் செருப்பே போடறதில்லை. கல்யாணத்துக்கு அப்புறம்தான் இவ சண்டை போட்டு செருப்புப் போட வச்சா. இந்த மோதிரம், கங்கணம், கழுத்துல செயின், இடுப்புல வெள்ளி அரணாகயிறு இதெல்லாம் வந்து பொண்டாட்டி சொல்லித்தான் மாட்டிண்டிருக்கேன். ஆபீஸ் போயிருந்தா இந்த மாதிரி வீடும், மோட்டார் சைக்கிள் வசதியும் கிடைச்சிருக்குமான்னு தெரியலை.

அரசாங்கத்துல இருக்கற ரொம்ப ரொம்ப பெரிய மனுஷாகிட்டேல்லாம் சர்வசாதாரணமா பேச முடியறது. அவா மனக்குறைகளைக் கேட்க முடியறது. அவ்ளோதானே, அதுக்கு இப்புடி இப்படி பண்ணலாமேன்னு நான் சொன்னா, அவங்க கைகூப்பி உடனே பண்ணுங்கோன்னு சொல்றா. காசைப்பத்தி கவலையே இல்லைன்னு அடுத்த வார்த்தை சொல்றா. மஹாபெரியவா ஆசீர்வாதத்துல நான் சௌக்கியமா இருக்கேன்டா. எங்கப்பா இந்த வீட்லதான் என் மடியிலதான் செத்துப் போனார். உழைச்சா எந்தத் தொழில்லேயும் முன்னுக்கு வரலாம். வைதீகத்துல நிச்சயமா முன்னுக்கு வரலாம்."

நான் அவனிடம் கேட்டேன். எதனால் திடீரென்று இந்து மதத்திற்கு, வைதீகத்திற்கு, கோயிலுக்கு மரியாதை வந்தது.

அவன் வெகுநேரம் யோசித்தான்.

"இது ஒரு சுழற்சி."

நான் நிமிர்ந்து உட்கார்ந்தேன்.

"ஒவ்வொரு மதமும் ஒவ்வொரு காலகட்டத்தில் அதன் உச்சியைத் தொட்டு விட்டு சரிவடையத் துவங்கும். நாம் சரிவிலிருந்து இப்போது உச்சிக்குப் போகின்ற காலம். நம்முடைய மதம் மட்டுமல்ல. கிறிஸ்தவமும், இஸ்லாமும் இந்த சுழற்சியிலிருந்து தப்ப முடியாது. சிலுவைப்போர் நடந்து கிறிஸ்தவம் இரண்டாகப் பிளந்து ஏசு கிறிஸ்துவை முன்னால்

வைத்து அடித்துக் கொல்லா ர்கள். அன்று அடித்துக் கொண்டது இன்னமும் தொடர்கிறது. கத்தோலிக்கர் களுக்கும், ப்ராட்டஸ்டண்டுகளுக்கும் இடையறாத சண்டை இருக்கிறது. அதேபோல ஷியாஸும், சன்னிஸும் தங்கள் மதத்தை தாங்களே கீழே இறங்கிக் கொண்டிருக்கிறார்கள். இரண்டாகப் பிரிந்து மதத்தை பலவீனப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். நாம் இரண்டாக அல்ல. பதினாறு, பதினெட்டு குழுவாக பிரிந்தோம். ஏனெனில் நாம் தொன்மைமிக்கவர்கள். ஒரு குருதோன்றி இன்றைய தேவையில்லாத மதங்களை உதறிவிட்டுத் தேவையான ஆறு மதங்களைக் கொண்டு வந்து அழுத்தி நிற்க வைத்தார். ஆதிசங்கரர் போட்ட பிச்சை, இந்து மதத்தின் ஒற்றுமை.

நான் இவ்விதம் சொல்கிறேன். எப்பொழுதெல்லாம் ஒரு மஹான். ஒரு மதத்தில் தோன்றி தன்னுடைய கடமையை செவ்வனே செய்கிறாரோ அப்பொழுது அந்த மஹானின் அடுத்த தலைமுறைகள் வேகமாக இயங்கிப் பலமாக தங்கள் கொள்கைகளை பிரசாரம் செய்ய ஆரம்பிப்பார்கள். அந்த நேரம் அந்த மதமும் மறுபடியும் கிளைவிட்டுப் பரவும்.

வேறு ஒரு உதாரணம் சொல்கிறேன்.

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் என்கிறவரால் ஸ்ரீராம கிருஷ்ண மடம் வளரவில்லை. விவேகானந்தராலும் அது சாத்தியப்படவில்லை. அதற்கு அடுத்த, அதற்கும் அடுத்த, அதற்கும் அடுத்த தலைமுறை சன்னியாசிகள் தூக்கி நிறுத்தி விட்டார்கள். ஆனால் மூல காரணம் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர். அவர் செய்த தபஸ். விவேகானந்தர் அவர்கள் நிகழ்த்திய பேருரைகள், தத்துவ விளக்கங்கள்.

கிறிஸ்தவம் எப்படி இந்தியாவில் இத்தனை வேகமாகப் பரவியது. அதற்குக் காரணம் தியாகமே உருவாய் நின்ற பாதிரியார்கள். இடையறாது தன்னைப் புனிதப்படுத்திக் கொள்ள ஜபத்தில் ஈடுபட்டு, கடவுளைத் தொழுது அங்கு கிடைத்த வலிமையின் மூலம் மக்களைக் குணப்படுத்தி, நல்வழிப்படுத்தி தங்களுடைய மதத்திற்கு மிகப்பெரிய தொண்டு செய்துவிட்டார்கள். கிறிஸ்தவம் வேரூன்றுவதற்குக் காரணம் பாதிரியார்கள், தன்னலமற்ற தியாகிகள்.

அதேபோல, இந்து மதத்தின் பல்வேறு பிரிவுகளிலும் நல்ல மஹான்கள் தோன்றி இந்து

மதத்தை வளர்த்திருக்கிறார்கள். உதாரணமாக, மாத்வ சித்தாந்தம் பல தலைவர்களை கொண்டிருந்தாலும் ஸ்ரீராகவேந்திரர் புவனகிரியில் பிறந்து, குடந்தையில் படித்து வளர்ந்து அங்கிருந்து மெல்ல மெல்ல துங்கபத்ரா நதிக்கரைக்கு நகர, அந்த சித்தாந்தத்துக்கு பெரும்பலம் உண்டாயிற்று. அந்தப் பிரிவினருக்குள் இன்னும் வெளிச்சமும், விவேகமும் ஏற்பட்டன.

இஸ்லாமியர்கள் மிகக் கடுமையாக இந்து மதத்தை எதிர்த்து வந்த காலகட்டத்தில் ஸ்ரீராகவேந்திரர், அவர்களிடமிருந்தே நன்கொடை பெற்ற ஒரு இடத்தில் தன் மடத்தை நிறுவினார் என்றால் அது எப்பேர்ப்பட்ட தபஸ். எவ்வளவு பலமான ஆன்மசக்தி. இப்போது நம் காலத்தில் இந்து மதம் செழித்தோங்கி வளர்ந்திருக்கிற தென்றால் அதற்கும் தபஸ்தான் காரணம். அந்த தபஸ்வி மஹாபெரியவாள் ஸ்ரீசந்திரசேகர சரஸ்வதி அவர்கள். அவர்கள் எளிமையாக பல ஊர்களுக்குச் சென்று செய்த ஆன்மீக யாகம்தான் இந்தத் தலைமுறைக்கு பற்றிக் கொண்டு ஆன்மீகம் செழிப்பாக வளர காரணமாய் இருக்கிறது.

நடுவே ஏன் தளர்ந்தது என்ற கேள்வியும் உனக்கு வரும்.

நல்ல மஹான்கள் இல்லை. சுயநலமிகள் பெருகிவிட தனியார் வசம் இருந்த கோயில்களில் அட்டகாசங்கள் அதிகரிக்க, தேவதாசி முறையை மிகத் தவறாகப் பயன்படுத்திக் கொண்ட ஜமீன்தார்களும், பண்ணையார்களும் கோவிலின் புனிதத்தை குலைவடையச் செய்ய நாத்திகம் கிளைவிட்டு எழுந்தது.

ஒரு மதம் க்ஷீணமடையும் போது அங்கிருந்து ஒரு மஹான் தோன்றி விடுகிறார். அவர் அதிகம் பேசுவதில்லை. உபதேசங்கள் செய்வதில்லை. உபந்நியாசங்கள் செய்வதில்லை. வேள்விகளையோ, யாகங்களையோ, முன் நின்று நடத்துவதில்லை. வேறு எந்த விஷயங்களிலும் தலையிடுவதில்லை. தனக்குள்ளே இந்துமதம் பற்றிய கவலையோடு தவத்தில் ஈடுபட, அந்த உணர்ச்சி அலைகள் பலபேரைத் தொட்டு உலுக்கி பல்வேறு வேலைகளைச் செய்ய வைக்கின்றன.

பாலகுமாரா, உன்னை சிறுவயது முதற்கொண்டே தெரியுமே. அடிதடி ரகளை செய்கிறவனல்லவா நீ. எப்படி மாறினாய். உன் எழுத்துக்கு இப்படியொரு பலம்

எப்படி வந்தது. காதல், காமம் என்று எழுதிக் கொண்டிருந்தவன் எப்படி முற்றிலும் மாறிப்போனாய்.

ஒரு தபஸ்வி திருவண்ணாமலை மஹான். யோகி ராம்சுரத்குமார் உன் முதுகைத் தொட்டு, தலையைத் தொட்டு, உன்னை உலுக்கி தன் சக்தியை உனக்குள் செலுத்த, நீ வேறுவிதமாக உருவெடுத்தாய். உன் எழுத்து பல்லாயிரக்கணக்கான ஜனங்களை திசை திருப்பிக் கொண்டிருக்கிறது. அமைதியடையச் செய்திருக்கிறது. நல்வழிப்படுத்தியிருக்கிறது. இது நீ செய்ததா, இல்லை, அந்த மஹான் யோகி ராம்சுரத் குமாரின் தபஸ் செய்த விஷயம். அது கொடுத்த உற்சாகம். இன்றைக்கு சனாதனதர்மம் செழிப்பாக இருக்கிறதென்றால் வைதீகர்கள் பலமாக இருக்கிறார்கள் என்றால் சிவாச்சாரியார்களுக்கு நல்ல வருமானம் வருகிறதென்றால், என்னுடைய அபிப்ராயப் படி இதற்கு மூலக்காரணம் மஹாபெரியவாள் ஸ்ரீ சந்திரசேகர சரஸ்வதி அவர்கள் செய்த தபஸ். மறுபடி சொல்கிறேன். எப்பொழுதெல்லாம் ஒரு மதம் க்ஷீணமடைகிறதோ, அப்பொழுதெல்லாம் அந்த மதத்திலிருந்து ஒரு மஹான் தோன்றுவார். இது இந்து மதத்திற்கு மட்டுமே உண்டான விஷயமல்ல. மறுபடியும் ஒரு புத்தரோ, தீர்த்தங்கரோ தோன்றி விடக்கூடும்.

இஸ்லாமிய மக்களை அமைதிப்படுத்துகின்ற ஒரு சூஃபி வந்துவிடக்கூடும். அதிலுள்ளவர்களின் ஒற்றுமையை அதிகரிக்கச் செய்யும் ஒருவர் தோன்றி விடக்கூடும். அதேபோல தொடர்ந்து இந்துமதம் உயர்வாக, அமைதியாய், ஏதும் பேசாது, உபந்நியாசங் கள் நிகழ்த்தாது, தன்னை வெளிப்படுத்திக் கொள்ளாது, மீடியாக்களில் முகம் காட்டாது, ஏதேனும் ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டு ஆன்ம பலத்தால் என்னைப் போன்றவர்களை உற்சாகப் படுத்தும் மஹான்கள் தொடர்ந்து வரக்கூடும்.

திராவிட இயக்கம் தோன்றி ஒரு உலுக்கு உலுக்கியதால்தான், பிள்ளையாரை உடைத்ததால் தான் நம்மவருக்கு ரோஷம் வந்து அதில் ஈடுபாடும் வந்தது. எனவே, இந்த எதிர்மறை விஷயங்களும் உத்தமமானவையே. நாம் ஈ.வெ.ராமசாமி நாயக்கருக்கு நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக் கிறோம். இப்போது கிடைத்திருக்கிற இந்த உன்னதத்தைத் தக்க வைத்துக் கொண்டால்

எதிர்ப்பாளருக்கு வேலையே இருக்காது. இங்கு சூதும் வாதும் நிரம்பினால், மக்களை வைதீகர்கள் ஏமாற்றினால், சிவாச்சாரியார்கள் குழப்பம் விளைவித் தால், துறவிகள் தவறு செய்தால், ஜனங்களை அலட்சியமாக நினைத்தால் மதம் க்ஷீணமடையும். எதிர்ப்பாளர்கள் நிச்சயம் தோன்றுவார்கள்.

ஒவ்வொரு முறை கர்ப்பூர ஆரத்தி காட்டுகிற போதும், எதிரே இருக்கிற மக்கள் முக்கியம் என்று காட்ட வேண்டும். ஒவ்வொரு முறை அபிஷேகம் செய்கிற பொழுதும் எதிரே இருக்கிற மக்கள் ஆனந்தமடைய வேண்டும். எல்லா ஜனங்களுக்கும் குளுமை போய் சேரவேண்டும் என்று நம்பிக்கையோடு பூஜை செய்ய வேண்டும். சிவாச்சாரியாக இருப்பது ஒரு உத்தியோக மல்ல. அது ஒரு கடமை. மிகப்பெரிய உன்னதமான விஷயம். விடுமுறை வேண்டும், போனஸ் வேண்டும் என்று முரண்டு பிடித்தால் ஜனங்கள் அலட்சியம் பண்ண ஆரம்பித்து விடுவார்கள்.

மிகப்பொறுப்பு மிகுந்த உத்தியோகம் இது. நான் இஷ்டி நடத்தி வைக்கிறேன். இஷ்டி நடத்துகிற வீட்டிற்குள் நுழையும் போதே உள்ளுக்குள் ஒரு பயமும், பணிவும் தேவதைகள் மீது ஒரு வேண்டுதலும் எனக்கு ஏற்பட்டுவிடும். என் ஒவ்வொரு செயலும் தேவதைகளால் அங்கீகரிக்கப்பட வேண்டும் என்று விரும்புகின்றேன். அந்த ஆவலோடேயே இந்த எஜமானுக்குச் சகல சௌக்கியமும் ஏற்படட்டும் என்று முழு மனதாக தீர்மானம் செய்து நான் இஷ்டி யாகம் செய்கிறேன். அது பலனளிக்கிறது. அது பலனளிக்கிற போது எனக்கு மரியாதையும், மதிப்பும், வசதியும் கிடைக்கின்றன. எல்லா வேலையிலும் சத்தியம் முக்கியம். சிவாச்சாரியராகவும், வேதியராகவும் இருப்பதற்குக் கூடுதலான சத்தியம் தேவைப்படுகிறது. இந்த வேலையில் சத்தியவான்கள் இருக்க, நம் மதத்திற்கு அழிவே இல்லை. நான் சொல்வது சரியா. அப்பாவியாய் என் நண்பன் கேட்டான்.

கைகூப்பினேன், காலில் விழுந்து நமஸ்கரித்தேன்.

"உன்னை வேதம் புடம்போட்டிருக்கிறதடா." என்று அவன் கைகளைக் கண்களில் ஒற்றிக் கொண்டேன்.

அவனும் அவ்விதமே செய்தான்.

"நீயும் ஒரு மஹானின் நாற்றங்கால். நானும் ஒரு மஹானின் நாற்றங்கால். நம்முடைய வேலை ஜனங்களுக்கு சத்தியம் சொல்வது." என்று

சொன்னான்.

ஒரு தபஸ்வியின் யோகபலம் தான் பொதுமக்களின் வாழ்க்கை என்பது எனக்குப் புரிந்தது.

## கடவுள் ஸ்நேகிதம்

சென்னை நகரத்தின் இருதயப் பகுதியான மயிலாப்பூருக்கு வந்திருக்கிறீர்களா. அடர்த்தியான வீடுகளும், பரபரப்பான தெருக்களும், தேர்த் திருவிழாக்களும், கச்சேரிகளும் அரசியல் கூட்டங் களும், இறையறாது நடந்து கொண்டிருக்கும் மயிலாப்பூர் ஆயிரம் வருடங்களுக்கு முன்பு எப்படியிருக்கும் என்று கற்பனை செய்ய முடியுமா.

போர்ச்சுகீசியர் காலத்தில் கடற்கரை ஓரமாக இருந்த கபாலீஸ்வரர் கோயில் இடிக்கப்பட்டு கோயில் உள்ளுக்குள் இடம் மாற்றப்பட்ட காலத்திலிருந்து மயிலாப்பூரில் திகழ்வுற விளங்கியிருக்கும் பல கட்டடங்கள் இன்னமும் இருக்கின்றன.

அதாவது இப்போதைய மயிலாப்பூர் கோயிலை விட பல நூறு வருடங்கள் பழைமையான கோயில்கள் மயிலாப்பூரில் உண்டு. அதில் ஒன்று வாலீஸ்வரர் கோயில்.

மயிலாப்பூரின் எல்லைக்காவலான கோல விழியம்மன் கோயிலுக்கு எதிரே மிகப்பெரும் பரப்பில் இருந்த கோயில் இப்போது குறுகி, பல பேரால் நிலம் கையகப்படுத்தப்பட்டு, சிறிய பரப்பில் குத்து விளக்காய் இருந்து வருகிறது. கோயிலின் பழைமையை முன் மண்டபம் தெளிவாகக் காட்டுகிறது. மூலவர் விக்ரஹம் மிக ஈர்ப்பாக இருக்கிறது.

அதென்ன வாலீஸ்வரர். வானர அரசன் வாலியால் வணங்கப்பட்ட ஈசன் என்பதால் வாலீஸ்வரர் என்ற பெயர் வந்தது.

பரத கண்டத்தின் நான்கு திக்கிற்கும் தாவிப்போய் வாலி சிவ பூஜை செய்ததாக ஒரு கதை உண்டு. வாலியின் கிழக்குப் பக்க பூஜை நடந்த இடம் மயிலாப்பூர். பூஜை செய்த சிவலிங்கம் வாலீஸ்வரர்.

வலிமையும், எதிரிகளை வெல்லும் திறனும், கடவுள் தரிசனமும் வேண்டுமென்று வாலி கேட்க, அவன் வேண்டியவையாவும் அவனுக்குக் கிடைத்தன.

சிவன் சந்நிதிக்கு அருகேயே வாலியும் சிலா

ரூபமாகக் கை கூப்பி நிற்கிறார். அம்மனின் பெயர் பெரிய நாயகி. விநாயகரும், துர்க்கையும், தட்சிணாமூர்த்தியும் தனித்தனி கோஷ்டங்களில் இருந்தாலும் பஞ்சலிங்கம் என்ற ஒரு தனிச் சந்நிதி மிகச் சிறப்பாக இருக்கிறது. ஒரு பெரிய லிங்கம் சுற்றி நான்கு திக்குகளில் நான்கு சிவலிங்கங்கள் ஆவுடையார் இல்லாமல் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கின்றன. ஐந்து லிங்கங்களையும் ஒரு சேரப் பார்க்க உள்ளுக்குள் ஏதோ ஒரு பிடிப்பு ஏற்படுகிறது. மனத்திற்குள் தனியாக ஒரு மீட்டர் பேசுகிறது. இது யாரேனும் ஜீவன் முக்தி அடங்கியிருக்கும் இடமோ என்ற சந்தேகம் வருகிறது.

வேறு வசதிகள் இல்லாததால் இந்த சந்நிதியே வாகன மண்டபமாக, தட்டு முட்டுச் சாமான்கள் இருக்கும் இடமாக வைத்திருக்கிறார்கள். ஆயினும் அதிர்வுக்குக் குறைவே இல்லை. நெடுநேரம் அங்கேயே நிற்க வேண்டும் என்ற எண்ணம் உண்டாகிறது. மனம் எளிதில் ஒருமைப் படுகிறது.

ஒருநாள் மாலை அங்குள்ள சில நண்பர்களிடம் ஆதிசங்கரர் கனகதாரா ஸ்தோத்திரம் சொன்ன நிகழ்ச்சியை கதையாக விவரித்தேன். என்னை மீறி அந்தக் கதை தங்கு தடையின்றி சுகமாக அருவிபோல் பொங்கி வந்தது. என் கதையை அங்குள்ள நண்பர்கள் மட்டுமன்றி அந்த பஞ்சலிங்கத்தில் குடியிருந்தவரும் கேட்டதாக உணர்ந்தேன்.

கோயில் மிக எளிமையான தோற்றமுடையது. அதிக வருமானமற்றது. பெரிய மிட்டா மிராசுவாய் கபாலி இருக்க, ஒரு சிறு நில்க்கிழாராய் வாலீஸ்வரர் அமர்ந்திருக்கிறார். அருள் புரிகிறார்.

ஆயிரம் வருஷத்துக்கு முந்திய பழைமையான கோயில் இன்னும் சிறப்பாக இருந்திருக்க வேண்டும். ஆனால், தவத்தில் இருக்கும் ஞானிபோல் வாலீஸ்வரர் அமைதியாக அமர்ந்திருக்கிறார். தவம் கலைந்து வாலீஸ்வரர் எழுந்திருக்கும் நாள் வந்து விட்டது.

ஒரு மாலை வேளையில் அல்லது ஞாயிறு காலையில் வாலீஸ்வரரைத் தேடிப் போய் தரிசனம் செய்யுங்கள். அந்தக் கோயிலுக்குச் சிறியதாய் உதவி செய்யுங்கள். மிகப்பெரிய பலனை நிச்சயம் பெறுவீர்கள். கொடுப்பதும் பெறுவதும் ஒரு பக்கம் இருக்க வாலீஸ்வரரை ஒருமுறை தரிசனம் செய்து பஞ்சலிங்கேஸ்வரரை ஸ்நேகிதமாக்கிக் கொண்டால் போதும் திரும்பத் திரும்ப அங்கு வரத்தோன்றும்.

வந்து நின்றாலே நிம்மதி பரவும். கையேந்தி இதைக் கொடு, அதைக் கொடு என்று கேட்பதை விட, கடவுளை ஸ்நேகிதமாக்கிக் கொள்வதே நல்லது. அதுவே உயர்வு.

அருள்மிகு வாலீஸ்வரர் கோயிலுள்ள பஞ்சலிங்கேஸ்வரர் ஒருமுறை தரிசனத்திலேயே நிச்சயம் உங்களுக்கு ஸ்நேகிதமாவார். வாருங்கள். வந்து ஸ்நேகிதம் கொள்ளுங்கள்.

## சத்தியத்திற்கு துணை நிற்கும் சரபேஸ்வரம்

"நாராயணா, நாராயணா என்று புலம்புகிறாயே அந்த நாராயணன் எங்கிருக்கிறார் என்று காட்டு. அவன் என்னைவிட வலுவுள்ளவனா, என்னை விட திறமை மிக்கவனா. அப்படியாயின் நான் உடனே அதை சோதித்துப் பார்க்க வேண்டும். அவன் எங்கிருக்கிறான் என்று சொல்." என்று ஹிரண்யகசிபு வினவ, மகன் பிரகலாதன், "அவர் எங்கும் இருக்கிறார் அப்பா." என்று பதில் சொல்ல, "இந்த தூணில் இருக்கிறானா" என்று ஹிரண்யகசிபு கேட்க, "நிச்சயமாய் இருக்கிறாரப்பா." என்று பிள்ளை தத்துவம் சொல்ல, ஓங்கி கதையால் தூணை அடிக்க, தூண் அதிர்ந்து பிளந்து உள்ளுக்குள் இருந்து நரசிம்மம் எழுந்தது.

ஹிரண்யகசிபுவை இரவும், பகலுமில்லாத நேரத்தில், வெளியேயும், உள்ளேயும் இல்லாத வாயிற்படியில், மேலும், கீழும் இல்லாது மடியில் போட்டுக் கொண்டு கிழித்து வதம் செய்தது நரசிம்மம்.

மிக மோசமான ஒரு சக்தியை மக்களை கொடுமைப்படுத்திக் கொண்டிருந்த ஒரு அதிகாரத்தை தெய்வம் தின்று கொன்றது. கொன்றுவிட்டு கோபம் அடங்காமல் தவித்தது. ஒரு சக்தியை அழிக்க மிகப்பெரிய சக்தி தோன்றியது. ஆனால், அந்த சக்தி தன்னுடைய பலத்தை குறைக்க முடியாமல் அவஸ்தைப் பட்டது. அந்த சக்தியையும் விட மிகப்பெரிய சக்தி ஒன்று தோன்ற வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

சிவபெருமானுடைய சேனாதிபதியான வீரபத்ரர் நரசிம்மருக்கு எதிரே போய் "ஐயனே, உங்களுடைய கோபத்தை குறைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் எதற்காகத் தோன்றினீர்களோ, அந்த அவதார மகிமை

நிறைவேறி விட்டது. உங்களால் ஹிரண்யகசிபுவின் வதம் முடிந்து விட்டது. எனவே, சாந்தமடையுங்கள்." என்று சொல்ல, வீரபத்ரரை லட்சியம் செய்யாமல் நரசிம்மம் வீரபத்ரரை கட்டிப்பிடித்து இம்சித்து அடித்துத் துரத்த, வீரபத்ரர் சிவபெருமானை வேண்டினார்.

சிவபெருமான் உடனே தன்னுடைய சக்தியை வீரபத்ரருக்குத் தர, வீரபத்ரர் மனிதனாகவும், விலங்காகவும் இருக்கின்ற நரசிம்மரின் உக்கிரத்தைத் தணிக்க, விலங்காகவும், பறவையாகவும், யானையின் முகத்தோடும் உருவமெடுத்தார். அவருக்கு இரண்டு சிறகுகள் முளைத்தன. பிரத்யங்கராதேவி என்ற சிறகும், சூலினி துர்கா என்ற ஒரு சிறகும் தோன்றியது. மிக வலிமையுள்ள இரண்டு பெண்களும், மிக வலிமையுள்ள ஒரு ஆணும், மிக உக்கிரமான நிலையிலுள்ள நரசிம்ம மூர்த்தியை அணைத்து, அழுத்தி நகரவொட்டாமல் செய்து, அவர் உக்கிரத்தை மெல்ல மெல்ல குறைத்தார்கள்.

வெளியிலே ஒரு சண்டை நடந்து கொண்டிருக்கிறது. ஒரு தர்மிஷ்டன் கோபம் அடைந்து நியாயம் செய்தவர்களை கீழே இறங்கி கைத்தடியால் தண்டிக்க, தண்டிக்கப்பட்டவர்கள் நகங்கி விழ, மற்றவர் புறம்காட்டி ஓட, தண்டித்தவர் கோபமடங்காமல் முன்னும் பின்னும் அலைய, இன்னும் எல்லோரையும் அழிக்கிறேன் பார் என்று நாலாபுறமும் ஓட, அந்த தர்மிஷ்டருக்கு வேண்டியவர்கள் அவரை சாந்தப் படுத்துவதற்காக எங்கும் அசையாமல் இருக்க, கட்டிக் கொண்டும் அவர் வீட்டுப் பெண்கள் சூழ வந்து அவரை சமாதானப் படுத்துவதும் நடப்பது போல, சரபர் என்ற வடிவமெடுத்த சிவபெருமான், இறக்கையாக இரண்டு பெண்கள் தோன்றி இரண்டு சிறகுகளாக மாறி, மெல்ல மெல்ல வீசி நரசிம்மனின் உக்கிரத்தை தணித்தார்கள்.

நரசிம்மர் போன்ற உக்கிரத்தை சாதாரணப் பெண்களால் தாக்குப் பிடிக்க முடியுமா. அவரை அமைதிப்படுத்திவிட முடியுமா. மிக உக்கிரமுள்ள பெண்களான அதர்வரை பத்ரகாளியான பிரத்யங் கராவும், சூலினி துர்கையும் இதற்கு தேவைப் பட்டார்கள். சிவபெருமானுக்கு உதவினார்கள்.

உக்கிரம் என்பது என்ன.

மனதின் சீற்றம். மனம் சீற்றமடையும்பொழுது தான் என்ன செய்கிறோம் என்று தெரியாமல், கட்டுக்

கடங்காமல் சம்மந்தப்பட்டவர்களை தண்டிப்பதோடு மட்டுமில்லாமல் சுற்றியிருந்தவர்களையும் துவம்சம் செய்யக் கிளம்பி விடுகிறது.

மனதின் சீற்றம் எப்பொழுது ஏற்படுகிறது.

நீங்கள் அவமானப்படுகிறபொழுது, உங்களை வழிப்படுத்த ஆளின்றி அனாதையாக நிற்கும் பொழுது, உங்களுக்கு பொருள் வரவு குறைந்துவிட்ட பொழுது, உங்களுக்கு உயிரினும் இனிய நல்ல நண்பர்கள், உறவுகள் உங்களை விட்டு பிரிய நேரும்பொழுது, உங்களுக்கு மனச்சீற்றம் ஏற்படுகிறது. தாங்க முடியாத இந்த சீற்றத்தின் விளைவால் வேறு ஒரு சீற்றம் ஏற்படுகிறது. அது உடல் சீற்றம்.

உடல் சீற்றம் என்பது என்ன.

நோய். மனச்சீற்றத்தின் வேகத்தையும், மனச் சீற்றத்தால் ஏற்பட்ட உடல் சீற்றத்தின் வேகத்தையும் குறைப்பதற்கு நரசிம்மரின் உக்கிரத்தைக் குறைத்த சரபேஸ்வரர், அதாவது சிவபெருமானின் உக்கிர வடிவம் உங்களுக்கு வெகு நிச்சயமாய் உதவி செய்யும்.

நரசிம்ம செருக்கதனைத் தகர்க்க வந்த
பரமசிவம் சரபமதாய் எழுந்த மூர்த்தி
வரமருளும் கருணை மிருகம் பறவையாக
சுரர் தமது இடர் தீர்த்த சுருதிக் கோவே
சிரம் இரண்டும் கண் மூன்றும் நெடிய மூக்கும்
கரம் நான்கும் சுடராழியும் பாதம் எட்டும்
புரம் மூன்றும் எரித்த சிவன் சாலுவேசன்
நரசிம்ம வெகுளியற வந்தாய் வாழி.

- சாக்த ஸ்ரீ வைத்யநாத சாஸ்திரிகள்

நரசிம்மம் சிம்மமாகவும், மனிதனாகவும் வந்த போது மனிதன், யாளி, பட்சி என்று மூன்றுமாக கலந்த உருவம் சரபேஸ்வர மூர்த்தி.

அதென்ன சாலுவேசன் என்கிற வார்த்தை.

சாளுக்கியர்களுக்கு சாலுவேசர்கள் என்று பெயர். கீழைச்சாளுக்கியர்கள், மேலைச்சாளுக்கியர்கள் என்று இரண்டு வகைப்படுவார்கள். மேலைச் சாளுக்கியர்கள் நரசிம்மரை குலதெய்வமாகக் கொள்ள, கிழக்கே உள்ள சாளுக்கியர்கள் சரபமூர்த்தியை தங்கள் தெய்வமாகக் கொண்டாடினார்கள்.

அந்த கிழக்கு சாளுக்கியர்களிடமிருந்து சரபர் வழிபாடு சோழ தேசத்திற்குள் நுழைந்தது.

திருபுவனம் என்கிற ஊரில் உலோகத்தால் செய்யப்பட்ட சரபேஸ்வர மூர்த்திக்கு ஐந்து கால

பூஜையும், அபிஷேக ஆராதனைகளும் இன்னும் நடைபெற்று வருகின்றன. திருபுவனத்தில் உள்ள சரபேஸ்வரர் மிக சக்தி வாய்ந்தவர் என்று சொல்லப் படுகிறது. அதேபோல சென்னையிலும் மிக நல்ல முறையில் சரபேஸ்வரர் உருவம் ஸ்தாபிக்க வேண்டும் என்று கருதி டாக்டர் விஸ்வநாத சிவாச்சாரியார் அவர்கள் தலைமையில் மயிலாப்பூர் சீனியர் வக்கீல் ஷண்முகநாதன் அவர்கள் ஆதரவினாலும், ஜோசியர் ஜெயராமன் அவர்களுடைய முயற்சியினாலும் சரபமூர்த்திக்கு, வெள்ளீஸ்வரர் கோயிலில் தனி சன்னதி ஏற்பட்டிருக்கிறது.

வெள்ளீஸ்வரர் கோயில் எங்கிருக்கிறது.

மயிலாப்பூர் கபாலீஸ்வரர் கோவிலை ஒட்டி, தெற்குப் பக்கம் மிக அழகான ரம்மியமான ஒரு கோயில் அது. சுக்கிரன் வழிபட்ட தலம் என்பதால் வெள்ளீஸ்வரர் என்று அவருக்குப் பெயர் வந்தது. அந்த வெள்ளீஸ்வரர் கோவிலில் பொதுமக்களின் வழிபாட்டு நலனுக்காக சரபேஸ்வரரை அவர்கள் ஸ்தாபிதம் செய்திருக்கிறார்கள்.

மனச்சீற்றமும், உடல்சீற்றமும் நீக்குகின்ற அருளாசியை சரபேஸ்வரர் வாரி வாரி வழங்குவார் என்பதால், ஐந்து கால பூஜையோடு மிகச்சிறப்பான வழிபாட்டு விஷயங்களை நிர்ணயம் செய்து, தனி சன்னதியை மிக அழகாக நிறுவியிருக்கிறார்கள். மூன்றடி உயரத்திற்கும் மேலாகக் கொண்ட ஆகம விதிகளுக்கு உள்ளடங்கிய அந்த மூர்த்தி, பிராணப் பிரதிஷ்டை செய்யப்பட்டு மக்களுக்கு அருளாசியை வழங்கிக் கொண்டிருக்கும்.

பேராபத்து, பூகம்பம், தீ விபத்து, மண்மாரி, இடி, புயல், மின்னல், பரிகாரம் காணமுடியாத துன்பம், வைத்தியர்கள் கைவிட்டுவிட்ட வியாதிகள், பைத்தியம், விஷபயம், பூதப்பிரேத பைசாசங்களால் உண்டான பயம், அகால மரணம் இவற்றை நீக்கி அருளுகின்ற சக்தியை உடையவர் சரபேஸ்வரர் என்று சொல்லப்படுகிறது.

உண்மையில் சரபதத்துவம் அடிப்படை விஷயம் என்ன.

இந்திரியங்களின் சக்திதான் ஹிரண்யகசிபு. உடல் வலிமை, புத்தி வலிமை, மனோ வலிமை கொண்டவன் ஹிரண்யகசிபு. அந்த இந்திரியங்களை அடக்குகின்ற விஷயம்தான் நரசிம்மம். இந்திரியங்களை நான் அடக்கி

விட்டேன் என்று கர்வத்தோடு "நான்" அலைகிறபோது, "நான்" என்கிற அகங்காரம் திமிறிக் கொண்டிருக்கிற பொழுது, அந்த "நான்" என்கிற அகங்காரத்தையும் அடக்க வேண்டுமென்று சரபமூர்த்தி வந்து அந்த "நானை" அடக்குகிறார். சரபம் என்பது ஞானம்.

சரபமூர்த்தி வழிபாடு மிகச்சிறப்பான பலன்களை வழிபடுவோருக்குத் தரும் என்பதில் சந்தேகமேயில்லை. வழிபடுவதற்கு எளிதாக சென்னை நகரின் மையப் பகுதியான மயிலாப்பூரில் காமாட்சி உடனுறை வெள்ளீஸ்வரர் கோவிலில் மிக அற்புதமாக அந்த மூர்த்தி ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. எனவே, ஆன்மீக அன்பர்கள் கலந்து கொண்டு, சரபேஸ்வரரின் அருளைப் பெறவேண்டுமென்று வேண்டுகிறேன்.

## தனிமை விரதம்

சில இந்துக் குடும்பங்களில் வழிபாடு என்பது மாலை போட்டுக் கொள்ளுதலும், கருப்பு உடை தரித்தலும், அல்லது காவி வேட்டி அணிதலும், விரதமிருக்கிறேன் என்று வெளியே காட்டிக் கொள்ள சிகை வளர்த்தலும், பெரிதாய் சந்தனம் பூசிக் கொள்ளுதலும் என்பதாய் சற்று அலட்டலாய் இருப்பதை நான் உணர்ந்திருக்கிறேன்.

வழிபாடு என்பதை விளம்பரமாகச் செய்வதுதான் எங்களுடைய வழக்கம் என்பது போலவே இவர்கள் நடந்து கொள்கிறார்கள். மலைக்குப் போறேன். மலைக்குப் போறேன் என்று பீற்றிக் கொள்ளுகிறார்கள். ஒருவரையொருவர் சாமி என்று போலிப்பணிவோடு கும்பிடுகிறார்கள். உண்மையில் இந்த வழிபாடு மிகப் பெரிய அகங்காரத்தை தோற்றுவிக்கிறது. நான் பலபேர் முகத்திலும், பேச்சிலும், செய்கையிலும் கண்டிருக்கிறேன். இதைத் தொடாதே, அதைத் தொடாதே, இங்கே வைக்காதே, அங்கே வைக்காதே என்று பல்வேறு விதமாக தங்களுக்குத் தாங்களே ஏற்படுத்திக் கொண்ட நீதிகளை வீட்டாரின் மீது தீவிரமாக செலுத்துவதையே மிக முக்கியமான சடங்காகவும் சிலர் வைத்திருக்கிறார்கள். பிள்ளைகள் கூட மேலே பட்டுவிடக்கூடாது என்று மூர்க்கமாக நடந்து கொள்கிறார்கள். மடி; ஆசாரம் என்பதெல்லாம் பிரமாதமான விஷயம்தான். அவைகளுக்கு நல்ல

குறிக்கோள்கள் இருக்கின்றன என்பது உண்மைதான். அவைகளால் மனம் பக்குவப்படுகிறது என்பது சரிதான். ஆனால், இதற்கு அடிப்படையான எல்லா வழிபாட்டிற்கும் அடிப்படையாய் இருக்கிற அன்பு என்கிற விஷயம் இல்லாது போனால் இவை அத்தனையும் அர்த்தமற்றதாகவே மாறிவிடுகிறது.

இந்த அன்பு என்ற விஷயம் பல சமயங்களில் இந்த மாதிரி ஆடம்பரமான சடங்குகளில் தகர்ந்து போய் விடுகிறது.

இத்தோட பதினெட்டாவது தடவை நான் மலைக்கு போயிட்டு வரேன் என்று குருசாமி ஆக்கிக் கொள்ளும் தீவிரம்தான் ஏற்படுகிறது. தான் என்ற விஷயத்தை அழித்துக் கொள்கின்ற முனைப்பு, தன் அகங்காரத்தை சிதைக்கக் கூடிய விஷயம் இதில் ஏற்படவேயில்லை. எதிர்மறையாகத்தான் இந்த பூஜைகள் சிலரால் செய்யப் படுகின்றன.

விரதம் மேற்கொண்ட அத்தனை பேரும் எங்கேனும் போய் பொங்கல் சாப்பிடுவதற்கு பரபரக்காமல், வீட்டு பூஜையிலும் கலந்து கொண்டு கோஷம் இடுவதற்கு முற்படாமல் தனியே சில மணி நேரங்கள் ஆழ்ந்து அமைதியாய் உட்காருவதற்கு பழக்கப்படுத்திக் கொள்ள வேண்டும்.

ஐயப்பன் நாமமோ, ராம நாமமோ, சிவ நாமமோ எங்கனேும் தனித்து உட்கார்ந்து இடையறாது ஜபித்தால் மிகப்பெரிய சந்துஷ்டியைத் தரும்.

தனியே இருப்பதற்காகத்தான் இந்த மாதிரியான யாத்திரைகள் ஏற்படுத்தப்பட்டன. ஆனால், இதை முற்றிலும் மறந்து விட்டு கும்பல் கும்பலாய் குழு மனப்பான்மையோடு நடந்து கொள்வதே அதிகம் ஏற்படுகிறது. தனியாக இருக்கும்பொழுது தான் யார் என்ற கேள்வியும், தனக்கு என்ன யோக்கியதை இருக்கிறதென்ற கேள்வியும், தன்னுடைய பூஜை பலமானதுதானா, அதற்கு வலு இருக்கிறதா என்ற கேள்விகள் எழும். எப்பொழுது கேள்வி எழுந்ததோ அப்பொழுது பதிலும் நிச்சயம் எழும். தனிமையாக இல்லாத போது கேள்விகளே இருக்காது. தனக்கு எல்லாம் தெரியும் என்கிற அகங்காரமே அதிகம் இருக்கும். அந்த அகங்காரம் அடுத்தவரின் மீது வெகுநிச்சயமாய் பாயும். அவர் அகங்காரம் அடுத்தவர் அகங்காரத்தைச் சீண்டிப் பார்க்க, அவர் அகங்காரமும் வெளிப்பட, அகங்காரம் மட்டுமே அங்கு தலை

விரித்தாடும். தெய்வ வழிபாடு என்பதின் விஷயத்தின் அடிப்படையே ஆட்டம் கொள்ளும். விரதம் என்பது உடை மட்டுமல்ல. மாலை மட்டுமல்ல. வெறும் சரண கோஷங்கள் மட்டுமல்ல. அதே சரண கோஷத்தை தனித்திருந்து உள்ளுக்குள் திரும்பச் சொல்லுகிற போது, உங்கள் விரதம் மேலும் பலம் பெறுவதை உணர்கிறீர்கள்.

வெறுமே அமைதியாக உட்கார்ந்தால் போதுமா.

இல்லை. உடம்பு அமைதியாக உட்கார்ந்தாலும் மனம் பழக்க தோஷத்தினால் நாலாபக்கமும் துள்ளும்.

நாலாபக்கமும் அலைகின்ற மனதை இழுத்துப் பிடித்து நிறுத்தி வைப்பது எப்படி.

பிராணாயாமம்.

பிராணாயாமத்தின் முதல் படி என்ன.

நாடி சுத்தி.

நாடி சுத்தி என்றால் என்ன அர்த்தம்.

இடது மூக்கில் எட்டு எண்ணிக்கை இழுத்து, வலது மூக்கு வழியாக பதினாறு எண்ணிக்கை விட்டு, மறுபடியும் வலதின் வழியாக எட்டு இழுத்து, பதினாறு எண்ணிக்கை இடது வழியாக விடும்போது ஒரு ஆழ்ந்த சுவாசம் ஏற்படுகிறது.

இப்படி நான் சொல்வது புரியவில்லை என்றால் யாரிடமாவது நேராகக் கற்றுக் கொள்ளலாம். நேராகக் கற்றுக் கொள்ளும்பொழுது ஆழ்ந்து மூச்சு இழுத்து நிதானமாக வெளிவிடுகின்ற சாதாரணமான பயிற்சியை நீங்கள் அழகாகச் செய்யலாம். இதை நிதானமாக செய்கிறபோது உள்ளுக்குள் ஒரு அமைதி பரவும். உங்கள் இருப்பு பலப்படும். உட்காருவது எப்படி என்று தெளிவாகும். அடுத்த முறை விரதம் மேற்கொள்ளும்போது எவ்வளவு நேரம் அமைதியாக இருக்க முடியும். எத்தனை நாட்கள் தனித்திருக்க முடியும் என்று உள்ளுக்குள் திட்டமிடுங்கள். அதன்படியே சரண கோஷத்தையே மந்திரம் போல திரும்பத் திரும்ப உள்ளுக்குள் கண்மூடி அமைதியாய் சொல்லி வாருங்கள். முதலில் உரக்கச் சொல்லிவிட்டு பிறகு உதடு மட்டும் முணுமுணுக்கச் சொல்லுங்கள். பிறகு அதையும் நிறுத்தி விட்டு உள்ளுக்குள் மட்டும் சொல்லிக் கொள்ளுங்கள். ஒரு மணி நேரம் கழித்து கண்விழித்துப் பார்த்தால், உலகமே வேறுவிதமாக இருக்கும். மனதில் இனந்தெரியாத அமைதியும், சந்தோஷமும் குடி கொள்ளும். எப்பொழுதும் ஒரு

நிரந்தரமான புன்னகை இருக்கும். தோலில் உள்ள வழவழப்பு கூடும். கண்கள் பிரகாசிக்கும்.

மலைக்கே போகாமல் ஐயப்பனை பார்த்துவிட்ட சந்தோஷம் உங்களுக்கு ஏற்பட்டாலும் ஆச்சரியப் படுவதற்கில்லை. இந்த முறை மாலை போட்டுக் கொண்ட கையோடு தனிமை விரதமும் இருந்து பாருங்கள்.

உங்கள் தவம் சிறக்க என் மனப்பூர்வமான வாழ்த்துக் களை என் சத்குருநாதன் யோகி ராம்சுரத்குமார் அவர்களின் பெயர் சொல்லி பிரார்த்திக்கிறேன்.

## மயிலை கபாலீசுவரர் வரப்பிரசாதி

ஒரு அன்பர் தன்னுடைய நண்பருக்குத் தன் ஊர் கோயிலைப்பற்றிச் சொல்லும்போது என்ன சொல்வார். என்ன சொன்னால் அந்தக் கோவிலின் புகழ் எடுபடும். அந்தக் கோவிலைப் புகழ மிகச்சரியான வாக்கியம் எது.

எங்கள் கோவிலின் மூலவர் வரப்பிரசாதி. உன் மகளுக்குத் திருமணம் நடக்க வேண்டுமா. இங்கு வந்து அவரை வேண்டிக் கொள். உன் மனைவியின் நோய் தீர வேண்டுமா. வந்து கை கூப்பு. உனக்கு வீடு நிலபுலன்கள் வாங்க வேண்டுமா. இதோ இவர் இருக்கிறார். நெடுஞ்சாண்கிடையாக விழுந்து இவரிடம் சரணம் அடைந்து விடு. ஏனெனில், எங்கள் கோவில் மூலவர் வரப்பிரசாதி. கேட்டதைக் கேட்ட விதத்தில், கேட்ட நேரத்தில் கொடுக்கக்கூடிய வல்லமையுள்ள கடவுள் என்று தானே சொல்வார்.

உங்களுக்குக் கபாலீசுவரரையும், கற்பகாம் பாளையும் அறிமுகப்படுத்த வேண்டிய சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்தால் நான் உடனடியாய் எங்கள் மயிலை கபாலீசுவரர் வரப்பிரசாதி என்றுதான் சொல் வேன். கேட்டதைக் கேட்ட விதத்தில் கேட்டவுடனேயே கொடுக்கின்ற தெய்வம் என்றுதான் புகழ்வேன்.

என் தாய் கற்பகாம்பாள் மிகப்பெரிய மனுஷி. மத்திய வயதுப் பெண்மணி. குடும்பம் என்ற விளக்கைத் தூண்டிவிட்டு அணையாமல் காக்கும் தெய்வம். பெண்களைத் தன்பால் வெகு எளிதாய் ஈர்க்கும் பேரிளம் பெண்.

ஒரு தெய்வத்தை வரப்பிரசாதி என்று ஒருவர் சொல்ல வேண்டுமென்றால், அவர் வாழ்வில் ஒரு அனுபவ சாட்சியம் இருக்க வேண்டுமல்லவா.

கையில் கொஞ்சம் காசு வைத்துக் கொண்டு வீடு வேண்டும். வீடு வேண்டும் என்று ராயப் பேட்டையிலிருந்து தாம்பரம் சேலையூர் வரை பல இடங்கள் போய்ப் பார்த்தும் எதுவும் என் மனசுக்கு ஒப்பவில்லை.

இரண்டு மாமரம், ஒரு வேப்பமரம், ஒரு பாரிஜாதம் என்று சூழ்ந்திருக்கிற ஒரு இருபது வருட பழைய வீட்டைத் தாம்பரத்தில் பார்த்து, முன் பணம் கொடுத்து விடுவோமா என்று தவித்துக் கொண்டிருந்தபோது, 'இந்த மயிலாப்பூரை விட்டு எப்படிப் போவது' என்கிற எண்ணம் எழுந்தது.

மயிலாப்பூரா.. சேலையூரா என்று மனம் தத்தளித்தது. நெரிசலாக இருந்தாலும், தெருக்கள் குறுகலாக இருந்தாலும் மயிலாப்பூரே எனக்கு வேண்டுமென்று என் மனம் முடிவு செய்தது. தினந்தோறும் கபாலீசுவரரையும், கற்பகாம்பாளையும் பார்க்கின்ற பெரும்பாக்கியத்தை இழக்க வேண்டாமென்று என்னை என் மனம் எச்சரித்தது.

ஆனால், நகரத்திற்குள் நல்ல வீடு கிடைப்பது மிக அரிதாக இருந்தது. நல்ல வீடாய் இருந்தால் விலை அதிகம். விலை குறைவைப் பார்த்தால் வீடு மனசுக்குப் பிடிக்கவில்லை. ஏன் வீடு அமையவில்லை. ஒரு வேளை மயிலையில் வாழும் பெரும்பேறு எங்களுக்கில்லையோ என மனம் மருகினேன். வீடு சம்பந்தமாய் ஒரு நண்பரோடு பேசிவிட்டு இரவு பதினோரு மணி வாக்கில் கபாலீசுவரர் கோவிலைத் தாண்டும்போது, சட்டென்று ஸ்கூட்டரை விட்டுக் கீழிறங்கி, நடுத் தெருவில் பிள்ளையார் சன்னதிக்கு நேர் எதிரே பெரிய கோபுர வாசலில் நானும் என் மனைவியும் விழுந்து வணங்கினோம்.

கபாலீசுவரா.. அருளுடை நாயகா.. அன்புத் தமையனே எங்களுக்கு உன்னுடைய ஊர் எல்லையிலேயே ஒரு வீடு கொடுக்கலாகாதா. நாங்கள் எதற்குச் சேலையூரும் இன்னும் பிற இடத்திற்கும் போக வேண்டும் என்று கண்ணில் நீர் தளும்ப வேண்டிக் கொண்டோம்.

கபாலீசுவரர் என்பவர் எனக்குள் எப்போதுமே ஐம்பது வயதுக்கு மேற்பட்ட ஆஜானுபாகுவான உருவமுள்ளவராகத்தான் நினைக்க வரும். தாய்

என்பதைவிட மன்னி என்பதாகத்தான் கற்பகாம்பாளை என் மனசு நேசிக்கும். அப்படி வேண்டிக் கொண்ட இருபத்தியோராம் நாள் ஒரு வீடு மனதிற்குப் பிடித்து, முன் பணம் கொடுத்து, மீதி காசுக்கும் விரைவாய் ஏற்பாடாகி, ஒரே மாதத்தில் ஒரு அமைதியான அடுக்குமாடிக் கட்டிடத்தின் ஒரு பகுதி எங்களுக்குச் சொந்தமாகி விட்டது.

நான் வேண்டியதில் ஒரு சிறிய பிசகு இருந்தது. உன் எல்லைக்குள் என்று நான் வேண்டிக் கொண்டிருக்க வேண்டும். உனது எல்லையில் என்று நான் வேண்டிக் கொண்டு விட்டேன்.

கபாலீஸ்வரர் வரப்பிரசாதி. சொன்ன சொல் மீறாதவர். நான் வேண்டிக் கொண்டது போலவே மயிலையின் எல்லையில் எனக்கு வீடு அமைந்தது. என் தெரு மயிலை. என் பின்தெரு அபிராமபுரம்.

கபாலீசுவரரும், கற்பகாம்பாளும் வரப்பிரசாதி என்பதற்கு இதைவிடவும் வேறு என்ன சாட்சியம் சொல்ல முடியும்.

இறந்து எரியுண்டு எலும்பாய் போனபூம்பாவை மறுபடியும் உருவாய் வந்த அற்புதம் நிகழ்ந்த ஊர் மயிலாப்பூர். அற்புதமான சிற்பங்கள் ஏதும் கோவிலில் இல்லை. ஆனாலும் கோவிலில் ஏதோ ஒரு அழகு கொஞ்சம்.

கபாலீசுவரர் கோவில் மிகப் பிரமாண்டமான கற்றளி இல்லை. ஆயினும் திரும்பத் திரும்ப வரத்தூண்டுகின்ற மதில்களையுடைய திருமயிலைக் கோவில். நானூறு வருடங்களுக்கு முன்பு அந்நியரின் ஆக்கிரமிப்பால் சேதப்படுத்தப்பட்டு பிறகு புதிய கோயிலாய்க் கட்டப்பட்டது. இந்தக் கோயிலுக்குக் குளம் வெட்டப் பட்டது தனிக்கதை. முழு நாவல். மிகச்சுவையான சரித்திரம். நான்கு மாடவீதிகளும், அறுபத்துமூவர் விழாவும், தேரோட்டமும் குறைவின்றி நடக்கின்ற பண்டிகை கோலாகலங்களுக்கப்பால் கபாலீசுவரர் கோயில் மயிலாப்பூர் வாழ் மக்களால் மிகச் சிறப்பாக பராமரிக்கப்பட்டு வருகிறது. கற்பகாம்பாள் அணிந்திருக்கும் பல நகைகள் மயிலாப்பூர் வாழ் பக்தர்கள் கொடுத்தவை.

திமிருகின்ற பக்தர் கூட்டமும், நான்கு வகையான வேதகோஷமும், சிவன் நாமாவளியும், தேவார திருவாசகப்பாடல்களும் என்று பிரதோஷக் காலம் அமர்க்களப்படும்.

எந்த அழைப்பும் இன்றி, எந்த அமைப்பும் இன்றி பிரதோஷக்காலத்தில் மக்கள் தாங்களாகவே கூடுவதும், கபாலீசுவரரைத் தோளில் தூக்கிச் சுமப்பதும் மிகமிக அழகான உயர்வான விஷயம்.

கபாலீசுவரர் கோவில் என்றதும் அதிகார நந்தி ஞாபகத்திற்கு வருகிறது. கம்பீரமும், கனிவும் கொண்ட அந்த மிகப்பெரிய சிலை சமீபத்தில் வடிக்கப்பட்டது. அதிகார நந்தியை அந்த அழகுக்காகவே காண்பதற்கு வெகுதூரத்திலிருந்து மக்கள் வருவது வழக்கம்.

நான்கு மாடவீதிகளும், மிக அழகான குளமும், உயர்ந்த கோபுரமும், அமைப்பான விமானமும், விசாலமான சுற்றுப்பிரகாரமும் கொண்ட மயிலாப் பூருக்கு ஒருமுறை வந்தால் பலமுறை வரத்தோன்றும். மயிலாப்பூரில் குடி புகுந்து விட்டால் விட்டுப்பிரிய ஒருநாளும் மனமிராது. வேறு எந்த ஊருக்கும் குடிபெயரத் தோன்றாது.

மயிலாப்பூர், கோவிலால் சிறந்த ஊர் அல்ல. கபாலீஸ்வரர் கற்பகாம்பாளின் அனுக்ரகம் அந்த பூமி முழுவதும் பரவிப்படர்ந்திருக்கிறது என்பது என் சொந்த அபிப்ராயம்.

## அமிர்தம்

பாரதம் பாரதீயம் என்று யோசிக்கும் போது எனக்கு சனாதன தர்மம் தான் ஞாபகம் வருகிறது. பாரதம் கொடுத்த மிகப்பெரிய கொடை இந்துமதம் என்கிற இந்த சனாதன தர்மம். பாரதத்தில் வளர்ந்த மிகப்பெரிய ஆலமரம் இந்த சனாதன தர்மம். பாரதத்திலுள்ள எல்லா நதிக்கரையின் நாகரீகங்களும் ஒன்று சேர்ந்து வெளிப்பட்ட விதம்தான் இந்த சனாதன தர்மம். காலத்தால் அழிக்க முடியாத தத்துவ விளக்கங்களின் ஒரு சேர்க்கைதான் இந்த சனாதன தர்மம். இந்த நாகரீகத்தைப் புறக்கணித்துவிட்டு இந்த சனாதன தர்மத்தை மறந்துவிட்டு பாரதம் பற்றி எவரும் எதுவும் பேசிவிடமுடியாது.

வெறும் விதிகளல்ல இந்த சனாதன தர்மம். தனி மனிதனின் குட்டிக் கதைகளல்ல அல்லது வாழ்க்கை வரலாறல்ல இந்த சனாதன தர்மம். நிழல் தெரியாத, விலாசமில்லாத, தன்னை நெல்முனையளவும் வெளிப்படுத்திக் கொள்ளாத ரிஷிகளும், முனிவர்களும்

ஆழ்ந்து இவ்வாழ்வியல் பற்றி யோசித்து, இந்தப் பிரபஞ்சம் பற்றி உள்ளுணர்வால் அறிந்து, மிக ஆழ்ந்த தத்துவ விளக்கங்களை மிக எளிதாக மனித குலத்திற்கு கொடுத்து விட்டுப் போன வேத சாரங்களின் முழு வடிவம் சனாதன தர்மம். இந்தத் தத்துவங்கள் வெறும் புத்தகங்களாகவே இல்லை. அது வாழ்க்கையில் ஒன்றோடொன்று கலந்து போயிற்று. தத்துவங்களை வெறுமே சொன்னால் புரியாது என்று மெல்லிய கதைகளாக்கி அந்தக் கதைகள் மூலம் மிக எளியோர்க்கும் புரியும் வண்ணம் தத்துவத்தை பகிர்ந்து கொள்ளும் முயற்சிதான் சனாதன தர்மம்.

ஏது கடவுள். யார் இந்த உலகத்தைப் படைத்தார். இந்தப் பிரபஞ்சத்தை ஆளும் சக்தி எது என்பதுதான் இந்த உலகத்தில் தோன்றிய அத்தனை மதங்களின் கேள்வியாக இருக்கிறது. தனக்குத் தெரியும் என்று சொன்ன பெரியோர்கள். இதுபற்றி அதிகம் பேசாதே. நான் சொல்வதைக் கேள் என்று சட்டதிட்டங்கள் வகுத்து மக்களிடம் கொடுத்து இதைக் கடைபிடித்து வா போதும். 'உனக்கு நான் சொல்வது புரியாது என்றே புறக்கணித்து விட்டார்கள். ஆனால், சனாதன தர்மம் இல்லை, நீ புரிந்து கொள். புரிந்து கொள்ள முயற்சி செய் என்று வலியுறுத்தி வலியுறுத்தி சாதாரண மக்களுக்கு ஏதேனும் ஒரு கணத்தில் புலப்படட்டும் என்று மிக எளிமையாய் கடவுள் தத்துவத்தை வாரி வழங்கியிருக்கிறது.

எது கடவுள். அது மேலேயும் இல்லை. கீழேயும் இல்லை. அது வெளிச்சத்திலும் இல்லை. இருட்டிலும் இல்லை. அது உள்ளேயும் இல்லை. வெளியேயும் இல்லை. அது நடுவிலே இருக்கிறது. மையத்திலே இருக்கிறது. எல்லா திடப்பொருளுக்கும் மையம் உண்டு. அந்த மையத்தைத் தாக்க அந்த திடப்பொருள் சிதறிவிடுகிறது. இதுதான் பௌதீகம். அந்த மையம்தான் இந்த திடப்பொருளின் அணுக்கூறுகளை இழுத்துப் பிடித்து வைத்துக் கொண்டிருக்கிறது.

அப்படியானால் அணுவுக்கும் மையமுண்டா.

உண்டு. அந்த அணுவின் மையத்தைத் தொட, அந்த அணுவிலிருந்து மிகப்பெரிய பிரமாண்டமான அண்டபேரண்ட சக்தி ஒன்று வெளிப்படுகிறது. அந்த அண்டபேரண்ட சக்தி ஒவ்வொரு அணுவிலும் நிறைந்திருக்கிறது. அந்த அணுக்கள் ஒன்றுகூடி ஒரு திடப்பொருள் ஆகின்றன, மனித உடம்பாகின்றன,

தாவரமாகின்றன, மிருகமாகின்றன, மண்ணாகின்றன, மலையாகின்றன, நதியாகின்றன, எல்லா இடத்திலும் அந்த அண்டபேரண்ட சக்தி நிறைந்து நீக்கமற பரவி ஒரு மையத்தை கொண்டிருக்கிறது.

அந்த மையம் எங்கிருக்கிறது.

எல்லா இடத்திலும் இருக்கிறது. தூணிலும் இருக்கிறது. துரும்பிலும் இருக்கிறது. மையம் இல்லாத திடப்பொருள் எதுவுமே இல்லை. எந்த மையத்தை நீங்கள் தொட்டாலும் அங்கிருந்து இந்த மிகப் பெரும் சக்தி வெளியே வருகிறது. அந்தச் சக்தியை, அந்த அருட்பேராற்றலை கடவுள் என்று சனாதனதர்மம் கண்டு கொண்டது. இந்த மிகப்பெரிய சக்தியின் சலனமே பிரபஞ்சம். இந்தப் பிரபஞ்சத்தின் சலனமே பூமி. இந்தப் பூமியின் சலனமே உயிர்கள். இந்த உயிர்களின் சலனமே வாழ்க்கை. இந்த வாழ்க்கையின் சலனமே விதிமுறைகள். நாகரீகங்கள்.

ஒரு அண்டபேரண்ட சக்தி ஒரு அசைவு அசைய, அந்த அசைவால் கோடானுகோடி அசைவுகள் தோன்றி விட்டன. *Whenever there is an action, there is an equal opposite reaction* இருக்குமல்லவா. இப்படித்தான் இந்த பூமி, இந்த வாழ்க்கை தோன்றி நம்மை சுற்றிக் கொண்டிருக்கிறது. அது அண்டபேரண்டத்தின் முதல் அசைவால் ஏற்பட்ட விளைவு. மனிதனும், மிருகங்களும், தாவரங்களும் சலனப்பட்ட சலனப்பட பூமி சுழல, காற்று வீச, கடல் கொந்தளிக்க இங்கு இடையறாது சலனங்கள் எதிர்விளைவாய் தொடர்ந்து கொண்டிருக்கின்றன. மிகப்பெரிய சலனத்தில் சிக்கிக் கொண்டிருக்கிறோம் என்பது ஓரளவுக்குப் பூரணமாகத் தெரிந்துவிட்டால், அதைத் தெளிவாக உணர்ந்து விட்டால், முற்றிலும் மனம் ஏற்றுக் கொண்டு விட்டால், அந்தச் சலனத்திலிருந்து நகரும் எண்ணம் வந்து விடுகிறது.

சலனத்திலிருந்து விடுபட என்ன செய்ய வேண்டும்.

சலனமற்று இருக்க வேண்டும். சலனமற்று இருக்க பிரபஞ்ச சக்தியின், அண்மை வெகு நிச்சயம் உங்களுக்கு தெரியவும் கூடும். இதுவே, இவ்வளவே, இந்த சனாதனதர்மத்தின் அடிப்படையான தத்துவம்.

சலனமற்று இருப்பது எளிதா.

இல்லை, சலனத்திற்கு நடுவே இருந்து கொண்டு சலனமற்று இருப்பது எளிதே இல்லை. சலனமற்று

இருக்கும் இடத்தை நோக்கி நீ நகரவேண்டுமெனில் முதலில் அமைதியாக இரு.

அமைதியாக எப்படியொருவன் இருக்க முடியும்.

யார் அடக்கமாக இருக்கிறாரோ அவர் அமைதியாக இருக்க முடியும்.

அடக்கமெனில் எப்படி.

ஒரு குழந்தையைப் போல.

ஒரு குழந்தையைப் போல் என்றால் எவ்விதம்.

குழந்தை எதுவுமில்லாமல் எல்லாவற்றையும் வியக்கப் பார்த்துக் கொண்டிருக்கிறதே, வெறுமே பார்த்துக் கொண்டிருக்கிறதே. இன்னதை, இன்னது செய்ய வேண்டுமென்று எண்ணமில்லாமல் வெறுமே ஒரு பொருளை, தொட்டுக் கொண்டும், தடவிக் கொண்டும் இருக்கிறதே அதேபோல் இரு. ஒரு பொருளை இன்னதாக மாற்ற வேண்டும். இப்படி உபயோகப்படுத்த வேண்டும் என்ற எண்ணம் வந்தால் கர்வம் வரும். கர்வம் ஆளுமை செய்ய முயற்சிக்கும். அந்த ஆளுமை அட்டகாசங்கள் செய்யும். அந்த அட்டகாசம் பல எதிர்ப்புகளைக் கொடுக்கும். அந்த எதிர்ப்புகள் வர ரௌத்திரம் பெருகும். ரௌத்திரம் பெருக இன்னும் அட்டகாசம் தலை தூக்கி ஆடும். கர்வம் உச்சாணிக் கோபுரத்தில் கொடிகட்டிப் பறக்கும். நான் என்ற அகங்காரம் பீறிட்டுக் கொண்டு எழும். அப்படி பீறிட்டுக் கொண்டு எழுபவரை அரக்கர்கள் என்று சொல்வது வழக்கம்.

அமைதியாக இருக்க முயற்சிக்கிறவர்கள் மனிதர்கள். முயன்று ஜெயித்தவர்கள் தேவர்கள்.

ஏன் சலனமற்று இருக்க வேண்டும். எதற்கு பிரபஞ்ச சக்தியை அறிய வேண்டும். சலனப்பட்டு இருப்பது சந்தோஷமாகத்தானே இருக்கிறது.

பெண்களோடு கொண்டாடும் ஸ்நேகம். பொருள் சேர்ப்பதில் உண்டான போட்டி. எதிரிகளை துவம்சம் பண்ணுவதற்குண்டான கர்வம். பிற தேசத்தை அபகரிப்பதும், அந்த தேசத்து மக்களை அழிப்பதுமான கொண்டாட்டம் போன்றவை நல்ல அனுபவமாகத் தானே இருக்கிறது. எதற்கு இந்த சலனத்தை நிறுத்த வேண்டும்.

உலக வாழ்க்கையில் திருப்தி ஏற்படும் வரை, கடவுள் என்கின்ற, பிரபஞ்சம் என்கிற விஷயத்தை புரிந்து கொள்ள முடியாது. எவருக்கு அதிருப்தி ஏற்பட்டதோ அவரே வேறுபக்கம் திரும்ப, சலனமற்று

இருக்க ஆசைப்படுவார்.

எப்போது அதிருப்தி ஏற்படும்.

நிறைய பெண்களை அனுபவித்து, நிறைய பணம் சம்பாதித்து, நிறைய எதிரிகளை வெட்டி வீழ்த்தி, தேசத்தைப் பிடித்து, தேவையில்லாது மனிதர்களை யெல்லாம் கொன்று குவித்து ரத்தக் கறைபடிந்து ஆக்ரோஷமாகக் கத்தி பிறகு என்ன என்று யோசித்தால் எதுவுமில்லை என்று புலப்படும். இல்லை என்ற வெறுமை மனதை கவ்விக் கொள்ளும். இது சந்தோஷம், அது சந்தோஷம், இப்படி சந்தோஷம், அப்படி சந்தோஷம் என்று இருந்து விட்டேன். எதுவுமில்லையே. ஏன், மரணமல்லவா இப்பொழுது என்னை பயமுறுத்திக் கொண்டிருக்கிறது. என் மரணமல்லவா என்னை இப்பொழுது உலுக்கிக் கொண்டிருக்கிறது. நான் கஷ்டப்பட்டு சேமித்த சொத்துக்கள், நான் பலத்தோடு மோதி வென்ற தேசங்கள், நான் நிறைய அனுபவித்த நங்கைகள் என்று எல்லோரும் என்னை விட்டுப் போகப் போகிறார்களே.. நான் என்ன செய்வேன். நான் மரணமடையப் போகின்றேனே என்கிற அலறல் ஏற்படுகிறபோது வெகுநிச்சயமாய்.. வெகு நிச்சயமாய்.. அத்தனை மனிதருக்கும் அதிருப்தி ஏற்படத்தான் செய்யும். இதுவரை எது திருப்தியாக இருந்ததோ, எது சந்தோஷமாக இருந்ததோ, எது கர்வமாக இருந்ததோ, அது வீண் என்று தோன்றிவிடும்.

எல்லோரும் சாகப் பயந்துதான் சாகிறார்கள். தன்னை அறிந்தவன் மட்டுமே மரணத்தைக் கண்டு அஞ்சாமல் வரவேற்கிறான். அவனால் மரணத்தை தள்ளி வைக்கவும் கூடும். சனாதன தர்மம் உலகத்திற்கு அழகாக சொல்வது இதுவே. இவ்வளவே.

என்னமோ கொசகொச என்று சலனம், சலனமின்மை, பிரபஞ்ச சக்தி என்றெல்லாம் சொல்கிறீர்கள். எங்களுக்கு ஒன்றும் புரியவில்லை. நாங்கள் சாதாரணமாகத்தானே இருக்கிறோம் என்று பல பேர் கேட்கலாம். அவர்களுக்காக சனாதன தர்மம் மிக அழகான ஒரு கதையைச் சொல்கிறது. அந்தக் கதைக்கு பிரகலாதன் கதை என்று பெயர்.

நான்தானடா இங்கு அரசன். நான்தான் இங்கு எல்லாமும், நான்தான் மொழி, நான் தான் அரசு, நான்தான் அதிகாரம், நான்தான் படையெடுப்பு, நான்தான் தைரியம், நான்தான் கல்வி, நான்தான்

காவியம் என்று கண் சுருக்கி, வாய் கோணி, கள்ளமாகப் பேசிய அரசனைப் பார்த்து அவனுடைய மகன் சொன்னான்.

இல்லை. உனக்கும் மேற்பட்டு ஒரு சக்தி இருக்கிறது. அதற்கு நாராயணன் என்று பெயர்.

யாரடா அந்த நாராயணன்.

எங்கும் நிறைந்திருப்பவன்.

எங்கும் நிறைந்திருப்பது என்றால் என்ன அர்த்தம். உன் நாராயணன் இங்கே.. இந்தத் தூணில் இருக்கிறானா.

அவன் தூணிலும் இருக்கிறான், துரும்பிலும் இருக்கிறானப்பா.

இந்தத் தூணில் இருப்பவனை அடித்து நொறுக்குகிறேன் பார்.

அந்த முட்டாள் அரசன் முன்கோபி. நானே சகலமும் என்று நினைத்துக் கொண்டிருக்கின்ற தற்குறி. ஓங்கி தன் கை ஆயுதத்தால் அந்தத் தூணை அடிக்க, அந்தத் தூணின் மையத்தில் அணுவின் அணு, அணுவுக்கு அணுவான இடத்தில் அந்த வேகம் பட, அந்த அணு தெறித்து எழுந்து மிகப் பெரிய சக்தியாக வந்து எதிரே அமர்ந்தது.

அந்த சக்தி எப்படியிருந்தது.

செந்நிற தீப்பிழம்பாய், ஆரஞ்சு நிற உடையணிந்து, தீப்பிழப்புகள் போன்ற பிடரி மயிரோடு, உஷ்ணக் காற்றோடு, மனிதனும், மிருகமும் சேர்ந்த தலையோடு, மெல்லிய நீண்ட மனித உடம்பும் மிகப் பெரிய சிலிர்த்தெழுந்த முடிகளோடு கூடிய பெருந்தலையும் கொண்டு, அந்த சக்தி வெளிப்பட்டு, எவன் போட்டு அடித்தானோ அவனை கபளீகரம் செய்தது.

என்ன அது அந்த சக்தியின் இருப்பிடம்.

அது மேலேயும் இல்லை. கீழேயும் இல்லை. உள்ளேயும் இல்லை. வெளியேயும் இல்லை. இருட்டிலும் இல்லை. பகலிலும் இல்லை. அது மையமான இடத்தில் இருக்கிறது. கழுத்திலிருந்து குறிவரை உள்ள விஷயத்திற்குத்தான் உடம்பென்று பெயர்.

அந்த உடம்பின் மையத்தில் உயிர் இருக்கிறது. அந்த உயிரின் மையத்தை வந்து நோக்க, தொட, உள்ளுக்குள் மிகப் பெரிய வியப்பு ஏற்படுகிறது.

அந்த இடத்தின் அடியிலிருந்து சீறி உச்சதலையில் பெரிதாக கோரமாக அந்தச் சக்தி பரவுகிறது. உடம்பு

அப்பொழுது கனலாக கொதிக்கிறது. அதற்கு குண்டலினி விழிப்பு என்று பெயர். உடம்பின் மையத்தை, கூட்டி உணரும் போது உடம்புக்குள் ஏற்படுகின்ற மாற்றம் இது.

இது உடம்புக்குள் இருக்கின்ற நெருப்பு ஸ்தம்பம்.

இந்த நெருப்பு ஸ்தம்பத்தை யார் பார்க்க முடியும். யார் தீங்கின்றி அனுபவிக்க முடியும். யார் ஒரு குழந்தையைப் போல வெறுமே கைகூப்பி. எந்த் எண்ணமுமில்லாது நீ இருக்கிறாய் அது போதும் எனக்கு என்பதாகப் பார்க்கிறானோ, அவனுக்குக் குளுமையாக அவன் அருகே அமர்ந்து காட்சி தருகிறது.

யார் தனக்கு எல்லாம் தெரியும் என்று நினைக் கிறானோ, தன்னால் இந்தப் பிரபஞ்சத்தை ஆளுமை செய்ய முடியும் என்று எவன் அலட்டுகிறானோ, அவன் தலையில் இந்த நெருப்பு ஸ்தம்பம் விழுந்து அவனை கிழித்துத் தூக்கிப்போடுகிறது. அந்த சக்தியின் முன்பு அவன் கர்வங்கள் ஒன்றுமில்லாமல் போகின்றன. அதன் சலனம் மிகப்பெரிய சலனத்தை உண்டாக்கி அவனைச் சாகடித்து விட்டது. மறுபடி மறுபடி பிறக்காததே மரணமில்லாப் பெருவாழ்வு. சலனப்பட சலனப்பட பிறவி நிச்சயம். சலனமற்று மெல்ல மெல்ல அமர்வதே வாழ்வின் லட்சியம்.

தன்னுடைய மையத்தை வெளிப்படுத்தியவர் நரசிம்மர். எவர் தன் மையத்தை உணர ஆசைப் படுகிறாரோ அவருக்கு நரசிம்ம உபாசனை மிகச் சிறந்தது.

மிகுந்த உக்கிரத்தோடு யோகப்பட்டம் கட்டி தவநிலைமையில் அமர்ந்திருக்கின்ற உருவம்தான் நரசிம்மர். உக்கிரம் என்பது கோபம் என்றாகாது. உக்கிரம் என்பது கடும் வைராக்கியம். நெல்முனையளவும் பிசிறாத ஒரு அழுத்தம் என்றே கொள்ள வேண்டும். அப்படிப்பட்ட வைராக்கியத்தோடு ஒரு இடத்தில் பட்டம் கட்டி உட்கார, வெறுமே இருக்க, விரைகள் பூமியில் படாது வெறுமே குந்திக் கொண்டிருக்க, ஒரு முகப்படுவது வெகு எளிதாக ஏற்படுகிறது. ஒருமுகப்பட்டவர் தன் மையத்தை உணர்ந்து கொள்ள முடியும். தன் மையத்தை உணர்ந்து கொள்ள இந்த விதமான ஒரு இருப்பு அவசியம்.

இப்படி பூமியில் பட்டும் படாமலும் உட்காருவதற்கு இன்னொரு அர்த்தமும் இருக்கிறது.

ஆசைகள் அகற்றப்படாமலும், அதே சமயம்

அனுபவிக்கப்படாமலும் இருத்தல் வேண்டும். இந்த உடம்பை வருத்திக் கொள்ளக் கூடாது. அதே நேரத்தில் புலனுணர்ச்சிகளிலும் மாட்டிக் கொள்ளக்கூடாது.

இது எப்படி.

இது தெரியவேண்டுமெனில் இப்படி தவத்தில் உட்காருங்கள். வைராக்கியமாக உட்காருங்கள். ஒருமனதாக உட்காருங்கள். நரசிம்மர் குருவாக இருந்து சொல்லிக் கொடுப்பார். நரசிம்மர் குருவாக இருந்து அற்புதமாக சொல்லிக் கொடுக்கின்ற இடம் அஹோபிலம். ஆந்திர மாகாணத்தில் உள்ள அஹோபிலம் என்கிற தலம்.

சுற்றிலுமுள்ள மலைகளுக்கு நடுவே இருக்கின்ற ஒரு அற்புதமான பள்ளத்தாக்கில் அமைந்த கோவில். அங்கு குகையில் இருக்கின்ற அஹோபில நரசிம்மரைப் போய் தரிசித்துவிட்டு எனக்குள் என்னைத் தேடுகின்ற முயற்சியை பலிதமாக்குங்கள் என்று கைகூப்பி பிரஹலாதனைப் போலக் கேட்க, அந்த குரு அந்த நரசிம்மன், அந்தப் பிரபஞ்ச சக்தி உங்களுக்கு நிச்சயம் அருளும்.

இப்பொழுது சொல்லுங்கள். சனாதன தர்மம் என்பது மதமா. வெறும் கோட்பாடா. இல்லை, அது மிகப் பெரிய தத்துவ விளக்கம். வாழ்வின் ஜீவரசத்தை உருட்டி உடனே விழுங்கு என்று அற்புதமாக கொடுத்திருக்கின்ற தத்துவ விளக்கம்.

சனாதன தர்மம் என்பது சத்தியம். இந்தச் சனாதன தர்மம் சொல்லிக் கொடுத்த தத்துவம் போல, ரகசியம் போல வேறு எந்த மதமும், வேறு எந்த நாகரீகமும் சொல்லித் தரவே இல்லை. வாழ்க்கை என்பது விதிமுறைகள் அல்ல. இது என்ன வாழ்க்கை. இது ஏன் என்று கேள்விகள் நிறைந்தது. இந்தக் கேள்விகளுக்கு பதில் சொல்ல பாரத நாகரீகத்தால் மட்டுமே இதுவரை முடிந்திருக்கிறது.

பாரதம் பாரதீயம் என்று சொன்னால் எனக்கு சனாதன தர்மத்தின் நாகரீகம்தான் நினைவுக்கு வருகிறது. இது ஒப்பில்லாத சமுதாயம். வாழ்க பாரத சமுதாயம் வாழ்கவே.

## தெளிவு

ஸ்ரீனுவாசனும், வேணுகோபாலும் அந்த

மணிமண்டபத்தின் காற்றோட்டமான பகுதியில் அருகருகே உட்கார்ந்திருந்தார்கள்.

சீனுவாசனின் பகல் உணவுக்காக ஒரு செய்தித்தாளை நாலாக மடித்து, அதில் ஆப்பிளையும், கொய்யாவையும் வேகமாக வேணுகோபால் நறுக்கிப் போட்டுக் கொண்டிருந்தார்.

அந்த மணிமண்டபத்தில் இருக்கின்ற மகானின் உருவச்சிலையைப் பார்த்தபடியே சீனுவாசன் உட்கார்ந்திருந்தார். அந்த மகான் வெறும் வாய்ச்சொல் வீரரல்ல. வாழ்ந்து காட்டியவர். கடவுள் பற்றிய உண்மைகளை மிகச் சுருக்கமாக அதே சமயம் எளிமையாகச் சொன்னவர். உள்ளம் உருகிப் பாடியவர். அற்புதமான கவிதைகள் நெய்தவர். உற்றுப் பார்த்த பார்வையில் பலருடைய ஜன்மஜன்மாந்திர கர்மாக்களை அழித்தவர். தோன்றிய பொழுதெல்லாம் அவருடைய ஆஸ்ரமத்திற்கு சீனுவாசன் தோளில் பையை மாட்டிக் கொண்டு வந்து விடுவது வழக்கம். வந்து விட்டால், வேணுகோபால்தான் அவருக்குத் துணையிருப்பான். உட்கார்ந்து தியானிப்பார்கள். மெல்ல அந்த ஆஸ்ரமம் சுற்றி வருவார்கள். நின்று மலையைப் பார்ப்பார்கள். அருகே போய் கண் கொட்டாமல் மகான் உருவச் சிலையைக் கவனிப்பார்கள்.

பழங்களை நறுக்கிக் கொண்டே வேணுகோபால் சீனுவாசனை உற்றுப் பார்த்தார்.

"ஒரு விஷயம் சரித்திரத்துல நடந்திருக்கு. பதினெட்டாம் நூற்றாண்டு. அதாவது, ஆயிரத்து எழுநூற்று இருவது வாக்குல நடந்திருக்கு. எங்க நடந்திருக்கு தெரியுமா.. ஸ்ரீரங்கத்துல. விஜயரங்க சொக்கநாத நாயக்கர்னு ஒரு ராஜா, மதுரையில நாயக்கர் வம்சத்து அரசன். அவனுக்கு ஸ்ரீரங்கநாதரைப் பார்க்கணும்னு ஆசை. மொத்தக் குடிபடைகளோடு கிளம்பினான்."

சீனுவாசன் கதை சொல்லத் துவங்கினார்.

காயத்ரி மண்டபம் தாண்டிப் போய் உள்ளே கருவறைப் பூட்டுகள் மூன்று திறந்து, அரங்கா.. அரங்கா.. அரங்கா.. என்று கூப்பிட்டு, நரசிம்ம பட்டர் கருவறைக் கதவை விரியத் திறந்தார். விளக்கைத் தூக்கி அரங்கனின் முகத்தை சேவிக்கலாம் என்று போக, திடீரென்று தூக்கி வாரிப் போட்டது. அரங்கனுடைய

உடம்பில் வேட்டி இல்லை.

நரசிம்ம பட்டருக்கு கைகள் நடுங்கின. கோபமானார். கத்த வாயெடுத்தார். இது கருவறை. வேறு எந்த வார்த்தையும் சொல்லிவிடக்கூடாது. மனதை அடக்கிக் கொண்டு கருவறையை விட்டு வெளியே ஓடி பண்டாரத்தை அடைந்தார். பண்டாரம் பூட்டப்பட்டிருந்தது. வாசலில் நேற்று அனுப்பிய கூடை இருந்தது. அந்தக் கூடைக்குள் போன வாரம் முழுவதும் அரங்கன் உடுத்தியிருந்த வேட்டி இருந்தது. சட்டென்று அந்தக் கூடையை வாரிக் கொண்டார். தோளில் வைத்துக் கொண்டு மறுபடியும் படியேறி, கருவறை திறந்து உள்ளே போனார். வேகமாக அரங்கனுக்கு உடை சாற்றினார்.

யாரோ உருவியிருக்கிறார்கள். நரசிம்மபட்டர் குமுறினார்.

என்ன ஆயிற்று இந்தக் கோயிலுக்கு. என்ன ஆயிற்று இந்த மக்களுக்கு. குடம் குடமாக பாலும், நெய்யும் கொண்டு வந்து அரங்கனுக்குக் கொடுத்துக் கொண்டிருந்த கிராமவாசிகளைக் காணோம். ஆடும், மாடும், உழும் கலப்பையும் கொள்ளை போய் விட்டதென்று சில வருடங்களுக்கு முன்னால் அழுதவர்கள், பிறகு வரவேயில்லை. கோயில் நிலமாயிற்றே, நெல் அளக்க வேண்டுமே என்பதற்கு சீறலாய்த் தான் பதில் கிடைக்கிறது.

போன வருடம் மராட்டியர்கள் படையெடுத்தார்கள். அதற்கு முந்தைய வருடம் பிரெஞ்சுக்காரர்கள் படையெடுத்தார்கள். அதற்கு முந்தைய வருடம் சேதுபதியின் மறவர் படை வந்து சூறையாடி விட்டுப் போயிற்று. அதற்கு முந்தைய வருடம், ஆங்கிலேயர்கள் வந்தார்கள். அதற்கு முந்தைய வருடம் போர்ச்சுக்கீசியர்கள் வந்தார்கள். ஒவ்வொரு முறை அறுப்பின் போதும், யாராவது படையெடுப்பு வந்து கொள்ளையடிக்கிற போது அரங்கனுக்கு எப்படி கொட்டிக் கொடுக்க முடியும். எல்லா அறுவடை வேளைகளிலும் படையெடுப்பு இருக்கிறதே எப்படி வாழ முடியும் என்று பதிலுக்குக் கேட்கிறார்கள். கொடுப்பவர் கொடுங்கள் என்று உதறிவிட்டு கோயிலுக்குத் திரும்பி வரும்போது வேறு கதை சொல்கிறார்கள்.

வெள்ளைக்காரன் வேறு வேலையில்லாமல் வேளாளர்களைக் கொள்ளையடிக்கிறானா. பொய். பச்சைப் பொய். ஒருமுறை அந்தக் கிராமம் எரியூட்டப்

பட்டது உண்மை.

இளம் வாலிபர்களை படையில் சேர்த்துக் கொள்வதற்காகக் கிராமத்தாரோடு பேசிப் பார்த்து பயனில்லாமல் அடித்து உதைத்து, ஆண்களை இழுத்துக் கொண்டு போனார்கள். அந்த முறை கோயிலிலிருந்தே யாரும் நெல் கேட்க வரவில்லை. வண்டி வண்டியாய் .நெல் ஏற்றி, அத்தனையும் திரிசிரபுரம் கொண்டு போய் விற்றார்கள். ஆட்டமும், பாட்டமும், கூத்தும், குடியுமாய் செலவழித்தார்கள். மறு வருடம் வந்தபோது, 'ஐயா கொள்ளை போய் விட்டதய்யா' என்று சொன்னார்கள். அதையும் நம்பி திரும்பிப் போனார்கள். இப்பொழுது அதுவே வழக்கமாகி விட்டது. 'கோயிலுக்குக் கொடுக்க மனமில்லை. அரங்கன் கோயிலுக்குக் கொடுக்கா விட்டால் அழிந்துவிடுவோம்' என்ற ஒரு பயம் இருந்தது. இரண்டு வருடம் கொடுக்கவில்லை அரங்கன் எதுவும் அழிக்கவில்லை என்றதும் 'அடப் போப்பா..' என்று கோயில் அதிகாரிகளைப் புறந்தள்ளுகிறார்கள்.

ஆனால், மறுபடியும் ஒரு படையெடுப்பு வரும்போல் இருக்கிறது. ராமநாதபுரத்து மறவர் கூட்டம் தஞ்சாவூருக்குள் நுழைந்து, ஒருவார காலம் உட்கார்ந்து கொள்ளையடித்துவிட்டு, தஞ்சாவூரைச் சிதிலமாக்கி விட்டுப் போய் விட்டதாம். தஞ்சை மன்னர் தப்பித்து குடந்தை போய் விட்டாராம். தஞ்சையிலிருந்து பதினேழு குடும்பங்கள் திரிசிரபுரம் வந்து, பிறகு இப்பொழுது கோயில் வாசலில்தான் தஞ்சமடைந்திருக்கிறார்கள். கோயில் உணவுக்காக கைகட்டி காத்திருக்கிறார்கள். கருட மண்டபத்தில் தூங்குகிறார்கள். ஒவ்வொரு குடும்பமும் ஆறுவேலி, ஏழு வேலிக்குச் சொந்தக்காரர்கள். இன்று அனாதைகளாக நிற்கிறார்கள்.

"ஆஹா.. அந்த மாதிரி ஜனங்களுக்கு இந்த நேரத்திலல்லவா உதவி செய்ய வேண்டும்."

நரசிம்மபட்டர் பதற்றத்தோடு சொன்னார்.

"உதவியா.. நம்மாட்களா.. நன்றாகச் செய்வார்களே. கால்மேல் கால்போட்டு சகல துக்கமும் கேட்டுவிட்டு என்ன செய்வது உன் தலையெழுத்து. ஒரு பணத்திற்கு உன் மனைவியை விற்று விடுகிறாயா என்று கோவில் அதிகாரி ஒருவன் கேட்கிறான்."

"மனைவியை விற்பதா."

"வாங்கவும் செய்திருக்கிறார்கள்."

"என்னய்யா இது அநியாயமாக இருக்கிறது."

"அநியாயமே இல்லை. அடிமை வியாபாரம்தான் இப்பொழுது நல்ல காசு கொடுக்கிறது."

"மாற்றான் மனைவியை வாங்கி அனுபவிப்பதா. என்ன கேவலம் இது."

"அனுபவிப்பது மட்டுமா. இன்னும் எத்தனையோ உபயோகங்கள் இருக்கின்றனவே. வீட்டில் வேலை செய்ய.. களத்தில் வேலை செய்ய.. கோவிலில் வேலை செய்ய.. என்றெல்லாம் ஆட்களை வைத்துக் கொள்கிறார்களே."

"என்னது. கோயில் வேலையா."

"ஆமாம். காலையில் கோயிலை யார் பெருக்குகிறார்கள். பெருக்க வேண்டியவன் சம்பளம் மட்டும் வாங்கிக் கொள்வான். பெருக்குவதற்கு அவனே ஆறு பேரை நியமித்திருக்கிறான். ஆறு பேருக்கு மடப்பள்ளியிலிருந்து சோறு போடுகிறான். அதாவது, கைக்காசு செலவு செய்யாமல் சோறு மட்டும் போட்டு வேலை வாங்க அவனுக்குத் தெரிந்திருக்கிறது."

"இந்தக் கோயில், குப்பையாக அல்லவா இருந்தது."

"பெருக்குகிறவர்கள் நேற்று தாசி வீட்டிற்குப் போய் விட்டார்கள்."

"ஏன்.. ஏன் அங்கு அவர்கள் போக வேண்டும். ஏன் அந்தப் பெண்டுகளை அனுப்பினான்."

"தாசி வீட்டில் இரண்டு பெண்கள் வயதுக்கு வந்துவிட்டார்கள். பொட்டு கட்டும் திருவிழா. ஒரு வாரம் திமிலோகப்படுகிறது. அந்தப் பெண்களை வாங்க போட்டா போட்டி. பெரிய மனிதர்கள், நிலக்கிழார்கள், சேனாதிபதிகள், வியாபாரிகள் என்று போட்டி போட்டு வந்திருக்கிறார்கள். பதின்மூன்று வயதுப் பெண் விடைக்குட்டி என்று உரத்த குரலில் தெருவில் நின்று ஆட்களை அழைத்துவரச் சொல்கிறான். அப்படி வந்தவர்களுக்கு உபசாரம் செய்ய வேண்டாமா. அவர்கள் தின்று போட்ட எச்சில் இலையை எடுக்க வேண்டாமா. அவர்களுக்கு கால்கழுவத் தண்ணீர் கொடுக்க வேண்டாமா. மாடுகளுக்கு புல் அறுக்கவும், முதுகு தேய்க்கவும் ஆட்கள் வேண்டாமா. அதற்குத் தான் அவன் அந்த ஆட்களை தாசி வீட்டிற்குத் துரத்தியிருக்கிறான். தாசி அவனைத் தனியாக கவனிப்பாள்."

"அரசர்தான் தலையிட வேண்டும். ஆனால் அரசர்

எங்கிருக்கிறார்."

"மதுரையில்.."

"ஏழு வாரம் நடந்து போய் அரசரிடம் சொல்லி அரசர் உன்னைச் சந்தித்துப் பேசி விஷயம் தெரிந்து எனக்கு ஆள் அனுப்பி இந்த ஊர் அநியாயத்தைக் கேட்பாரா.

ஒருக்காலும் மாட்டார். பொக்கிஷத்தில் இருக்கின்ற பணத்தையெல்லாம் இஸ்லாமியருக்குக் கொடுத்து சமாதானம் செய்யவே அவருக்கு நேரம் சரியாக இருக்கிறது."

"அப்படியா செய்து கொள்கிறார் அரசர்."

"மங்கம்மாள் என்ன செய்தாள். மராட்டியருக்கு காசு கொடுத்து சமாதானம் செய்யவில்லையா. இஸ்லாமியருக்கு ஒரு கோடி ரூபாய் காசு கொடுக்க வில்லையா. வைர ஹாரங்களையும், தங்கக் குடங்களையும், யானைகளையும், குதிரைகளையும், பசுக்களையும் தரவில்லையா. மங்கம்மாளுக்கு இஸ்லாமியர் என்றால் பயம். இஸ்லாமியர்களுக்கு போர்ச்சுக்கீசியர் என்றால் பயம். போர்ச்சுக்கீசியருக்கு பிரெஞ்சுக்காரன் பற்றிய பயம். பிரெஞ்சுக்காரனுக்கு ஆங்கிலேயர் பற்றிய நடுக்கம். பரதகண்டம் சிக்கி சக்குநூறாய் கிழிந்து கொண்டு தொங்குகிறதய்யா. இதில் உன் வீட்டுக் கவலை. என் வீட்டுக் கவலையா முக்கியம். எவள் எவனுக்கு அடிமையானாள் என்பதாய் இங்கு செய்தி. உன்னை அடிமை செய்து விட்டானா. வேறு என்ன செய்வது. ஏன் உயிரோடு இருக்கிறாய். செத்துப்போ என்றுதானே தீர்ப்பு வழங்கினார்கள். செத்துப் போனாளே, ஒருவர்கூட கண்ணீர் விட்டு அழவில்லையே. அவளுடைய ஒரேயொரு மகன் ரும்மதி. என் தாயார் நல்லபடியாய் பரலோகம் போய்ச் சேர்ந்திருப்பாள் என்று சொல்லி துடைத்துக் கொண்டு போய்விட்டானே."

"கொடுமை.. கொடுமை,. கொடுமை. இதற்குமேல் நான் கேட்கப் பிரியப்படவில்லை."

நரசிம்மபட்டர் காது பொத்திக் கொண்டார்.

ஆட்சி அமைதியாக நடந்தால்தான் கோயிலுக்கு ஆட்கள் வருவார்கள். ஆட்சி குழப்பமாக இருந்தால் முதலில் புறக்கணிக்கப்படுவது கோயில்தான். அரங்கருடைய இந்தக் கோயில் முற்றிலும் புறக்கணிக்கப் பட்டு விட்டதோ என்று நரசிம்ம பட்டருக்குத் தோன்றியது. இதோ, அதனுடைய உச்ச

கட்டம். பட்டு வேட்டியை உருவிக் கொண்டு போன படுபாதகச் செயல்.

கார்த்திகை மாதத்து மழை சுழன்று சுழன்று அடித்தது. ஈரக்காற்று காயத்ரி மண்டபம் வரை வந்து தாக்கிற்று.

அரசர் வருகிறாராம். இரண்டு நாளைக்குள் வந்து சேர்ந்து விடுவாராம். கைசிக ஏகாதசி அன்று இங்கிருப்பாராம். அவரும் அவர் மனைவி மீனாட்சியும் ரங்கநாதரை தரிசனம் செய்ய வேண்டுமாம். அரசருக்கென்று ஒரு மண்டபம் ஒழித்து விடச் சொல்லி கட்டளையிட்டிருக்கிறார்கள்.

நன்கு அலங்காரம் செய்ய வேண்டும். பொக்கிஷ அறையைத் திறந்து அணி அலங்காரங்களைத் தனித்தனியாக எடுத்து வைத்துக் கொண்டார்கள். கைசிக ஏகாதசியன்று அரங்கன் கைத்தலமாக அல்லவா வருவார். அதற்கு ஆள் ஏற்பாடு செய்ய வேண்டுமே.. என்ன செய்வது.

போன வருடம்போல் இவ்வருடமும் நரசிம்ம பட்டரே செய்யட்டும்.

அதிகாரிகள் உத்தரவிட, நரசிம்மபட்டர் கை கூப்பினார்.

அரசரோடு அரசி மீனாட்சியும் புறப்பட்டு விட்டாள் என்ற செய்திகள் வருகின்றன. ஆனால், மழை அடித்துப் பெய்து கொண்டிருக்கிறது. வசந்த மண்டபத்திலிருந்து கோயிலுக்கு வருவதற்குள் முற்றிலும் நனைந்து விடும்படியாகிறது. இந்த மழையில் இத்தனை பெரிய படையோடு அரசர் எப்படி வரப்போகிறார் என்பதுதான் புரியவில்லை.

ஏகாதசி முழுவதும் நல்ல மழை. ஆனால், அத்தனை உபசாரங்களும் அரங்கருக்குக் குறைவற நடந்தன. வைகுண்ட ஏகாதசி முழுவதும் கண்விழித்திருந்து கைசிக புராணம் படித்துவிட்டு, பிரபந்தங்களை உரக்கச் சொல்லிவிட்டு, விஷ்ணு சஹஸ்ரநாமம் ஓதிவிட்டு விடியல் நேரம் அரங்கனை எடுத்துக் கொண்டு மேலே மழை விழாதிருக்க முத்துப் பந்தல் போட்டு வேகமாகக் கோயிலுக்குள் நுழைந்தாயிற்று.

அரசர் இன்னும் வரவில்லையே. உள்ளே போய்விடலாமா.

நரசிம்மபட்டர் திகைத்தபோது அதிகாரிகள் தலையைச் சொறிந்து கொண்டிருந்தார்கள்.

திரிசிரபுரம்கூட வரவில்லையாமே பிறகு ஸ்ரீரங்கம் எப்போது வருவார். எதுவும் செய்வதற்கில்லை. நடநட என்று அதிகாரிகள் நரசிம்மபட்டரை கட்டளை யிட்டார்கள்.

அரங்கரை நிதானமாக முதற் பிரகாரம் சுற்றி எடுத்துக் கொண்டு போய் பிறகு படியேறி, காயத்ரி மண்டபத்திற்குள் நரசிம்மபட்டர் நுழைந்தார். மூலவருக்குப் புது ஆடைகள் போட்டு மலர்மாலைகள் சார்த்தி, திரைவிலக்கி கற்பூர ஆரத்தி காட்டியபோது, வெளியே தொலை தூரத்தில் எக்காளம் ஒலித்தது.

அரசர் வந்துவிட்டார் என்று தெரிந்தது. அதிகாரிகள் கற்பூர ஆரத்தியை கண்ணில் ஒற்றிக் கொள்ளாமல் கோயிலை விட்டு வெளியே ஓடினார்கள்.

நரசிம்மபட்டர் அரங்கரைப் பார்த்துச் சிரித்தார்.

"என்ன, என்ன நினைத்துக் கொண்டிருக்கிறீர் மனதில்." என்று கேள்வி கேட்டார்.

அரங்கன் பதில் பேசவேயில்லை. அவன் சற்று கோபமாக இருப்பது போல நரசிம்மபட்டருக்குத் தெரிந்தது.

"ஒருமுறை, ஒரேயொரு முறை பச்சைக் கற்பூரமும் பூக்களும் தூவி செய்கின்ற வழிபாடு மட்டும் பார்க்க ஏற்பாடு செய்யுங்கள். உள்பிரகாரத்தை ஒருமுறை சுற்றி வாருங்கள். நான் பூப்போடுகிறேன். அரசியும் பூப்போடட்டும். என்னுடைய மந்திரி பிரதானிகள் பூப்போடட்டும். பிறகு அரங்கரை உள்ளே அழைத்துப் போங்கள்." என்று அரசர் மரியாதையாகக் கேட்டார். அரசர் கேட்டுக் கொண்டிருக்க மந்திரிகளும், உள்ளூர் அதிகாரிகளும் கலந்து யோசித்தார்கள்.

"கோயிலொழுகு ஒருமுறை நடந்த உற்சவத்தை மறுமுறை எந்தக் காரணம் கொண்டும் நடத்தக் கூடாது. அது அபவாதம் விளைவிக்கும் என்று சொல்கிறது. எனவே, இப்பொழுது மறுபடியும் அரங்கரை வெளியே எடுத்து வரமுடியாது. அம்மாதிரி பச்சைக் கற்பூரமும் பூவும் போட்டு வழிபட முடியாது. இனி அடுத்த வருடம்தான். யார் இதை அரசனிடம் சொல்வது."

"யாராவது சொல்ல வேண்டியதுதான்."

மறுபடியும் அரசன் கேட்க, "இல்லை அடுத்த வருடம் தான்." என்று சொல்லிவிட்டார்கள்.

அரசன் கோபமானான்.

"ஏன் அப்படிச் சொல்கிறீர்கள். ஒரு அரசனுக்காக கோயில் இறங்கி வரக்கூடாதா."

"இல்லை. கோயிலொழுகுதான் முக்கியம்."

"அட.. என்னய்யா கோயிலொழுகு. கோயிலொழுகுப்பிரகாரம்தான் இங்கு சகலமும் நடக்கிறதா."

"ஆமாம். அது பிரகாரம்தான் கோயிலில் உள்ள எல்லா காரியங்களும் நடக்கின்றன." அதிகாரிகள் உரத்த குரலில் கூறினார்கள். பட்டர்கள் ஆமோதித்தார்கள்.

"ஒரு விஷயம்கூட கோயிலொழுகிலிருந்து நீங்கள் விலகவே இல்லையா." மறுபடி கேள்வி வந்தது.

நரசிம்மபட்டர் துணுக்குற்றார்.

உள்ளிருக்கிற வேட்டியை உருவிக் கொண்டு போனது எவ்வளவு பெரிய குற்றம். அதற்கு என்ன பரிகாரம். அதற்கு கோயிலொழுகு என்ன சொல்கிறது. வெள்ளிக் குடத்தைத் தூக்கிக் கொண்டு போனதும், நெல் கொடுக்க மாட்டேன் என்று சொல்வதும், எங்களிடம் இல்லை என்று கைவிரிப்பதும், நந்தவனத்து மலர்களை யார்வீட்டுக் கல்யாணத்திற்கோ கொடுத்து விட்டு துளசி தருவதும் சரியா.

"நீ சொல் கோயிலொழுகுப் பிரகாரமா நடக்கிறது."

நரசிம்மபட்டரைப் பார்த்து அரசன் அருகே வந்து கேட்க, ஆஜானுபாகுவான அந்த உருவத்தைப் பார்த்து நரசிம்மபட்டர் வியந்தார்.

"இல்லை. நீங்கள் கேட்பது போல் விஷயத்தைத் தளர்த்த முடியாது."

நரசிம்மபட்டர் நிதானமாகச் சொன்னார்.

"அப்படியானால் கோயிலொழுகுப் பிரகாரம்தான் இங்குள்ள விவகாரங்கள் நடக்கின்றன என்று சொல்கிறீர்களா."

"நீங்கள் இருந்து பாருங்களேன். என்னை ஏன் கேட்கிறீர்கள்."

நரசிம்மபட்டர் அதையும் நிதானமாக அரசனின் கண்களைச் சந்தித்தபடி சொன்னார். அரசன் கண்களில் சட்டென்று ஒரு மின்னல் மின்னியது.

"ஹா.. அது சரியான யோசனை. நான் இருக்கிறேன். ஸ்ரீரங்கத்திலேயே இருக்கிறேன். இந்தக் கோயிலிலேயே இருக்கிறேன். இங்கு உட்கார்ந்தே நான், நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்று கவனிக்கிறேன். எங்கே அந்த கோயிலொழுகு ஓலைச்சுவடி எடுத்து வரச் சொல்லுங்கள். அது என் பக்கத்தில் இருக்கட்டும். என்னுடைய மந்திரி பிரதானிகள் அதைப் படித்துக் கொள்ளுங்கள்.

ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு செயலும் கோயி லொழுகு பிரகாரம் நடக்கிறதா என்பதை கண்காணியுங்கள். குறை கண்டால் உடனே தெரிவியுங்கள்."

உரத்த குரலில் கட்டளையிட்டான்.

சகலரும் கலையலாம் என்று ஆணையிட்டான். போய் வலப்பக்க மண்டபத்தில் அமர்ந்து கொண்டான்.

அரங்கனைப் பார்க்கவும், அரசனைப் பார்க்கவும் வெளியிலுள்ள கூட்டம் உள்ளே வந்தது.

பட்டர்கள் திணறினார்கள். நிர்வாகிகள் ஆடிப்போனார்கள். உள்ளூர் அதிகாரிகள் தலையில் கை வைத்துக் கொண்டார்கள்.

பத்துநாள், இருபது நாள், ஒரு மாதம், இரண்டு மாதம், மூன்று மாதமாயிற்று.

"அறுவடை முடிந்ததா.. என்ன அறுவடை... என்ன நெல் விளைச்சல்.. கோயிலுக்கு எத்தனை கலம், யார் கொடுக்க வேண்டும்.. யார் கொடுக்கவில்லை. கோயில் கணக்குகளில் போன வருடம் கொடுத்த நெல்லும், இந்த வருடம் கொடுத்த நெல்லும் ஒப்பிட்டுப் பார்."

கணக்கர்கள் ரத்தம் கக்கினார்கள். தவறாகச் சொன்னவர்கள் பிரம்படி பட்டார்கள். நரசிம்ம பட்டருக்கு வாய்கொள்ளாத சிரிப்பு ஓடிற்று.

நரசிம்மபட்டரைத் தவிர வேறு எவரையும் விஜயரங்க சொக்கநாதன் அந்தக் கோவிலில் மதிக்கவே இல்லை. காலையும், மாலையும் அரங்கனை தரிசனம் செய்யும்போது பட்டரையும் வணங்கிவிட்டுச் செல்வான்.

ஸ்ரீரங்கம் திணறிற்று. திரிசீரபுரம் அலறிற்று. திருவானைக்காவும், திருவெள்ளறையும், சமயபுரமும் கதறின. எல்லா இடங்களிலிருந்தும் வரவேண்டியவை வந்தன. அவரவர் செய்ய வேண்டிய வேலைகளை செய்தனர். எல்லாப் பகுதிகளிலும் தீபம் ஏற்றப்பட்டன. தூபம் போடப்பட்டன. வரவு செலவு கணக்கு மிகச் சுத்தமாக இருந்தது.

மறுபடியும் மழை வந்தது. கார்த்திகை வந்தது. ஏகாதசி வந்தது. விடியலில் எழுந்து பன்னிரு திருநாமங்கள் தரித்து, பட்டுடுத்தி மிகவும் அமைதியாக விஜயரங்க சொக்கநாதன் தன் மனைவி மீனாட்சியோடு, தன்னுடைய சேனாதிபதிகளோடும் காயத்ரி மண்டபத்தில் காத்திருக்க, நரசிம்மபட்டர் அரங்கனை கையில் ஏந்திக் கொண்டு நடக்க, அரசன்

குடை பிடித்துக் கொண்டு வந்தான். அரசி கவரி வீசிக் கொண்டு வந்தாள். சேனாதிபதிகள் கட்டியம் கூறினார்கள்.

கையிலே வாளோடு வீரர்கள் புடைசூழ, அரங்கர் கம்பீரமாக வசந்த மண்டபம் வந்தார். சகலவித மரியாதைகளையும் ஏற்றுக் கொண்டார். ஏகாதசி இரவு முழுவதும் கைசிக புராணம் படிக்கப்பட்டது. விஷ்ணு சஹஸ்ரநாமம் ஓதப்பட்டது.

விடியல் நேரத்தில் கை நிறைய பச்சைக்கற்பூரம் கலந்த பூவை எடுத்து அரங்கரின் பாதத்தில் சொரிந்து விழுந்து வணங்கினான்.. அரசியும் அவ்விதமே செய்தாள். எல்லோரும் பூக்கள் விசிறிப்போட.. அரங்கரைத் தாங்கியபடி நரசிம்மபட்டர் கோயிலுக்குள் நுழைந்தார்.

வெளியே எக்காளம் கேட்டது. அரசன் திரும்பி மதுரைக்குப் போகிறான் என்ற எக்காளம் அது.

"அரங்கா. நான் இன்னும் உயிரோட இருக்கிறேனே.. அது உன் கருணையப்பா."

பளீர் பளீரென்று அதிகாரிகளும், பட்டர்களும் கன்னத்தில் அடித்து அரங்கனை வழிபட்டார்கள்.

நரசிம்மபட்டர் இரவு கருவறைக் கதவு சார்த்தும் முன்பு அரங்கனைப் பார்த்து 'சந்தோஷம்' என்று சொன்னார். ஸ்நேகமாகச் சிரித்தார். இரண்டு தூண்களுக்கு நடுவே நின்று கொண்டு கைகூப்பினார்.

கதையை முடித்துவிட்டு சீனுவாசன் திரும்பி வேணுகோபாலைப் பார்த்தார்.

"எனக்கு இப்போ புரியுது. அவனன்றி ஓர் அணுவும் அசையாது. கெடுதல்னு எதைச் சொல்றீங்களோ அதுல ஒரு நல்லது நிச்சயம் இருக்கு. எல்லா விஷயமும் நல்லதுக்காகத் தான் நடக்குது."

வேணுகோபால் கேட்க, ஆமென்று சீனுவாசன் தலையசைத்தார். இருவருக்கும் கடவுள்பற்றி ஒரு தெளிவு ஏற்பட்டிருந்தது.

மணிமண்டபத்திற்கு நடுவே உட்கார்ந்திருந்த மகான், மெல்ல சிரிப்பதாய் சீனுவாசனுக்குப்பட்டது.

## அன்னதானம்

அன்றைக்குக் காலை நிலநடுக்கம் பற்றி மக்கள்

பீதியுடன் பேசிக் கொண்டிருக்கும்போதே அவர்களைத் தாண்டி வேறு வேலைக்குப் போக வேண்டிய நிர்பந்தம் எனக்கு ஏற்பட்டது. திருவல்லிக்கேணிக்கு கடற்கரைச் சாலை வழியாகப் போய்விடலாம் என்று முடிவெடுத்த போது கடற்கரைச்சாலை அடைபட்டு இரண்டாம் முறையாக கடல் தண்ணீர் உள்ளுக்குள் வந்து கொண்டிருந்தது. நல்ல மேடாக இருக்கின்ற ஸாந்தோம் மாதா கோவிலில் இரண்டு பக்கமுமுள்ள தெருக்களிலிருந்து தண்ணீர் பொங்கி உள்ளுக்குள் வருவதை பார்க்க முடிந்தது.

இந்தச் சாலையிலேயே இவ்வளவு வேகமாக தண்ணீர் வந்தால் கடற்கரைக்கு ஓரமாக இருக்கிற குப்பம் என்னவாகும். சீனுவாசபுரம் என்னவாகும் என்று சிந்தித்துக் கொண்டே வண்டி ஓட்ட, ஜனங்கள் அலறி அடித்துக் கொண்டே இன்னும் அலை வருகிறது. இன்னும் அலை வருகிறது என்று ஓடினார்கள்.

நான் மேடேறினேன். அந்தப் பேரழிவிலிருந்து எவரையும் காப்பாற்ற வலுவின்றி ஜனங்கள் மிரண்டு ஓடுவதையே பார்த்துக் கொண்டிருந்தேன். அடுத்த ஒரு மணி நேரத்தில் அழிவு பெரியது என்ற செய்தி வந்தது. அடுத்த இரண்டு மணி நேரத்தில் மிகப்பெரியது என்று செய்திகள் வந்த வண்ணம் இருந்தன. மனம் ஒடிந்து போயிற்று.

ஏன் இப்படி, எதனால் இப்படி என்று சுனாமி தாக்கிய பல இடங்களுக்கும் போய்ப் பார்க்க ஜனங்களின் கதறல் நெஞ்சை பிளந்து போட்டது. தாங்கவே முடியாத சோகம். மிகப்பெரிய நரபலி என்பதை பிற்பகல் நேரத்தில் புரிந்து கொண்டேன். ஒன்றிரண்டா, பலநூறா, ஆயிரமா, கரையோரக் களபலிகள் கணக்கில்வாரா என்று யோசிக்க தொலைக்காட்சிப் பெட்டிகள் லட்சத்தைத் தாண்டி விட்டன என்று பயமுறுத்தின. ஆனால், தவித்த அந்த ஜனங்களுக்கு நகரத்தில் பத்திரமான இடத்தில் இருக்கின்ற அத்தனை பேரும் உதவி செய்ய முன் வந்ததை கண்ணாரப் பார்த்து நெகிழ்ந்தேன். அப்படி அலறி, துக்கத்தில் கதறி, நாலாபுறமும் பித்துப் பிடித்ததுபோல ஓடுகின்ற ஜனத்திற்கு முதலில் தேவையானது என்ன.

ஆறுதலான வார்த்தைகள்.

பிறகு.

அள்வான உணவு. மிக அருமையான உணவு வகைகள் அன்று மாலை நேரம் மடமடவென்று

வினியோகிக்கப்பட்டதை நான் பார்த்தேன். பல பெரிய ஹோட்டல்கள். பதினைந்தாயிரம், இருபதாயிரம் என்று பொட்டலங்களைக் கொண்டு போய் எல்லாப் பக்கங்களுக்கும் வினியோகித்ததை என்னால் பார்க்க முடிந்தது.

"காலைலேர்ந்து ஒண்ணுமே சாப்பிடலிங்க." வாய் நிறைய சாம்பார் சாதம் வைத்துக் கொண்டு அழுதபடியே பேசிய ஒரு இளைஞன் இன்னும் என் மனதுக்குள் நிற்கிறான்.

அந்த சாம்பார் சாதம்தான் அவன் உடல்வலுவைப் பெருக்கி, உயிர் அசைவை நிறுத்தி, அவனை மேற் கொண்டு பல பேருக்கு உதவிகள் செய்ய வைத்தது. அவன் சொந்த இழப்புகளைப்பற்றி கவலைப்படாமல், மற்ற இழப்புகள் ஏற்படாமல் இருக்க இரவு முழுவதும் அலைந்தான். ட்ரம், ட்ரம்மாய் தேனீரும், பிளாஸ்டிக் குவளைகளும் கொண்டு வரப்பட்டு சகலருக்கும் வினியோகிக்கப்பட்டன.

ஸ்ரீ கிருஷ்ணர் கீதையில் சொன்னது ஞாபகம் வந்தது.

தானத்தில் மிகவும் சிறந்தது அன்னதானம். ஏனெனில் அந்த அன்னதானம்தான் உலகத்திலுள்ள எல்லா சுகங்களையும் சாப்பிடுபவனுக்குக் கொண்டு வந்து கொடுக்கிறது. அந்த அன்னம் இல்லையெனில் அவனால் எந்த சுகத்தைப் பற்றியும் நினைத்தும் பார்க்க முடியாது. எனவே, வாழ்க்கையில் நொந்து போகிறவனுக்கு முதலில் உணவு கொடு. பிறகு நலம் விசாரி. பொன், பொருள், வாகனம் எல்லாவற்றையும் விட மனிதனுக்கு அன்னமானது முழுமையான திருப்தியை அளிக்கிறது. போதுமான அன்னம் எல்லோருக்கும் கிடைத்தால் மக்கள் பரஸ்பர ஹிம்சை, களவு, துரோகம், கோபம் முதலான கெடுதல்களி லிருந்து விடுபட்டவராய் விளங்குகிறார்கள். உலகில் சாந்தி நிலைபெறும் என்றும் சொல்லப்படுகிறது.

உணவினுடைய அவசியத்தையும், அன்னதான மகிமையையும் இந்தச் சுனாமி பேரழிவிலிருந்து நான் புரிந்து கொண்டேன்.

எது அன்னதானம்.

நாமே சமைத்து நமக்குத் தெரிந்தவர்களுக்கு வினியோகிப்பது அன்னதானமா. சில இடங்களில் அப்படி நடைபெறுவதை பார்த்திருக்கிறேன்.

வேதத்தில் அன்னதானம் பற்றி அதிகம்

குறிப்பிடப்பட்டிருக்கிறது.

நண்பரோ, குருவோ, உறவினரோ அல்லது பரிச்சயமானவரோ அதிதி அல்ல என்று சொல்லப் படுகிறது. அதாவது பரிச்சயமற்று அதே நேரத்தில் பசியோடு இருப்பவரே அன்னதானத்திற்கு உகந்த விருந்தாளி. தானே சமைத்து நமது குழந்தைகளுக்குப் போட்டு எதிர் வீட்டுக்கும் கொடுத்து, நண்பர்களுக்கும் பரிமாறினால் அது அன்னதானம் என்று ஆகாது. பரிச்சயமற்ற பசியால் வாடுகின்ற மனிதர்களுக்கு அள்ளி அள்ளிக் கொடுப்பதே அன்னதானம். அதுமட்டுமல்ல. வேதத்தில் இன்னொரு வாக்கியமும் இருக்கிறது.

அன்னதானத்தைப் பெறுவதற்காக தன்னுடைய குலத்தினுடைய பெருமை பற்றியோ, கோத்திரத்தின் பெருமை பற்றியோ, கல்வியின் பெருமை பற்றியோ, ஆளுமையின் பெருமை பற்றியோ சொல்லிக் கொண்டு வருகிறவன் அன்னதானத்திற்கு ஏற்றவனாக மாட்டான். பசி மட்டுமே அன்னதானத்திற்கு அடிப்படையான காரணமாக இருத்தல் நல்லது என்று சொல்கிறது. மற்ற எந்த கல்யாண குணங்களும் நீ கைநீட்டி சோறு வாங்குவதற்கு ஆதாரமானவை அல்ல என்று வலியுறுத்துகிறது.

யார் அன்னதானம் செய்ய வேண்டும்.

யார் வேண்டுமானாலும் அன்னதானம் செய்யலாம்.

மணிமேகலையில் ஆபுத்திரன் என்ற ஒரு கதாபாத்திரம் வருகிறது. அந்த ஆபுத்திரன் மதுரையில் சிந்தாதேவியான சரஸ்வதி தேவியின் கோயில் வாசலையே தன் இருப்பிடமாகக் கொண்டு, தினமும் பிச்சைப் பாத்திரத்தை கைகளில் ஏந்திக் கொண்டு, இளகிய மனமுடைய செல்வந்தர்களான கிரகஸ்தர்கள் வாழும் மதுரை மாநகர் வீதிகளில் சுற்றித் திரிந்து யாசித்தான். அவ்வாறு கிடைத்த பிச்சை உணவையும் காணார், கேளார், கால்முடப்பட்டோர், பேணுநரில்லோர், பிணி நடுக்குற்றோர் யாவரும் வருக வருகவென்றிசைத்துடனூட்டி, பிறகு தான் உண்டதாக மணிமேகலையில் எழுதப்பட்டிருக்கிறது.

பிச்சை எடுத்தும் பிறருக்கு உணவளிக்கலாம் என்பதை இதன் மூலம் தெரிந்து கொள்கிறோம்.

ஆனால், அந்த ஆபுத்திரன் இரவு நேரம் உறங்கிக் கொண்டிருக்கையில் பசியோடு சிலர் வந்து அவனிடம் உணவு இருக்குமா என்று கேட்டு கையேந்தினார்கள்.

ஆனால், ஆபுத்திரனிடம் உணவு இல்லை. என்ன செய்வது என்று அவன் மனம் கலங்கினான்.

அந்த மனக்கலக்கத்தை அவன் அமர்ந்த கோயிலுக்குள்ளே இருந்த சிந்தாதேவியானவள் மனம் கனிந்து இறங்கி அவனுக்கொரு அட்சய பாத்திரம் கொடுத்தாள்.

அது எப்பேர்பட்ட அட்சய பாத்திரம்.

வாங்குநர் கையகம் வந்துதவல்லது, தான்றொலை வில்லாத் தகைமைய என்று அமைவது.

அதாவது வாங்குபவர்கள் கைகள் வலிக்குமேயன்றி இந்தப் பாத்திரத்தில் அன்னம் வற்றாது என்று கூறி அவன் வருத்தத்தை சிந்தாதேவி நீக்கினாள்.

பிற்பாடு அந்த அட்சய பாத்திரம் பல்வேறு காரணங்களால் மணிமேகலை என்ற பெண்ணிடம் வந்து அடைந்ததை மணிமேகலைக் காவியம் கூறும்.

உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே என்ற கொள்கையை மிகத் திறம்பட இந்தக் காவியத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. உரத்தக் கூச்சலில்லாமலும் கோபமில்லாமலும், அலட்டல் இல்லாமலும், அகம்பாவம் இல்லாமலும் உணவிட வேண்டும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

அதிதி என்பவன் தேவன் என்று கூறப்படுகிறது. அதேபோல உணவு உண்பவன் அந்த உணவை உண்டு விட்டு, 'அன்னதாதா சுகி பவ' என்று சொல்ல வேண்டும். வாழ்த்த வேண்டும் என்றும் வற்புறுத்தப் படுகிறது.

அன்னமிட்டவன் சுகமாக இருக்கட்டும் என்று மனம் நிறைய வாழ்த்த வேண்டும் என்பது இதன் பொருள். நிச்சயமாகவே நன்றாக உண்டவனுடைய மனம் அதை இயல்பாகச் செய்யும். இதை நான் இன்றைய கோவில்களில் கவனித்திருக்கிறேன்.

தமிழக முதல்வர் செல்வி ஜெ.ஜெயலலிதா அவர்களின் அன்னதானத் திட்டத்தின் கீழ் மக்கள் உணவருந்துவதை, நான் தினம் போகும் முண்டகக் கண்ணியம்மன் கோவிலிலும், மயிலை கபாலீஸ்வரர் கோயிலிலும் கவனித்திருக்கிறேன்.

இது தேவையற்ற திட்டம். உண்பவர்கள் சோம்பேறிக் கூட்டம் என்றெல்லாம் பலர் காதுபட விமர்சித்தார்கள். ஆனால், அது உண்மையல்ல. நடக்க முடியாத தொண்டு கிழவிகளும், இளம் சிறார்களும், நோயுற்றவர்களும், ஊனமுற்றவர்களும்தான் அதிகம்

பகல்நேரம் வந்து உணவருந்திவிட்டுப் போகிறார்கள் என்று தெள்ளத் தெளிவாகக் காண்கிறேன். அப்படி உண்கின்ற சிலரை நான் உற்றுப் பார்த்திருக்கிறேன். கை நடுங்க குழம்பு சோறும், ரசம் சாதமும், மோர் சோறும் சாப்பிடுகின்ற அந்தக் கிழவிக்கு இந்தத் திட்டமில்லையெனில் வேறு யார் உணவளிப்பார்கள் என்ற கேள்வி எனக்குள் எழுவதுண்டு. இந்தக் குழந்தைகள் இப்படி வயிறார சாப்பிடுகின்றனவே இப்படிப்பட்ட உணவு அவர்களுக்கு வேறு எங்கு கிடைக்கும் என்ற எண்ணமும் எனக்கு எழுந்ததுண்டு.

அவர்கள் முதலமைச்சர் ஜெயலலிதா வாழ்க என்று கோஷமிடவில்லை. ஆனால் ஒரு ஏப்ப சத்தம் அந்த வாழ்த்தொலியாக வெளிவருவதை நான் கண்டிருக்கிறேன். மிகத் திருப்தியாக அவர்கள் கை கழுவி போகும்போது அந்த நிறைவு, அந்த சந்தோஷம், இதற்கு யார் காரணமானவரோ அவரை நிச்சயம் வாழ்த்தும் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது.

அன்னதானம் ஒரு உன்னதமான விஷயம்.

உங்களால் முடிந்த அளவு உணவிட வேண்டு மென்ற எண்ணத்தை பலப்படுத்திக் கொள்ளுங்கள்.

உணவு கொடுக்கும்போது உயிர் மட்டுமல்ல. உலகத்திலுள்ள பல சுகங்களை அந்த உணவின் மூலம் அந்த உணவு உண்பவருக்கு நீங்கள் தருகிறீர்கள். எனவே, அதேவித சுகங்கள் உங்களையும் வந்து அடையும் என்பதில் எந்தச் சந்தேகமும் இல்லை என்று எனக்குத் தோன்றுகிறது.

கோபமில்லாமல், அலட்டல் இல்லாமல் மற்றவருக்கு உணவைத் தானமாகக் கொடுக்க நாம் கற்றுக் கொள்ள வேண்டும். அந்தப் பழக்கத்தை நடைமுறைப்படுத்த வேண்டும். அடுத்தத் தலைமுறைக்கு கற்றுத் தரவேண்டும்.

## முண்டகக் கண்ணி அம்மன்

சற்றேறக்குறைய முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு கணையாழி என்கிற இலக்கியப் பத்திரிகையில் என்னுடைய முதல் கவிதை, 'டெலிபோன் துடைப்பவள்' பிரசுரமாகியிருந்தது. அந்தப் பத்திரிகை எல்லா கடைகளிலேயும் கிடைக்காது. மயிலாப்பூர்

ஆஞ்சநேயர் கோயிலுக்கு அருகேயுள்ள கடையில் அந்தப் பத்திரிகையை வாங்கிப் பிரித்து; என் கவிதை வெளியானதைப் பார்த்து, அதற்குக் கீழே கொட்டை எழுத்தில் இருந்த என் பெயரைப் பார்த்து நான் பரவசமடைந்தேன். கணையாழியின் அட்டையில் ஒரு வட்டச் சூரியனும் பெரிய மலர்ந்த தாமரையும் கோட்டுச் சித்திரமாக வரைந்திருந்தார்கள். ஒன்றுக்கு இரண்டு பிரதி வாங்கிய பிறகு எனக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. அந்த சந்தோஷத்தை யாரிடமாவது பகிர்ந்து கொள்ள வேண்டுமென்று ஆசையாக இருந்தது.

எனக்கு அப்பொழுது நெருங்கிய நண்பர்கள் இல்லை. வயது இருபத்து மூன்று. ஒரு ஜெனரல் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியில் வேலை செய்து கொண்டிருந்தேன். அங்கேயும் கவிதைகள் பற்றியோ, கதைகள் பற்றியோ பேசுவாரில்லை. அம்மா நிச்சயம் சந்தோஷப்படுவாள். பாராட்டுவாள். ஆசீர்வாதம் செய்வாள். ஆனால், எல்லாவற்றிற்கும் அம்மாவை தொந்தரவு செய்கிறோமே. இன்னும் நெருக்கமாக யாரேனும் பாராட்டுவார் இல்லையே என்று மனம் ஏங்கியது. கவிதை வெளி வந்ததற்கு நன்றி தெரிவிக்கவும், என் சந்தோஷத்தை பகிர்ந்து கொள்ளவும் நான் அந்த ஆஞ்சநேயர் கோயிலின் பின்பக்கத் தெருவில் நடக்கத் துவங்கினேன். பாலம் தாண்டி, பள்ளிக்கூடம் தாண்டி அந்த சிறிய கோயிலுக்குள் நுழைந்தேன். அது முண்டகக் கண்ணியம்மன் கோயில்.

கோயிலில் கூட்டம் இல்லாமல் இருந்தது. கோயிலுக்குப் போய் நான் அந்த இரண்டு பிரதிகள் கணையாழியையும் வைத்தேன். கைகூப்பினேன்.

நெஞ்சுக்கு நீதியும் தோளுக்கு வாளும்
நிறைந்த சுடர்மணிப் பூண்..

என்று பாரதியார் பாடலை மெல்லிய குரலில் பாடினேன். சந்தோஷம் தாங்காமல் கண்ணில் நீர் கட்டியது. கோயிலை தனிமையாக சுற்றி வலம் வந்தேன். மனசுக்குள் வாழ்வு பற்றிய மிகப்பெரிய கேள்வி ஒன்று எழுந்தது.

அட... என் முதல் கவிதை பிரசுரமாகி விட்டது. என்னால் கவிதை எழுத முடிகிறது. பத்திரிகை அதை பிரசுரிக்கிறது. நான் தொடர்ந்து என்ன செய்ய வேண்டும். இது முக்கியமான விஷயமா. இல்லை

பொழுதுபோக்கா. இல்லை இடைஞ்சலா என்று யோசித்தேன்.

ஒரு கவிதை பிரசுரமானதில் உண்டான பூரிப்பு, நிம்மதி, சந்தோஷம் வேறு எதிலும் கிடைக்கவில்லை. வெறும் பள்ளியிறுதி தேறி இருந்த நான், பட்டதாரியாக மாற பரிட்சை எழுதுவதைவிட இப்படி கவிதை எழுதலாம் என்று தோன்றிற்று. தாயே என்னை எழுத்தாளனாக்கு என்று மறுபடியும் சன்னதிக்கருகே நின்று வேண்டினேன்.

*எள்ளத் தனைப்பொழுதும் பயனின்றி*
*இரா தென்றன் நாவினிலே*
*வெள்ளமெனப் பொழி வாய் சக்தி வேல் சக்தி*
*வேல் சக்தி வேல் சக்தி வேல்!*

ஆயிரத்து தொள்ளாயிரத்து அறுபத்து ஒன்பதில் நடந்த அந்த நிகழ்ச்சி, இன்னும் என் மனதில் பசுமையாக இருக்கிறது. இதோ நான் ஒரு எழுத்தாளன். தமிழகம் போற்றும் எழுத்தாளன். என்னைச் சுற்றி நல்ல இதயங்களும், அற்புதமான மனிதர்களும் நிறைந்திருக்கிறார்கள்.

டிராக்டர் கம்பெனியில் வேலை செய்கிறபோது வாரத்திற்கொரு முறை என்று போய் வருவேன். இப்பொழுதும் தினம் போய் வருகிறேன். தினமும் அவளோடு சல்லாபிக்கிறேன்.

ஒரு ஊரின் எல்லைக் காவல் தெய்வங்கள் சிறப்பாக இருக்க வேண்டுமென்றால் அந்த ஊர் செழுமையாக இருக்க வேண்டும். ஒரு ஊர் செழுமையாக இருப்பின் அந்த ஊர் எல்லைக்காவல் தெய்வங்களின் கோயில்கள் மிகச்சிறப்பாக பராமரிக்கப்படும். மயிலை மிகச் செழுமையான ஊர். மத்தியத்தர வர்க்கத்தின் உற்சாகமான மனிதர்கள் நிறைந்த ஊர்.

கபாலி கோயில் பிரதோஷமும், பார்த்தசாரதி கோயில் சனிக்கிழமையும், ராகவேந்திர சுவாமிகளின் வியாழக்கிழமையும், ஷீர்டி பாபாவின் தினசரி நாளும் மிகச் சிறப்பானவையாகவே இங்கு இருக்கின்றன.

ஆடி மாதம் முண்டகக் கண்ணியம்மன் கோயிலுக்குள் நுழையக்கூட முடியாது. நல்ல உச்சி வெய்யிலில் கூட நாற்பது, ஐம்பது பக்தர்கள் நிறைந்து அம்மனைத் தொழுவார்கள். விதம்விதமான வேண்டுதல்களைச் செய்வார்கள். மிகச்சிறப்பான முறையில் அன்னதானப் பணி நடந்து வருகிறது. குழம்பும், ரசமும், மோரும், காயும், அப்பளமுமாய் நாள்

தவறாது விருந்து படைக்கப் படுகிறது. ஏழை மக்கள் வயிறார சாப்பிட்டுப் போகிறார்கள்.

இது அம்மனின் அருள். மயிலை வாழும் மக்களின் கொடை. கோவில் பராமரிப்பில் ஏற்பட்ட தெளிவு.

அது என்ன, முண்டகக் கண்ணியம்மன்?

கண்கள் முண்டகம் போல மலர்ந்த தெய்வம் என்று அர்த்தம். முண்டகம் என்றால் தாமரை என்று பொருள். ஆனால், கோயிலுக்குள் இருப்பது நடுகல் போன்ற அமைப்பு. அந்த நடுகல்லில் சூலம் போன்ற ஒரு குறி. அந்தக் கல்லில் இறுகக் கட்டப்பட்ட ஒரு வெள்ளிக்கம்பி. இவ்வளவுதான் முண்டகக் கண்ணியம்மன். அது சிலையுமல்ல. சிற்பமுமல்ல. வெறும் செதுக்கப்பட்ட கல். அதற்குத்தான் இத்தனை சக்தி. அதற்குத்தான் இத்தனை ஆராதனை, அபிஷேகங்கள். ஆனாலும் விதம்விதமான முகங்கள் வைக்கப்பட்டு, கலசங்கள் சார்த்தப்பட்டு அவள் வழிபடப் படுவாள். மிகச் சமீபத்தில் மிக நல்ல முறையில் கனமான தங்கத்தகட்டில் அவளுக்கு முக கவசம் செய்திருக்கிறார்கள். நாகம் குடை பிடிக்க பெரிய விழிகளோடும், சிரிப்போடும் விளங்குகிறாள்.

கோயில் அளவானது. மூர்த்தி மிகச் சிறியது. ஆனால், கீர்த்தியோ மிகப்பெரியது. வெளியூரிலிருந்தும், வெளி தேசத்திலிருந்தும் வந்து அம்மனுக்கு நேர்ந்து கொண்டு போகிறவர்கள் பலபேரை அறிவேன்.

"போன வருஷம் அன்னதானத்துக்கு கொடுத்தேன். இந்த வருஷமும் கொடுக்கணும். போன வருஷம் புடவை சார்த்தினேன். இந்த வருஷமும் புடவை சார்த்தினேன்." என்று ஒரு முறை அவளை வணங்கிக் கொண்டாட ஆரம்பித்து விட்டால், விட்டு விலக மனமில்லாமல் மறுபடி, மறுபடி அவளை கொண்டாடுகின்ற மனிதர்களே அதிகம்.

ஆயிரத்து இருநூறு வருடத்து பழமையான கோயில் என்று சொல்கிறார்கள். வாழைத் தோட்டமும், வெற்றிலைத் தோட்டமும் நிறைந்த இடம் என்று சொல்கிறார்கள்.

செழுங்கழுநீர் ஓடை என்று மிக அற்புதமான ஓடை மிகச் சமீபத்திலே ஓடியிருக்கிறது. நூறு வருடங்களுக்கு முன்புதான் தூர்க்கப்பட்டிருக்கிறது. நேர் எதிரே மாதவ பெருமாள் கோவில். அதைத்தாண்டி வீரபத்திரர் கோவில். இன்னும் சற்றுத் தாண்டி கடற்கரை என்று ஒரு செழுமையான கடற்கரை கிராமமாக அந்தப்பகுதி

இருந்திருக்கிறது.

மயிலைக்கும், திருவல்லிக்கேணிக்கும் இடையேயான பாதையாக இருந்திருக்கிறது. மாடமாளிகை சூழப்பட்ட மயிலை. அழகிய பெண்கள் நடமாடும் மயிலை. நல்ல திருவிழாக்கள் நடக்கின்ற மயிலை என்று வெகுகாலம் முன்னே பாராட்டப்பட்ட மயிலையில் முண்டகக் கண்ணி அமர்ந்து அருள்பாலித்துக் கொண்டிருக்கிறாள்.

திருமணத்தடையா, குழந்தை பேறு இல்லையா, வீட்டில் கலகமா, புருஷன் மனைவிக்குள் பிணக்கா, நண்பர்களுக்குள் பிரிவா, பாகஸ்தர்களுக்குள் அபிப்ராய பேதமா, வியாபாரத்தில் நஷ்டமா, நன்கு படித்துத் தேறி நல்ல வேலையில் அமர வேண்டுமா, வேறு ஏதேனும் வியாதியா, என்ன செய்தாலும் குணமாகவில்லையா. இவளிடம் வாருங்கள். கைகூப்புங்கள். மனதார மனதார வாய்விட்டுப் பேசுங்கள். இது செய்கிறேன் தாயே என்று ஏதேனும் உள்ளுக்குள் தோன்றுவதை சங்கல்பம் செய்து கொள்ளுங்கள். நிச்சயம் உங்கள் குறைகள் தீரும். எனக்கு இதில் நெல்முனையளவும் சந்தேகமில்லை.

என் மகளுக்கு நல்ல கணவன் கிடைக்க வேண்டுமே என்கிற வேண்டுதலும், அவளுடைய திருமணம் மிகச் சிறப்பான முறையில் நடைபெற வேண்டுமே என்கிற வேண்டுதலும் செய்து கொள்ள இந்த விஷயங்கள் மிக மிகச் சிறப்பாக நடைபெற்றன, என் இருதய நோயின் உபாதையை தீர்த்து வைத்தவள் இவளே. இவளுடைய சன்னதிக்கு நேர்பின்னே ஒரு நாகம் புடைப்புச் சிற்பமாக கல்லில் வடிக்கப்பட்டிருக்கிறது. இந்த இடத்தின் தன்மை விறுவிறுப்பாக இருக்கிறது. இந்த இடத்தினுடைய அதிர்வுகள் மிக பலமாக இருக்கின்றன என்று பல பெரிய மனிதர்கள், சான்றோர்கள் என்னிடம் தெரிவித்திருக்கிறார்கள். நானும் உணர்ந்திருக்கிறேன்.

சமீபத்தில் மிகச் சிறப்பாக கும்பாபிஷேகம் நடைபெற்றது. அம்பாளின் சன்னதிக்கு மேல் விமானம் இல்லை. எனவே, கோபுரத்திற்கு நூதனமான முறையில் கும்பாபிஷேகம் செய்தார்கள். என்றேனும் ஒருநாள் விசேஷமில்லாத அமைதியான நாளில், அமைதியான நேரத்தில் இவளை வந்து பார்த்து, இவளோடு பேசிவிட்டுப் போங்கள். உங்களால் இவ்ளை விட்டுப் பிரிந்திருக்கவே முடியாது. மறுபடி மறுபடி இவள் உங்களை தனக்கருகே வைத்திருப்பாள்.

உங்களோடு இவளும் பேசுவாள்.

மயிலாப்பூர் திருவள்ளுவர் சிலைக்கு பின்பக்கமுள்ள சாலையில், சமஸ்கிருதக் கல்லூரியை ஒட்டிப் போகும் பாதையில் இவளுடைய கோயில் இருக்கிறது. நிச்சயம் சென்னைக்கு வரும்போது மயிலாப்பூருக்கு வாருங்கள். மயிலாப்பூருக்கு வந்தால் இவள் இருக்குமிடம் தேடி கண்டு பிடித்து, பத்து நிமிடமாவது இவளை தரிசித்து விட்டுப் போங்கள். உங்கள் வாழ்வின் வளங்கள் பெருகும் என்பது திண்ணம்.

## சாக்தம் என்கிற சக்தி வழிபாடு

நண்பர் ஒருவரை எதிரே பார்க்கிறோம். கைக்கூப்பி வணங்குகிறோம். நலமா என்று கேட்கிறோம். அவருடைய வீட்டிலுள்ளவர்களை விசாரிக்கிறோம். வேலைகளை, வெற்றிகளை கேட்டுத் தெரிந்து கொள்ளுகிறோம். அவரும் தான், தனது என்று தனது சுற்றத்தை, தன் வெற்றிகளை, தன் உழைப்பை, தனது சம்பாத்தியத்தை, தன் சந்தோஷத்தை நம்மோடு பகிர்ந்து கொள்கிறார்.

அவர் தான் என்று சொன்னது தன் உடம்பையா அல்லது வேறு ஏதேனுமா. அவர் உடம்பு எதனால் இயங்குகிறது. எதனால் பேச்சு வந்தது. எதனால் செய்ய முடியும். செய்ய முடிந்தது என்றெல்லாம் சொல்ல முடிந்தது. உள்ளுக்குள்ளே இருக்கின்ற ஓர் சக்தியல்லவா அவரை இன்முகத்தோடும், நல்லறிவோடும், நம்பிக்கையோடும் பேச வைத்தது. ஆக, நண்பர் என்பது வெறும் உடம்பல்ல. நாம் பேசுவதெல்லாம் உடம்பு வைத்தும், உடம்பு குறித்தும், உடம்பாகவும் பேசுகிறோமே தவிர உடம்புக்குள் இருக்கின்ற ஓர் விஷயம் முதன்மையாக நாம் பேசுகிற போது படவில்லை. உடம்புக்குள்ளே பொதிந்திருக்கிற ஒரு சக்தி இயங்கி, அந்த உடம்பை அசைவித்து, நல்லறிவை தோற்றுவித்து, நம்மிடையே பரஸ்பரம் பேச வைக்கிறது. நமக்குள்ளும் அந்தச் சக்தியே விதம்விதமாய் இயங்குகிறது. ஆனால் அந்த உயிர்ச்சக்தி எங்கிருக்கிறது என்றும், எப்படி இயங்குகிறது என்றும் நாம் கவலைப்படவில்லை. வலுவாக இருக்கிறோம், தெளிவாக இருக்கிறோம்.

சந்தோஷமாக இருக்கிறோம். சாதனைகள் புரிந்து கொண்டிருக்கிறோம் என்பது எல்லாமே நாம் நம் உடம்பை முன் வைத்து பேசுகின்ற பேச்சுக்கள்.

நாம் ஒரு வீட்டிற்குப் போகிறோம். அந்த வீட்டுத் தலைவனுக்கு மாலையிட்டு வாழ்த்துச் சொல்லுகிறோம். அவர் வளரவேண்டும் என்றும், அவரால் இன்னன்ன உதவிகள் வேண்டுமென்றும் விளக்குகிறோம். அவர் கைகூப்பி தன்னால் இயன்றவற்றைச் செய்கிறேன் என்று சொல்கிறார். அவருக்கு மாலையிடும்போதும் அவர் செய்கிறேன் என்று சொல்லும்போதும் அவருக்குப் பின்னால் அவருடைய மனைவி இருந்து அவரை கவனித்துக் கொண்டிருக்கிறாள். அவ்வப்போது அவருக்கு விஷயங்களை எடுத்துச் சொல்கிறாள். அவரும் மனைவியை ஒரு பார்வை பார்த்துவிட்டு சம்மதங்கள் தருகிறார். நாம் மனைவிக்கு மாலையிடுவதில்லை. மனைவியோடு நேரடியாகப் பேசுவதில்லை. தலைவனை முன்னிட்டு பேசுகிறோமே ஒழிய, அந்தத் தலைவனுடைய இயக்கம் தலைவியினுடைய கையில் இருக்கிறது. அவளுடைய அனுமதியும், அவளுடைய ஆலோசனையும் அவருக்குத் தேவையாக இருக்கிறது. வீடென்பது அவரென்றாலும் சக்தி வேறொரு இடத்திலிருந்து புறப்பட்டு அவரை இயங்க வைக்கிறது.

எந்த சக்தி அவரை இயங்க வைக்கிறது என்று உற்றுப் பார்த்துக் கற்றுக் கொண்டால், எதுவும் இங்கே தனியாக இயங்க வில்லை. உள்ளார்ந்த சக்தியின் பார்வை பட்டுத்தான் இயங்குகிறது என்பதை மிக மிகத் தெளிவாக் புரிந்து கொள்ளலாம். இந்த சக்தியைத்தான் பெரியோர்கள் தெரிந்து கொண்டு வணங்கினார்கள். வெளிப்பார்வைக்கு இது தெரியாது போனாலும் முன் வந்து நிற்காது போனாலும் பின்பக்கம் நின்று முழுவதுமாய் இயங்குவது இந்த சக்தியே. இந்த சக்தியை தொடர்பு கொண்டால்தான் வாழ்க்கை முழுமையாகிறது என்பதை புரிந்து கொண்டார்கள். அந்தச் சக்தியைத் தேடி கண்டு பிடித்து வழிபாடு செய்கின்ற விஷயத்திற்கு பெயர்தான் சாக்தம். சாக்த வழிபாடு.

வெளிப்பார்வைக்கு தெரிகின்ற விஷயங்களை புறக்கணித்துவிட்டு எது சூட்சமமோ அதைத் தொழுவதுதான் சாக்த வழிபாடு.

மரம் என்பது பூக்களோ, இலைகளோ, கிளைகளோ

அல்ல. அது வேர். பூமி முழுவதும் பரவியிருக்கின்ற அந்த சல்லி வேர்களின் இயக்கம்தான் மரத்தை இத்தனை பெரிதாக, இத்தனை வலுவுள்ளதாக, செழிப்புள்ளதாக காட்டிக் கொண்டிருக்கிறது என்பதை முன்னோர்கள் புரிந்து கொண்டார்கள். ஆன்றோர்கள் அதைக் கண்டு வணங்கினார்கள்.

சக்தி கண்ணுக்குத் தெரிவதில்லை. அதற்கு ரூபமில்லை. ஒரு துப்பாக்கியிலிருந்து குண்டு புறப்படுகின்ற காரணம் ஒரு சக்தியின் உதையல். ஒரு சக்தியின் அசைவினால்தான். அந்த ஈயக்குண்டு வெளியே கிளம்பி இலக்கு நோக்கிப் போகிறது. சக்தி அதற்கு அருகே இருக்கும் வரை அது விரைவாகிறது. சக்தி அதனின்று நகர்ந்ததும் கீழே விழுந்து விடுகிறது. வெறும் ஈயக் குண்டுக்குள் எந்த பலமும் இல்லை. ஈயக்குண்டை ஒரு சக்தி தூக்கி எறிகிறது. ஆனால், அந்த சக்திக்கு உருவமில்லை. ஈயக்குண்டுதான் நம் கண்ணுக்கு தெரிகிறதே தவிர, இயக்குகின்ற விஷயத்தை நாம் பார்ப்பதில்லை. பார்க்க முடிவதுமில்லை.

இப்படி கண்ணுக்குத் தெரியாத சக்தி உலகமெங்கும் பல்வேறு விதமாய் பரந்திருப்பதை ஆன்றோர்கள் கண்டு பிடித்து அதனோடு தொடர்பு கொள்ள விரும்பினார்கள். உருவமுள்ளதை தொடர்பு கொள்ளுவது எளிது. போய் விழுந்து வணங்கியோ, தழுவிக்கொண்டோ எடுத்து மடியில் வைத்துக் கொண்டோ, முத்தமிட்டோ, கெஞ்சியோ, கொஞ்சியோ அதனோடு தொடர்பு கொள்ளலாம். ஆனால், உருவமற்று எங்கும் பரந்திருப்பதை எப்படி தொடர்பு கொள்வது. எதனால் ஸ்பரிசிப்பது. எப்படி கேட்பது. எப்படி உணர்வது என்று யோசித்துப் பார்த்தார்கள். எங்கும் பரவியிருப்பதை எங்கும் பரவியிருக்கும் மூலம் தான் தொட முடியும் என்பதை தெரிந்து கொண்டார்கள். உலகமெங்கும் பரவியிருக்கின்ற சக்தியை, உலகமெங்கும் பரவியிருக்கின்ற ஒலியின் மூலம் தொடர்பு கொள்ள ஆரம்பித்தார்கள்.

காற்று மண்டலமும் தாண்டி ஒலி போவதை உணர்ந்தார்கள். எங்கும் அடர்த்தியாய், பரந்து கிடக்கின்ற அந்தச் சக்தி ஒலி ரூபமாய் விரிந்து கிடப்பதை உணர்ந்தார்கள். தங்களிடமிருந்து ஒலியை வெளியே அனுப்பி, எல்லா இடத்திற்கும் இந்த ஒலியை

நகர்த்தி, சகல தொடர்பும் வைத்துக் கொண்டார்கள். அந்த ஒலிகள் என்ன என்பதை பல வருட தவத்திற்குப் பிறகு கண்டு பிடித்தார்கள். இதுவே வாழ்க்கையாக இருந்து இதையே கூர்ந்து கவனித்து, இதையே உள்ளுக்குள் தேக்கி வைத்து, எந்த ஒலி அசைவால் இதை எளிதில் தொட முடியும் என்று கவனித்துக் கண்டு பிடித்து, உலகத்திற்குச் சொன்னார்கள்.

எதிரே ஒரு நாய் இருக்கிறது. அன்பு நண்பனே என்று அந்த நாயை விளித்தால் அந்த நாய்க்கு புரியவில்லை. விரைப்பாய், முறைப்பாய் பார்க்கிறது. 'தோதோதோ' என்று நாக்கை துருத்தி உதடு குவித்து ஒருவிதமாக ஒலி எழுப்பினால், அந்த நாய் உடனே புரிந்து கொண்டு ஏதோ உண்பதற்கு கொடுப்பதற்காக அழைக்கிறார்கள் என்று குழைவாக வந்து வாலாட்டத் துவங்கிவிடுகிறது. நாய்க்கு அன்பு நண்பரே ஏன் புரியவில்லை. வாய் குவித்து எழுப்பிய அந்தச் சத்தம் எப்படிப் புரிந்தது. இந்த நாயோடு தொடர்பு கொள்ள அந்த சத்தம் ஒரு நல்ல வழி.

காட்டிலே வேட்டையாடும் வேடுவர்கள் மான்களைப் பிடிப்பதற்கு ஒரு விதமான ஒலி எழுப்பி, மான்களை அருகே வரச் செய்து, சுருக்கு வீசி பிடிப்பார்களாம். அந்த மான்களுக்கு தமிழோ, வடமொழியோ, ஆங்கிலமோ தெரியவில்லை. அந்த மான்களை அழைப்பதற்கென ஒரு குறிப்பிட்ட ஒலி இருக்கிறது.

தட்டிகளில் புறாக்களை வைத்து மேலேற்றி பறக்க விடுவது வழக்கம். புறாக்கள் உச்சி வெய்யிலில் சுற்றிச் சுற்றி பறந்து கொண்டிருக்கும். அந்த புறாக்களை மறுபடியும் கூண்டில் அடைக்க அதன் உரிமையாளன் விரும்பினால், அவன் அதை சீழ்கை அடித்துக் கூப்பிடுகிறான். வெகுதூரம் வெகு உச்சியில் பறந்து கொண்டிருக்கின்ற அந்தப் புறா, சீழ்கை ஒலி கேட்டதும் எங்கிருந்து அது வருகிறது என்று தெரிந்து கொண்டு, அது தன்னுடைய எஜமானன் குரல் என்பதையும் புரிந்து கொண்டு, மிக வேகமாக மறுபடியும் தட்டிக்கு வந்து உட்கார்ந்து, பிறகு கூண்டுக்குள் அமைதியாக போய் விடுகிறது.

வானத்தில் உச்சியில் பறக்கும் அந்த புறாவை தொடர்பு கொள்ள ஒலிபெருக்கி தேவையில்லை. உயர்வான வாசகங்கள் தேவையில்லை. ஒரு சீழ்கை போதும். அதுபோலவே பிரபஞ்ச சக்தியோடு தொடர்பு

கொள்ள சிலவித, சிலபல ஒலிகளை நமது முன்னோர்கள் கண்டு பிடித்து, அவைகளை ஒழுங்காக அடுக்கி, ஒரு மந்திர வாக்கியமாக செய்திருக்கிறார்கள்.

ஓம் என்பதும், ஸ்ரீம் என்பதும், ஐம் என்பதும், க்லீம் என்பதும் இம்மாதிரியான ஒலிகளில் சிலவை. இவைகளை ஒரு குறிப்பிட்ட விதத்தில் அடுக்கி, திரும்ப திரும்ப திரும்பச் சொல்லப்பட, அதற்கு ஒரு புது வலிவு ஏற்படுகிறது. மிக வேகமாய் எங்கு போய் தொடர்பு கொள்ள வேண்டுமோ அங்கே தொடர்பு ஏற்படுத்தி விடுகிறது.

சப்தம் என்பது நாக்கின் அசைவிலிருந்து, தொண்டைக் குழியிலிருந்து வெளியாகும் விஷயம் மட்டுமல்ல. பேசாத எண்ணத்திற்கும் வலிவிருக்கிறது என்று முன்னோர்கள் கண்டுபிடித்தார்கள். பேசுகின்ற சப்தத்தை விட பேசாத சப்தத்திற்கு இன்னும் கூர்மை அதிகம் என்பதை தெரிந்து கொண்டார்கள். எனவே உள்ளார்ந்து ஆழ்மனதில் குறிப்பிட்ட சில ஒலிகளை திரும்பத் திரும்ப சொல்லிக் கொண்டு வர, ஒரு கூர்மையான கத்தியாய், மிகப் பலமான ஆயுதமாய், உடம்பிலிருந்து வெளியேறி தொட வேண்டிய இடத்தைத் தொட்டு, நமக்கும் அந்த பிரபஞ்ச சக்திக்கும் ஒரு தொடர்பை மிக விரைவாக அந்த மந்திரங்கள் ஏற்படுத்துவதைக் கண்டு பிடித்து, நமக்கு வரமாய் கொடுத்தார்கள்.

அமைதி என்பது ஒரு சக்தி. ஞாபகத்திறன் என்பது ஒரு சக்தி. காதல் என்பது ஒரு சக்தி. செல்வம் என்பது ஒரு சக்தி. வீரம் என்பது ஒரு சக்தி. மக்கட்பேறு என்பது ஒரு சக்தி. வாக்குவன்மை என்பது ஒரு சக்தி. இவ்வித சக்திகளை எந்தவிதமான ஒலி அலைகளால் தொட முடியும். தொட்டு உலுக்கி எழுப்பி நம்மருகே அழைத்து வர முடியும் என்பதையும் தங்கள் வாழ்நாள் முழுவதையும் செலவழித்து நம்முடைய ரிஷிகளும், முனிவர்களும் கண்டு பிடித்து, அந்த சப்த ஒலிகளை மந்திரமாக்கி நம்மிடம் கொடுத்தார்கள்.

ஞாபக சக்தி அதிகரிக்க வேண்டுமா. அதற்கு ஒரு மந்திரம் இருக்கிறது. குழந்தைப்பேறு வேண்டுமா. அதற்கும் ஒரு குறிப்பிட்ட மந்திரம் இருக்கிறது. செல்வம் வேண்டுமா. ஒரு மந்திரத்தை திரும்பத் திரும்ப சொல்லுகிறபொழுது செல்வச் செழிப்பு நிச்சயம் ஏற்படுகிறது. எல்லாம் தாண்டி ஒரு அமைதியான மனோபாவனை வேண்டுமா. அதற்கும்

மந்திரம் இருக்கிறது.

உலகத்திலுள்ள அத்தனை விஷயங்களும் சக்தி ரூபங்கள் தானே. இந்த சக்தி ரூபங்களை நமக்குள் இருக்கின்ற உயிர்ச்சக்தியின் மூலம் உந்தி, உடம்பு என்கிற சக்தியின் மூலம் வெளிப்படுத்தி, பிரபஞ்சத்தில் உள்ள அந்த விஷயத்தோடு தொடர்பு ஏற்படுத்த, நாம் வெற்றி பெற்றவர்களாக, வெற்றி பெற்ற பிறகு அந்த வெற்றியை அமைதியாக அனுபவிப்பவர்களாக மாறிவிடுகிறோம்.

வாழ்க்கையின் உன்னதங்களை அற்புதமாக அனுபவிப்பதற்கு மிக எளிமையான சில வழிகளை மிக நிச்சயமான சில வழிகளை நமது ரிஷிகளும், முனிவர்களும் செய்திருக்கிறார்கள்.

இத்தனை திடமாக மந்திரங்கள் நம்மிடையே இருக்க அதை நாம் கைவிட்டுவிட்டு வேறு ஏதேதோ செய்து கொண்டிருக்கிறோமே இதற்கென்ன காரணம்.

மிலேச்சர்களின் வருகை பாரத தேசத்தின் அடிப்படையான கலாச்சாரங்களை சிதைத்து பெரும் மாற்றத்தை ஏற்படுத்தி விட்டது. அந்நியர்களின் ஆளுமையால், போதனையால் மக்களிடையே குழப்பம் ஏற்பட்டு நம்பிக்கையும், அவநம்பிக்கையும் மாறி மாறி தோன்றலாயின.

குருகுலவாசம் என்பது சிதறடிக்கப்பட்டது. ஆழ்ந்து, கற்று, தெளிந்த ஒரு குரு அதை மற்றவர்க்கு அன்போடு பகிர்ந்தளிக்கிற முறையே குருகுலவாசம். கருணையோடு சொல்லிக் கொடுக்கின்ற இடமே ஆஸ்ரமம். தனிப்பட்ட முறையில் கவனித்து அவனை உரமாக்குகின்ற விஷயமே குருவின் கருணை. இப்போது கும்பல் கும்பலாக படிப்புகள் ஏற்பட்டு சொல்லிக் கொடுப்பவருக்கும் தெரியாது. கற்றுக் கொள்பவருக்கும் ஆர்வமில்லாது வெறும் கடனுக்கு வேலைகள் நடக்க பல மனிதர்கள் வெறும் மலட்டுப் பனைகளாக போய் விட்டார்கள். மலட்டுப் பனைகள் அதிகரிக்க காய்த்து, கனி விடுகின்ற மரங்களுக்கு மவுசு அதிகரித்துவிட்டது.

கடின உழைப்பும் அதனால் ஏற்படுகின்ற வெற்றியும் ஒரு தேசத்தில் வெகு சிலரே கைக் கொள்வாராயின் அந்த தேசம் சிறந்து விளங்காது.

நூற்றுக்கு தொண்ணூறு பேர் மிகுந்த வலுவுடனும், முயற்சியுடனும், திறமையுடனும், நம்பிக்கையுடனும் இயங்கினால்தான் ஒரு தேசம் அதனுடைய உச்ச

கட்டத்தைத் தொட முடியும், வல்லரசாய் வாழ முடியும்.

இந்தியா வல்லரசாய், வளமானதாய் இல்லாததற்குக் காரணம் நம்பிக்கையற்ற, திறமையற்ற, கூர்மையற்ற, வலிவற்ற மக்கள். இந்த நிலைமைக்குக் காரணம் நல்ல குருமார்களை அவர்கள் அண்டாததும், நல்ல குருமார்கள் இன்று தோன்றாததும். தாய்மீதும், தகப்பன் மீதும் மகனுக்கு அவ நம்பிக்கை. மகன்மீது அவர்களுக்கு மிகப்பெரிய அவநம்பிக்கை. நண்பர்களிடையே சந்தேகம். கணவன் மனைவியிடையே பெரும் புகைச்சல். மற்ற உறவுகளிடையே எள்ளல், ஏளனம் என்று அலைந்து கொண்டிருக்க, வாழ்க்கையில் எப்படி நிம்மதி கிடைக்கும். ஏன் இப்படி உறவுகளும், நட்புகளும் சிதறிப் போயின.

காரணம், எப்படி உறவு வைத்துக் கொள்ள வேண்டும் என்று சொல்லித்தரவில்லை. எப்படி உறவு வைத்துக் கொள்ள ஒருவருக்கு சொல்லித் தருவது. எவர் ஒருவருக்கு தன்மீது நம்பிக்கை இருக்கிறதோ, எவர் ஒருவருக்கு தன்னால் செய்ய முடியும் என்ற ஒரு ஆர்வம் இருக்கிறதோ, எவர் ஒருவருக்கு தன் ஆற்றல் மீது தெளிவிருக்கிறதோ அவரால்தான் மற்றவரோடு எளிமையாய், இனிமையாய் தொடர்பு கொள்ள முடியும்.

தன்னம்பிக்கையற்ற இளைஞர்களும், யுவதிகளும் பெரியவர்களாகி ஒரு தாழ்ந்த சமூகமாக உருவாகி விடுகிறார்கள். அவர்களுடைய குழந்தைகள், அவர்களுடைய வளர்ப்பால் இன்னும் தாழத்தாழ போகிறார்கள். ஆகவே ஒரு பெரிய தேசம் க்ஷீணமாகிக் கொண்டே இருக்கிறது. குரு என்கிற உன்னதமான மனிதர் இல்லாததால் அழிந்து கொண்டே இருக்கிறது. காசுக்கு கூவுகின்ற உபாத்தியாயர்களைத்தாண்டி தெரிந்து கொள்வதற்குத் தக்க மனிதர்களிடம் எந்த இளைஞன் அல்லது யுவதி போய் நிற்கிறானோ, அப்போது அவன் பலம் கொண்டவனாகவும், தெளிவுமிக்கவனாகவும் மாறி விடுகிறான்.

பலமும், தெளிவும் உடனே வந்து விடுமா. அதற்கு அடிப்படை என்ன. வைராக்கியம். வைராக்கியம் என்பதற்கு என்ன அர்த்தம். விடாமுயற்சி.

ஒரு மந்திரம் சொல்லி இந்த மந்திரத்தை காலையும், மாலையும் ஆயிரத்தெட்டு முறை சொல்லி வா என்று ஒரு குரு சொன்னால், அந்த குருவை நம்பி

முழுவதுமாய் அதில் ஈடுபட்டு காலையும், மாலையும் ஆயிரத்தெட்டு முறை யர் சொல்லி வருகிறாரோ அவருக்கு தெளிவும், திடமும் ஏற்படுவது உண்மை. ஆயிரத்தெட்டு சொல்வது எளிதா.

அங்குதான் வைராக்கியம் செயல்படுகிறது. விடாமுயற்சியோடு என்ன தடங்கல் ஏற்பட்டாலும் அதை ஒதுக்கிவிட்டு ஆயிரத்தெட்டு மந்திரஜபம் செய்ய எவனொருவன் உட்கார்ந்து விடுகிறானோ அவன் வெற்றிக்கு அருகே நகர ஆரம்பித்து விடுகிறான். மந்திர ஜபம் சொல்லச் சொல்ல மனம் ஒருமைப் படுகிறது.

எப்படி இந்த வித்தை நிகழ்கிறது. எடுத்தவுடனேயே ஏற்பட்டு விடுமா. மந்திர ஜபத்திற்கு அப்படி ஒரு சக்தி உண்டா. ஆம். மந்திர ஜபத்திற்கு நல்ல சக்தி உண்டு. ஆனால் எப்படி சொல்கிறோம் என்பதைப் பொறுத்தும் இது அமைகிறது. ஆரம்பத்தில் குருவின் பேச்சுப்படி பிராணாயாமம் செய்து விநாயகரை வணங்கி குருவைப் போற்றித் துதித்து மந்திரஜபம் சொல்ல ஆரம்பிக்கிற பொழுது நூற்றுக்கணக்கான சிந்தனைகள் உள்ளே வந்து தொந்தரவு செய்யும். என்ன தொந்தரவுகள் ஏற்பட்டாலும் மறுபடி மறுபடி அந்த மந்திர ஜபத்தின் மீது மனது ஈடுபாடு கொள்ளும்படியாய் அந்த சீடன் முயற்சிக்க வேண்டும்.

உள்ளுக்குள் ஏற்படுகின்ற சிந்தனைகளை உதற வேண்டும். உதறுவதற்கு சிந்தனைகளை உற்றுப் பார்க்க வேண்டும். இந்த சிந்தனைகளை உற்றுப் பார்க்கிறபொழுது அவை பின்னடைந்து மறுபடியும் மனம் மந்திர ஜபத்திற்கு தாவுகிறது. மந்திர ஜபத்திற்கு போன மனம். ஒரேயொரு சொல்லில் திரும்பத் திரும்ப நகர்ந்து, மற்ற சிந்தனைகளை வேகமாக உதறி, உள்மனதையும் சுத்தம் செய்து, மெல்ல ஒரு ஏகாக்கிரகத்தை அடைகிறது. ஒருமையில், ஒரு புள்ளியில், ஒரு விஷயத்தையே கூர்மையாக கவனிக்கின்ற திறனை அந்த சீடன் பெற்ற போது அவன் உடம்பும், மனதும், கண்களும், முகமும் மாறுகின்றன.

அடுத்தபடியாய் எழுதுகிற வேலையோ, விறகு வெட்டுகிற வேலையோ, பேசுகிற வேலையோ, கேட்கிற வேலையோ அவனுக்கு கொடுக்கப்படும் பொழுது, மந்திரஜபம் செய்யும்போது எத்தகைய ஒரு ஒருமை நிலையில் இருந்தானோ அந்த ஒருமை நிலை வெகு எளிதிலே மற்ற வேலை செய்யும்போதும்

அடைந்து, அந்த வேலையை பூரணமாக கிரகித்துக் கொள்கிறான்.

நமது வேலைகள் பலதும் சரியாக இல்லாததற்குக் காரணம் ஒருமையோடு அவைகளைச் செய்யாதது தான், ஒருமையோடு ஒரு வேலையை செய்வது எப்படி என்பது அந்த சாதகனுக்கு தெரிந்து விடுகிறது. ஏனெனில் மந்திரஜபத்தை ஒருமையோடு செய்து செய்து பழக்கப்பட்ட மனமல்லவா. கேட்கிறபொழுது முழுமையாய் கேட்கிறது. பேசுகிறபொழுது முழுமையாய் செய்கிறது. விறகு வெட்டுகிறபொழுது விறகு வெட்டுதலே வேலையாக இருக்கிறது. எழுதுகிற பொழுது எழுத்தாகவே மனம் மாறி விடுகிறது. அப்படி மாறுமெனில் அந்த வேலை உன்னதமாக இருக்கும். வேலையை உன்னதமாக செய்பவன்தான் வெற்றி பெற்றவன் ஆகிறான். வெற்றி பெற்றவனுக்கு வாழ்க்கை விதம்விதமான சௌகரியங்களை பரிசாக கொடுக்கிறது. அந்த சௌகரியங்களையும், சுகங்களையும் அவன் மன ஒருமைப்பாட்டுடன் அணுக அந்த சுகங்களை முழுமையாய் அனுபவிக்கத் துவங்கி விடுகிறது.

சுகங்களை சிதறாமல் முழுமையாக அனுபவிக்கிற பொழுது அவன் அனுபவ சந்துஷ்டி அவனை மேலும் வலுவுள்ளவனாக மாற்றுகிறது. இன்னும் வலுவும், புகழும் அதிகரிக்கிறபொழுது இன்னும் மனம் கூர்மையடைந்து, செய்தொழிலில் ஆர்வம் அதிகமாகி, மன ஒருமை பலப்பட்டு கெட்டியாகி, வேலையின் கூர்மை அதிகமாகி செம்மையாகிறது. அந்தச் செம்மை மேலும் பரிசுகள் கொண்டு வந்து கொடுக்கின்றன. இதுதான் வெற்றியின் ரகசியம். இந்த வெற்றியின் ரகசியம் ஒருமைப்படுவதில் இருக்கிறது. மனதை ஒருமைப் படுத்துகின்ற பயிற்சி முனிவர்களாலும், ரிஷிகளாலும் மிகத் தெளிவாகச் சொல்லிக் கொடுக்கப் பட்டிருக்கிறது.

எப்பொழுது முனிவர்களை, ரிஷிகளை அவர்களைப் போற்றி, பாதுகாத்து வரும் குருமார்களை நாம் உதறுகிறோமோ நமது வாழ்க்கையும் உதறத் துவங்கி விடுகிறது. நடுங்க ஆரம்பித்து விடுகிறது. நடுங்குகின்ற மனிதனால் எந்த விஷயமும் நன்றாகச் செய்ய முடியாது. நன்றாகச் செய்ய முடியாததால் ஏச்சும், பேச்சும், ஏளனமும் ஏற்படும். அவை மேலும் அவனுக்கு நடுக்கத்தையே கொடுக்கும். வாழ்க்கை

மொத்தமும் அபத்தமாகப் போகும்.

வேத காலத்தில் சகலரும் மந்திர ஜபங்கள் செய்தார்கள். எல்லா வர்ணத்தவரும் செய்தார்கள். இது ஒரு குறிப்பிட்ட வர்ணத்தாருக்கு மட்டும் அல்லவே அல்ல.

தகுந்த மந்திரங்கள் மிக அழகாக கொடுக்கப்பட்டு, அவரவர்க்குத் தகுந்த வழிபாடுகள் தெளிவாக நியமிக்கப்பட்டு, அதன் மூலம் அவர்கள் சிறப்படைய ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. நம்முள் ஜாதிப்பிரிவு உண்டு. ஆனால் துவேஷம் இருந்ததில்லை. வேலையின் நிமித்தம் நாம் ஒருவரோடு ஒருவர் கலக்காமல் இருந்தோம். ஆனால் யாரையும் தாழ்ந்து பேசி காயப்படுத்தியதில்லை.

மிலேச்சர் வருகை நாம் நான்கு வர்ணமாய் பிரிந்திருப்பதை பிளவுபடுத்தியது. நாம் தனித்தனியே அமர்ந்திருப்பதை தவறு என்று சொல்லி சிதற அடித்தது. நாம் சிதறிப்போக அவர்கள் ஆட்சி செய்ய இங்கு வசதி ஏற்பட்டது.

அந்நியர்கள் ஒழிந்து போயும் நாம் ஒன்றாக வில்லை. அந்நியர்கள் இருந்ததைவிட இன்னும் அசிங்கமாய் பிளந்து போய்க் கிடக்கிறோம். பிளவு பட்டபோது ஆற்றுப்படுத்த, வழி நடத்த மற்றவர்க்கு ஆர்வமில்லாமல் போகிறது. ஒருவருக்கு ஒருவர் தொடர்பு குறைகிறது. அப்படித் தொடர்பு குறைகிற பொழுது எக்கேடோ கெட்டு ஒழி என்கிற ஒரு சொல்லும், அப்படி கெட்டு ஒழிந்தால் ஒரு ஆனந்தமும் ஏற்பட்டு விடுகின்றன. ஒருவர் வீழ்ச்சியை ஒருவர் கண்டு மகிழ்ந்து ஆடுகிறோம். அவர் வீழ்ச்சி நம்மையும் தாக்கும் என்பதை மறந்து போகிறோம்.

இப்படி ஒரு தேசம் வீழாமல் இருக்க என்ன செய்ய வேண்டும். மறுபடியும் நல்ல் குருமார்களைப் பார்த்து வணங்கி வாழும் வழிமுறைகளை கேட்டுக் கொள்ள வேண்டும். மந்திர ஜபத்தைக் கைக் கொள்ள வேண்டும்.

சாக்த வழிபாடு மந்திர ஜபத்தை அடிப்படையாகக் கொண்டது. ஏதோ உலக வெற்றிகளை கொடுப்பதற்காக சாக்த வழிபாடு இருக்கிறதா. ஒருநாளும் இல்லை. உலக விஷயங்களில் எவனுக்கு ஈடுபாடு அதிகமாகி வெற்றி ஏற்படுகிறதோ, அந்த வெற்றிக்குப் பிறகு அந்த விஷயத்தின் மீது ஈடுபாடு குறைந்து போகிறது. அடடே இது இவ்வளவுதானா.

இதற்கு மேல் இதில் ஒன்றும் இல்லையா. இதைத் தேடியா அலைந்தோம் என்கிற தெளிவு ஏற்பட்டு விடுகிறது. அப்படி ஒரு தெளிவு ஏற்பட்ட பிறகு அவன் அதிலிருந்து நகர்ந்து வேறு விஷயத்திற்குப் போகிறான்.

இப்படி ஒவ்வொரு விஷயமாக நகர்ந்து, நகர்ந்து போக, முடிவில்லாத சந்தோஷம், அசைவில்லாத சந்தோஷம், முழுமையான சந்தோஷம் இறை என்கிற விஷயத்தில் இருப்பதை அவன் உணர்ந்து கொள்கிறான். ஆக, இந்த மந்திர சப்தங்கள் இறை என்கிற விஷயத்தை கொடுப்பதற்கும் உதவுகின்றன. இறையினுடைய அண்மையைக் கொண்டு வந்து சேர்க்கின்றன. இறையினுடைய அண்மையை சேர்க்கும் பொழுது சிறிய விஷயங்களில் ஜெயித்துக் கொண்டிருந்த அந்த மனிதன் அவைகளை உதறி முழுமையாகிறான். அமைதியாகிறான்.

அமைதியான மனிதனால் ஆயிரக்கணக்கான மனிதர்கள் அமைதிபெறுகிறார்கள்.

சாக்த வழி உபதேசிக்கும் மந்திரங்கள் இப்படிப் பட்ட உயர்ந்த நிலைக்குக் கொண்டு போக உதவி செய்பவை.

வெகுநிச்சயமாய் இந்த மந்திரங்களால் நாம் இறை அனுபவத்தை, இறை விஷயத்தை, இறை தரிசனத்தை பெற்றுவிட முடியுமா. நிச்சயம் முடியும். இந்த மந்திர ஜபங்களை செய்வதற்கு வாழ்க்கையில் ஓர் ஒழுங்கு முறைகள் வேண்டும்.

உணவு ஒழுங்குமுறை, உறங்கும் ஒழுங்கு முறை, உடுத்தும் ஒழுங்கு முறை, பேச்சு ஒழுங்கு முறை என்று பல்வேறு ஒழுக்க முறைகள் இருக்கின்றன.

உங்கள் வீட்டை சுத்தப்படுத்தி, ஒட்டடை அடித்து, நாற்காலிகள், மேஜைகளை அங்கங்கே போட்டு, ஜன்னல் கதவுகளை, வாசற்கதவை திறந்து வைத்துக் காத்திருங்கள். ஒரு ஒழுங்கு முறையில் உங்கள் வீட்டை வைத்திருங்கள். விளக்கு ஏற்றி சுத்தமாய் வைத்துக் காத்திருங்கள். தென்றல் நிச்சயம் வரும்.

நீங்கள் வீட்டை குப்பையாக வைத்திருந்தால், நாற்றமாக வைத்திருந்தால், இருட்டாக வைத்திருந்தால் தென்றல் வந்தும் பயனில்லை.

ஒழுக்கம், வைராக்கியம், குருபக்தி, இறை நம்பிக்கை இதுவே சாக்தம் என்கிற சக்தி வழிபாடு.

# மூர்க்க நாயனார்

சுழன்று அடித்துக் கொண்டு போகும் நீர் ஓடுகின்ற பாலாறு.

ஏன் அதற்குப் பாலாறு என்று பெயர் வந்தது.

பாலாறு அடி முழுவதும் வெள்ளை வெளேரென்று மணல். பாய்ந்து வரும் நதியின் உப்புச் சத்துக்களை யெல்லாம் ஓடும் வேகத்தில் மணலுக்கு அடியில் போய் சிக்கிவிட நீர் தெளிந்திருக்கும். தெளிந்த நீர் சுவையாக இருக்கும். பால் போல சுவையுள்ள நீர் என்பதால் அதற்கு பாலாறு என்று பெயர் வைத்தார்கள். அடியில் தங்கிய சக்கைகளை மீன்கள் தின்று கொழுத்து வளர்ந்ததால் ஏகமான மீன்கள் இருக்கும். அந்த மீன்களாலும் நதி சுத்தமாக்கப்பட்டுவிடும். அதனாலும் நதி நீரின் சுவை அதிகரித்திருக்கும். அப்படிப்பட்ட சுவையுள்ள அந்த நதிக்கு அருகே திருவேற்காடு என்று ஒரு ஸ்தலம்.

திருவேற்காடு சுற்றிலும் நல்ல பசும் வயல்கள். அடர்ந்த தோப்புகள். காய்கறித் தோட்டங்கள். அழகான பூக்கள் பூக்கும் நந்தவனங்கள் என்று பசுமை மிகுந்திருந்தது.

அங்கு வாழும் வேளாளர்கள் வருடம் முழுவதும் உழைத்துக் கொண்டிருந்தார்கள். அதற்கு அவர்களுக்கு வசதி இருந்தது. நீர் வளம் இருந்தது. அது பாலைவன தேசமாக இல்லாமல் எப்பொழுதும் பூக்கள் பூக்கும் தேசமாக செந்தமிழ்நாடு இருந்த காரணத்தால் வேளாளர்களுக்கு விற்பதற்கும், விதைப்பதற்கும் ஏதேனும் விஷயம் இருந்து கொண்டே இருந்தது. அந்த வேளாளர்கள் சிறிய நிலச்சுவான்தார்களாக, செழுமை மிக்கவர்களாக வளமோடு வாழ்ந்து வந்தார்கள். உலகத்தின் எல்லா சுகங்களையும் போட்டி போட்டுக்கொண்டு அனுபவித்தார்கள். அப்படிப்பட்ட வேளாளர் குடியில் திருவேற்காட்டில் அவதரித்தவர் மூர்க்க நாயனார்.

மூர்க்க நாயனார் என்பது தாய், தந்தையர் வைத்த பெயரா.

இல்லை. காரணப்பெயர். கோபம் கொண்டு சண்டையிடுவதால் ஏற்பட்ட பெயர். அடேயப்பா.. அவனா.. அந்த வேளாளனா. படுகோபக்காரனாயிற்றே

என்று மக்கள் சொல்லிச் சொல்லி அவர் மூர்க்கத்தனத்தைக் குறிக்கின்ற காரணப்பெயர்.

எதற்குக் கோபம். எதனால் கோபம்.

மூர்க்க நாயனார் நல்ல செல்வந்தர். ஆனால், அந்த ஊரில் இருக்கும் சிவன் கோவிலுக்கும், சிவனடியார்களுக்கும் வாரி வாரி வழங்கி, வறுமை வந்து அவரிடம் சேர்ந்தது. வரவுக்கு மேல் செலவு இருந்தது. சிவன் கொடுத்த சொத்து சிவனுக்கு செலவழித்தால் என்ன குறைந்துவிடப் போகிறது என்ற எண்ணத்தில் அவர் எல்லோருக்கும் வாரி வழங்கினார்.

சிவனடியார்களுக்கு சோறு வைக்க வேண்டுமே. நிலம் அடமானம் வைத்தாகி விட்டதே. பயிர் விளைந்து காசாக நாளாகுமே. நாளை மறுநாள், அதற்கு அடுத்த நாள் சிவனடியார்கள் வரும்போது சோறு இல்லையென்று கை விரிக்க வேண்டியிருக்குமே. அது நமக்கு நல்லதா. இந்த ஊருக்கு நல்லதா.

அவர் பதைத்துப் போனார். ஏதேனும் ஒரு வழியில் பொருளீட்ட வேண்டுமென்று விரும்பினார். என்ன தெரியும். வேளாண்மை தவிர வேறு எந்தத் தொழில் தெரியும் என்று யோசித்தார்.

அவருக்குச் சூதாடத் தெரியும். வேலையை முடித்து மாலை நேரம் ஊர் மண்டபத்தில் உட்கார்ந்து சூதாடுவது அவருக்கு வழக்கம். பாய்ச்சிகையை உருட்டி தாயம் என்று சொன்னால் தாயம் வந்து நிற்கும். பன்னிரெண்டு என்று கூவினால் பன்னிரெண்டு பிரண்டு வரும். வெட்டுக்கு வெட்டு, மறாட்டத்திற்கு வெட்டு என்று அவர் போய்க்கொண்டே இருப்பார். எதிரியை வெகு எளிதாக துவம்சம் செய்வார். எடு காசை என்று கத்துவார். எவரேனும் காசு எடுக்காமல் போனால் அல்லது ஆட்டத்தில் பொய்யாக ஆடினாலோ கூட ஒரு கட்டம் நகர்த்தினாலோ, குறைவாக ஒரு கட்டம் நிற்க வைத்தாலோ கோபமாகி விடுவார். இடுப்புக் கத்தியை எடுத்து சரக்கென்று இழுத்து விடுவார். ரத்தம் கொப்பளிக்க எதிராளி அலறுவான்.

ஆட்டத்திலா ஏமாற்றுகிறாய். என்னையா ஏமாற்றுகிறாய் என்று அவர் பெருங்குரலெடுத்து சீறுவார். சூதில் ஏமாற்றுபவன் தன்னை ஏமாற்றவில்லை. சிவனை ஏமாற்றுகிறான். அவருக்காக நான் செய்யும் தொண்டை ஏமாற்றுகிறான் என்று கோபப் படுவார்.

அடேயப்பா.. இன்று இரண்டு செல்வந்தர்கள்

கிடைத்தார்கள். இரண்டு [illegible]
வலியப்பேசி சூதாடுவோம் என்று உற்சாகமூட்டி அவர்கள் சூதாடத் துவங்கியதும் முதல் ஆட்டத்தில் அவர்களுக்கு விட்டுக் கொடுத்து, அடுத்த ஆட்டத்தில் மெல்ல மெல்ல தன் சுயரூபத்தைக் காட்டி, சொல்லிச் சொல்லி பாய்ச்சிகைகளைப் போட்டு, அவர்களுடைய துண்டு வேட்டியை முழுவதும் உருவிக் கொண்டு, அவர்கள் வைத்த காசுக்கு, இவர் ஜெயித்த காசுக்கு பொருள் வாங்கி சிவனடியார்களுக்குக் கொடுப்பார்.

சூதாடும் நேரம்தான் அவர் மூர்க்கர். மற்ற நேரத்தில் குழைந்த சோறுபோல பதமானவர். சிவன் வசமானவர்.

சூதாடுகிறீரே இது தவறில்லையே.

இல்லை. நான் எனக்கென்று ஒரு செப்புக்காசும் வைத்துக் கொள்வதில்லை. எல்லாம் என் சிவனுக்கு. வேறு என்ன வேண்டுமானாலும் இந்த உலகத்தில் நிற்கலாம். சிவனுக்கு செய்யும் என் தொண்டு நிற்கக் கூடாது. சிவனடியார்கள் இந்த ஊருக்கு வந்து வாடக் கூடாது. எனவே, நான் சிவத்தொண்டாகத்தான் சூதாடுகிறேனே தவிர, சூதாடி என்னை சந்தோஷப் படுத்திக் கொள்வதில்லை. சூதாடிய காசை நான் எனக்காக செலவு செய்வதில்லை என்று சொன்னார்.

எல்லோரும் சூதாடப் பயந்தார்கள். வலிய வரவழைத்து சூதாடுவார். சூதாடுகிறபொழுது தோற்கிறோமே, தோற்கப் போகிறோமே என்ற பதட்டத்தில் அவர்கள் தவறு செய்ய, சுட்டிக் காண்பிப்பார். ஏற்க மறுக்கும்போது அடி உதை சரளமாக விழும். பெரும் ரகளை ஏற்படும். இவனிடம் சூதாடி ஜெயிப்பதைவிட அடித்துப் பிடுங்குவது நல்லது என்று கத்தியைக் காட்ட, அவன் இத்தோடு சூதாட்டத்தை விட்டேன் என்று மடியில் இருக்கின்ற காசை அவர் முன்னே எறிந்துவிட்டுப் போவான்.

அவருக்கு வெட்கமேயில்லை. எந்த நாணமும் இன்றி காசுகளை பொறுக்கி மறுபடியும் உணவுப் பண்டங்கள் வாங்கி, சோறு சமைத்து, சிவனடியாருக்காக காத்திருப்பார். காசு கரைந்ததும் மறுபடியும் சூதாடப்போவார். உள்ளூர் மக்கள் சூதாட இல்லாதபோது வெளியூருக்கு பயணப்பட்டார். சூதாட வருகிறீர்களா என்று சவால் விடுவார். ஆடி அதிகம் ஜெயிப்பார். ஜெயித்த காசை கொண்டு வந்து திருவேற்காட்டிலுள்ள சிவன் கோயிலுக்கு உற்சவங்கள் நடத்துவார். உற்சவங்கள் நடக்கும்போது

உணவிடுவார். கடைசி வரையிலும் சூதாடியும், சூதில் சண்டையிட்டும், சண்டையிட்டு வம்பு வளர்த்தும், வம்பில் காசு சம்பாதித்தும் அந்தப் பொருளைக் கொண்டுவந்து அன்னதானம் செய்தும் சிவத்தொண்டனாகவே இருந்து வந்தார்.

போகும் வழி தவறாக இருந்தால் என்ன. போகும் இடம் கோயில் என்ற கொள்கையால் அவரை மூர்க்க நாயனார் என்று மக்கள் அழைத்தார்கள். தன் இறுதி மூச்சுவரை சிவத்தொண்டாற்றி விட்டு, சிவனின் அடியில் அவர் ஜோதியாய் கலந்தது பார்த்து மக்கள் அவரை வணங்கிக் கும்பிட்டார்கள். திருவேற்காடு செய்த புண்ணியம் என்ன என்று கொண்டாடினார்கள்.

மூர்க்க நாயனார் கதை என்ன சொல்கிறது.

மூர்க்கத்தில் தெளிவிருப்பின் அது திருட்டாக இருப்பினும் பரவாயில்லை. நல்ல நோக்கத்திற்காக அடிதடி ரகளையும், வம்பு வழக்கும் நிச்சயம் ஏற்கலாம் என்று தெளிவாகச் சொல்கிறது.

இது நேற்று முளைத்த காளான் அல்ல. அது சனாதன தர்மம். பல்லாயிரக்கணக்கான வருடங்களாக பண்பட்டு பண்பட்டு நல்ல சான்றோர்களை ஈன்றெடுத்து, அந்த சான்றோர்களின் வழிகாட்டலில் தெளிந்த மதம்.

மூர்க்க நாயனார் திருவடிக்கே சரணம்.

## எனது ஆன்மீக அனுபவங்கள்

எது என் ஆன்மீக அனுபவங்கள். என்னுடைய பிரமைகளா, கனவுகளாக எனக்கு ஏற்படும் என் ஆசைகளா, அடுத்தவர் சொன்ன விஷயங்களை என் மூளையில் ஏற்றிக் கொண்டு அவைகளை என் ஆன்மீக அனுபவங்களாக கற்பிதம் செய்வதும் நடக்கிறதோ என்ற பயம் ஏற்பட்டது.

ஆன்மீகம் என்கிற விஷயம் மிக மிக மிகக் கடினமானது. எளிதில் புரியாதது. ஏனெனில் நம் மனம் நம்மை விதம்விதமாக ஏமாற்றுகிறது. நம்மை இந்த பூமியிலேயே உலவச் செய்வதற்கு மனம் எப்பொழுதும் தயாராக இருக்கிறது. எங்கேனும் தனிமையில் அமர்ந்து தன்னை உற்றுப் பார்த்து எது மனது, எது உடம்பு என்று அறியத் துவங்க, மனம் தன்னுடைய ஆட்டங்களை விட்டுவிட்டு அமைதியாகி, பிறகு மெல்ல மெல்ல

பார்க்கப் பார்க்க சுருங்கத் துவங்கும்.

நம் மனம் இதற்கு நம்மை அனுமதிப்பதே இல்லை. இதை தடைசெய்வதற்காக் இந்த மனம் ஆயிரம் ஆட்டங்கள் போடுகின்றது.

ஆன்மீக அனுபவம்தானே உனக்கில்லாத ஆன்மீக அனுபவமா. இதோ பார் என்று கனவுகளாகவும், நனவுகளில் கனவுகளாகவும், கனவில் நனவாகவும் ஏற்படுத்தி விடுகிறது.

அதென்ன நனவில் கனவு.

நீங்கள் ஒரு காரில் போய்க் கொண்டே அல்லது டிரெயினில் போய்க் கொண்டே விதம்விதமாக கற்பனை செய்து கொள்கிறீர்களே, விதம்விதமாக உங்கள் எதிர்காலம் பற்றி யோசிக்கிறீர்களே. அது நனவிற் கனவு.

அதென்ன கனவில் நனவு.

தூங்கிக் கொண்டிருப்பீர்கள். எழுந்து விடுவீர்கள். எழுந்து விட்டு மறுபடியும் தூங்குவீர்கள். தூங்கும்போது இப்படியொரு கனவு வருமா என்று யோசிப்பீர்கள். அந்தக் கனவு மறுபடியும் நனவு போல் வரும். மனம் இந்த மாதிரி சித்து விளையாட்டுகளில் மிகவும் கெட்டிக்காரத்தனமாக இயங்கும். உங்களை பூமியோடு கட்டிப் போட்டுவிட, விவகாரங்களோடு இணைத்துக் கொள்ள, உங்களுடைய நட்புகளோடு பின்னி வைத்துக் கொள்ள, மனம் இந்த விதமான ஆட்டங் களை இடையறாது போட்டுக் கொண்டிருக்கும். இல்லற வாழ்க்கையில் உங்களை திரும்பத் திரும்ப தள்ளுவது வேறு எவருமில்லை. உங்கள் மனம்தான். உங்கள் மனம்தான் உங்களுடைய கர்மா. உங்கள் செயலால் ஏற்படுகின்ற விளைவு அந்த மனம்.

அழகான பெண்ணுக்கு ஆசைப்படுவதாக வைத்துக் கொள்ளுங்கள். உடனே அவளை மனதில் கற்பனை செய்து கொள்ளும். அவளை மனைவியாக்கும். கட்டிலில் படுக்கப் போடும். இன்பம் துய்க்க எல்லா முயற்சியையும் செய்யும். அவளே வந்து உங்கள் காலடியில் விழுந்தாற்போல உங்கள் மனம் சுவைத்து சுவைத்து உங்களுக்கு ஊட்டிக் கொண்டிருக்கும். நீங்களும் மெய் மறந்து அந்த போதையில் ஈடுபடுவீர்கள். நீங்கள் மிகப்பெரிய வெற்றி வீரனாக, மிகப் பெரிய சக்ரவர்த்தியாக பார் போற்றும் அரசனாக வாழவேண்டுமென்று ஆசைப்படுவீர்கள். அது மனதளவில் வெகுவேகமாக நடை பெறும். நிற்பதும், நடப்பதும், உங்களுக்குள் நீங்கள் பேசுவதும் ஒரு

பேரரசனைப் போல இருக்கும்.

இதில் என்ன தவறு.

எந்தத் தவறும் இல்லை. ஆசைகள் ஒரு விதத்தில் தீர்ந்து விடுகின்றன. நேரில் அரசனாவதற்கு சங்கடங்கள் எதுவும் படாமல் உங்கள் அபிலாஷைகள் உங்கள் உள்ளுக்குள்ளேயே தீர்ந்து விடுகின்றன.

ஆனால், இதில் பாதகம் ஏதும் ஏற்படாதா.

உண்டு. இதை அதிகப்படுத்துகிற பொழுது நிஜவாழ்க்கையும் மறந்து போகிறது. நிஜத்தின் வெம்மை மறந்து போகிறது. நீங்கள் என்ன லட்சணத்தில் இருக்கிறீர்கள் என்று உங்களுக்குத் தெரியாமல் போகிறது. கனவு காணுங்கள்.. கனவு காணுங்கள் என்று நம்முடைய ஜனாதிபதி முதற் கொண்டு பலபேர் உங்களுக்கு திரும்பத் திரும்ப சொல்கிறார்களே இது எளிதான விஷயமல்ல. அதிகம் கனவு கண்டால் உங்களுக்கு விலாசமில்லாமல் போய்விடும். இடையறாது கனவில் மூழ்கியிருப்பீர்கள். என்ன செய்ய வேண்டுமென்று மறந்து போய் விடுவீர்கள். ஆகவே, மிகக் குறைவாக கனவு காணுவது நல்லது.

போதை அதிகமானால் எழுந்திருக்க முடியாது. சிறிதளவு மது உற்சாகம் தரும் என்பதுபோல, கனவும் மிகச் சிறிதளவே இருக்க வேண்டும். இது நிகழ் வாழ்க்கையின் வெப்பத்தை சற்று குறைத்து ஆறுதலாக்கி இளைப்பாற வைக்கும். பிறகு மறுபடியும் ஓடத் துவங்கலாம். எந்தக் கற்பனையை கண்டோமோ, எந்தக் கனவு கண்டோமோ அதை நோக்கி நடை பெயரலாம்.

இளைஞர்கள் கனவு காண எவை துணை செய்கின்றன.

கவிதை, கதை, சங்கீதம், கூத்து, சிலம்பம், சிற்பம் போன்ற கலைகள் நம்முடைய கனவுகளுக்கு உரம் போடுகின்றன. நம் மனதை கிறங்க அடிக்கின்றன. போதை மிகுந்த கனவுகளை அள்ளி அள்ளிக் கொடுப்பதாலேயே அப்படி கொடுக்கின்ற இந்தக் கலைகளுக்கு மனிதர்களுக்கு நடுவே மிகப்பெரிய மரியாதை இருக்கிறது. அப்படி கொடுக்கின்ற கலைஞர்களுக்கு மிகப்பெரிய அந்தஸ்து ஏற்பட்டு விடுகிறது.

இவர் சாதாரணமானவர் இல்லை. பெரிய கவிஞர். இவர் எளிதானவர் இல்லை. மிகப்பெரிய எழுத்தாளர்.

இவரை யாரென்று நினைத்தீர்கள். இவர் மிகப்பெரிய சினிமா நடிகர் என்று ஒரு தனித்த அந்தஸ்து கனவுகள் விற்பவருக்கு நாம் கொடுத்து விடுகிறோம். எவர் நன்றாக கனவுகள் விற்கிறாரோ அவர்களை அதிகம் பாராட்டுகிறோம். காதலுக்கென்று விற்கின்ற கனவுகள் நமக்கு இதமாக இருந்தால் அந்தக் கனவுகளை வாங்கிக் கொண்டு அவர்கள் பக்கம் நாம் போய் சார்ந்து விடுகிறோம்.

சினிமா நடிகரை ஒரு இளைஞன் என்னுடைய தலைவர் என்று சொன்னால், அந்த இளைஞனுடைய கனவுக்கும் அந்த சினிமா நடிகர் விற்கின்ற கனவுக்கும் மிக நெருங்கிய சம்மந்தம் இருக்கின்றது என்று பொருள்.

ஒரு கவிஞரை ஒரு வாலிபன் நேசிக்கிறான் என்றால், அந்த வாலிபனுடைய கிறக்கத்திற்கும், அந்த கவிஞர் எழுதிய கிறக்கத்திற்கும் மிக நெருங்கிய தொடர்பு இருக்கிறது என்று பொருள்.

ஒரு எழுத்தாளனை ஒரு ஊர் மக்கள் நேசிக்கிறார்கள் என்றால் அந்த ஊர் மக்கள் அனைவரும் மிக முக்கியமாக நினைத்துக் கொண்டிருக்கின்ற கனவுக்கும், அந்த எழுத்தாளர் சமைக்கின்ற கனவுக்கும் நெருக்கமான தொடர்பு இருக்கிறது என்று அர்த்தம்.

இன்னும் சற்று விலகிப் பார்ப்போமா.

எல்லா கலைகளும் கனவுகள் விற்பவைதான். அவைகள் மிகச் சிறந்தவைகளாக எப்படி மாறுகின்றன. அந்தக் கனவுகளை அளவு பார்த்து, ருசி சேர்த்து, மிகச் சுகமாக யார் விற்கிறாரோ அவருக்கு சிறந்த கலைஞன் என்று பெயர். அதாவது வேறு வகையில் சொன்னால் எவர் மிக அழகாக ஒரு கனவை நெய்து கொண்டு வந்து போடுகிறாரோ அவருக்கு மிகப்பெரிய மரியாதை ஊர் சபையில் கிடைக்கிறது.

யாருக்கு மிக நன்றாக நெய்ய முடியும்.

எவர் தந்திரம் மிக்கவரோ அவருக்கு மிக நன்றாக நெய்ய முடியும். எல்லாக் கலைகளும் தந்திரம் மிக்கவை. இசையாகட்டும், கவிதையாகட்டும், கதையாகட்டும், சினிமாவாகட்டும், ஓவியமாகட்டும், சிற்பமாகட்டும் மிகத் தந்திரமாக என்ன செய்தால் மக்கள் மயங்குகிறார்கள் என்று புரிந்து கொண்டு, அந்தப் புரிதலுக்கேற்ப கலைஞன் செயல்படுகிறான். தன் கைவசப்பட்ட அந்தக் கலையால் மக்களை அடித்து வீழ்த்துகிறான். இதுதான் மன்மத பாணம் என்பது.

உங்களை கனவுக்குள் தள்ளுவது.

எல்லாக் கலைஞர்களுமே மன்மதர்கள். மலர் அம்பு வைத்திருப்பவர்கள். ஒவ்வொரு கலைஞரும் தன்னுடைய புத்தி என்கிற ரதியோடு கூடிக்களித்து, அந்தக் கூடிக்களித்ததிலேயே சந்தோஷத்தால் மலர் அம்புகளை மக்கள் மீது இடையறாது எய்து கொண்டிருப்பவர்கள். இதுதான் ரதி மன்மதன் என்கிற ரகசியம்.

அத்தனை கலைகளும் தந்திரம் மிக்கவை. அதாவது இந்தக் கலைகள் எங்கு முடிகின்றனவோ அங்குதான் ஆன்மீகம் ஆரம்பிக்கிறது.

இப்பொழுது உங்களுக்குப் புரிகிறதா.

நான் எழுத்தாளன். நான் எழுதுகிற வரையில் ஆன்மீகவாதியாக மாறவே முடியாது. ஆன்மீகம் பற்றி எழுதுகிறேன் என்று நான் சொல்லுகிற பொழுதே உள்ளுக்குள்ளே ஒரு தந்திரம் வந்து விடுகிறது. எதைச் சொன்னால் நீங்கள் மயங்குவீர்கள் என்ற கனவு இருக்கிறது.

அதேபோல கூத்தாடுபவரும், அதே போலத்தான் பாடுபவரும், இதே போலத்தான் பிரசங்கியும் தந்திரம் மிக்கவனாக எதைச் சொன்னால் மக்கள் மத்தியில் சலசலப்பு ஏற்படும். கண்ணீர் உகுப்பார்கள். ஆஹா.. என்று சொல்வார்கள் என்று பேச ஆரம்பிக்கிறான். பிரசங்கியும் ஒரு கலைஞனே. பிரசங்கியும் ஒரு தந்திரம் மிக்கவனே.

எனவே, பேச்சு நிற்கும் பொழுதுதான் ஆன்மீகம் ஆரம்பிக்கிறது.

அப்பொழுது பேசுபவர்களும், கலைஞர்களும் யார்.

அவர்கள் ஆன்மீகவாதிகளல்ல. ஆன்மீகத்தை எவரேனும் அனுபவிக்க, அதை உற்றுப் பார்த்து விட்டு யாரேனும் இரண்டு மூன்று வார்த்தைகள் சொல்லி வைக்க அவைகளை ஒட்டுக் கேட்டு விட்டு, அதை விளம்பரமாக தனக்கு எல்லாம் தெரிந்ததுபோல் தானே அனுபவித்தது போல் சொல்கிறவர்கள்தான் கலைஞர்கள். இதில் மிகப்பெரிய பொய் ஒன்று அடங்கியிருக்கிறது. அதனாலேயே கலைஞர்கள் ஆன்மீகவாதிகளாய் மாறுவதேயில்லை. ஆன்மீக வாதிகள் கலைப்பக்கம் தலை வைத்துக்கூட படுப்பதில்லை.

பகவான் ஸ்ரீ ரமண மகரிஷி ஆசிரமத்தில் அவர் இருந்த போது, ஒரு பெண்மணி அரிசி மாவினால் ஒரு

மயில் கோலம் போட்டாள். மயில் தத்ருபமாக வந்தது. எல்லோரும் பாராட்டினார்கள்.

ஒரு வெள்ளை மயில் வந்து அந்த கோலத்தைப் பார்த்துவிட்டு தன் அலகால் கொத்தியது. அதாவது மயில் அந்தக் கோலத்தைப் பார்த்து இன்னொரு மயில் என்று ஏமாந்து விட்டது. சுற்றியுள்ளோர் கோலம் போட்டவரைப் பாராட்டினார்கள். அப்போது ரமணர் சொன்னார். மூலாதார சக்தி விழித்துக் கொண்ட பிறகு இந்தக் கலைஞர்கள் மிக நன்றாக தங்களுடைய வெளியீட்டை காவியமாகச் செய்து விடுகிறார்கள். இதில் என்ன குறை என்றால் அத்தோடு அவர்களுடைய முயற்சி முடிந்து போகிறது. இனி யார் பாராட்டுவார்கள். எப்பொழுது பாராட்டுவார்கள. அடுத்த பாராட்டுக்கு என்ன செய்யலாம் என்று புத்தி மாறிவிடுகிறது. ஆன்மீக விஷயங்களில் அவர்கள் தங்கள் மனதை செலுத்துவதை மறந்து விட்டு, மறுபடியும் இன்னொரு கலைப் படைப்புக்கு போய் விடுகிறார்கள். இது கலைஞர்களிடம் உள்ள குறை என்றார்.

மகரிஷிகள் கவிதைகளில் ஈடுபடுவதேயில்லையா. காவியம் செய்வதே இல்லையா. கலைகளில் தங்களை கரைத்துக் கொள்வதில்லையா என்ற கேள்வி வரலாம். உங்களுக்கு உதாரணமாக பல பெயர்களும் கிடைக்கலாம்.

சித்தர் பாட்லகள் எல்லாம் ஒரு பரிமாற்றம். தனக்குத் தெரிந்ததை சூட்சமமாக ஒரு கவிதை வடிவில் எழுதி அவைகளை தூக்கிப் போட்டுவிட்டு அவர்கள் போய் விடுவார்கள். சங்கீதமெல்லாம் இருக்காது. வெறும் விஷய கனம் மட்டுமே இருக்கும்.

ஆடு பாம்பே.. ஆடு பாம்பே.. என்று ஒரே விதமான தொனியில் ஏகப்பட்ட விஷயங்களை அவர்கள் சொல்லி விடுவார்கள். ராகம், தாளம், பல்லவி என்று அதனுடைய சிருங்காரமான இடத்திற்கு அந்தப் பாடல் போகவே போகாது. ஆலாபனை கிடையாது. அதை கலைநயமாக்க அவர்கள் முயற்சிப்பதேயில்லை. கவிதை வடிவம் அவர்கள் தலையில் ஏறிக் கொள்ளாது. அவர்கள் காலடியில் சுருண்டு கிடக்கும். அவர்களுக்கு வாகனமாக செயல்படும்.

பகவான் ஸ்ரீ ரமணருடைய பாடல்களும் அவ்விதமே. ஒரே விதமான சுருதியில் ராகம், தாளம், பல்லவி என்று அழகுணர்ச்சிகள் இல்லாது, செய்திகளின் அடர்த்தியான தொகுப்பாகவே அவை

இருக்கும். என்ன பேசினாரோ அதுவே செய்யுளாக்கப்படும்.

அது கருணை கொண்டு கருணையை ஊற வைத்தல். தவிக்கின்ற மக்களுக்கு ஏதேனும் கொடுக்க வேண்டுமே என்று குழந்தைக்கு தாய் கொடுக்கும் பால்போல, சிறிது கால வளர்ச்சிக்குப் பயன்படும். பிறகு, நாம் முன்னேற வேண்டும். நமது சோற்றை நாம் உண்ண வேண்டும். நாமே பிசைந்து விழுங்க வேண்டும். நாமே சம்பாதிக்கின்ற காலத்தை நாம் எதிர் கொள்ள வேண்டும். கிழப்பருவம் வரை தாய்ப்பாலை குடிப்பேன் என்று எவரும் சொல்லலாகாது. சொன்னவரை உலகம் பைத்தியம் என்று சொல்லும்.

கனவுகள் மிகச் சிறிதளவு இருப்பது போல, கலைகள் மிகச்சிறிளவே நம்மோடு இருக்க வேண்டும். அந்தக் கலைகளையும் உதறுகிறபொழுது ஆன்மீக அனுபவங்கள் மிக வேகமாக உங்களை நோக்கி வந்துவிடும். வாழ்வின் நிதர்சனம். வாழ்வின் வெம்மை. கலைகள் அற்று இருக்கும் போதுதான் புரியும். மற்றவர் சொல்லி புரிந்து கொள்வதைவிட நீங்கள் எல்லாவற்றையும் இறக்கிவிட்டு உங்கள் மனம் என்ன சொல்கிறது. உங்கள் சூழ்நிலை எப்படி இருக்கிறது என்று ஆராயப்புகுந்தால் ஆன்மீகத்தின் முதல்படியை நீங்கள் தொட்டு விட்டீர்கள் என்று அர்த்தம்.

இதுதான் எனக்கு விதம்விதமாக என் சத்குருநாதன் யோகிராம்சுரத்குமார் அவர்களால் சொல்லப்பட்டது.

தேவையென நினைக்கும் வரை எழுது. விதம் விதமாக ஆன்மீகத்தைச் சொல்ல முயற்சித்து வா. ஆனால், இது சொல்லில் அடங்காத விஷயம். இதை எவரும் ஊட்டி புரிந்து கொள்ள முடியாத பொருள். எழுத்தில் தெரிந்து கொள்ள முடியாத தன்மையுடைய செய்தி. இதை அவரவர் அனுபவித்து அவரவர் முங்கி எழ வேண்டிய நதி. அவரவர் உண்ட பிறகே ரசிக்கின்ற தேன். தேனைப்பற்றி எத்தனை சொன்னாலும் தித்தித்து விடுமா. தேனைத் தின்றாலொழிய தித்திப்பு என்னவென்று தெரியாது.

ஒரு புள்ளியில் சிந்தனை நிறுத்தி உள்மனம் பார்த்து உள் மனத்தின் மூலம் சுற்றுப்புறச் சூழ்நிலை கவனித்து, எதிர்மனிதரை கவனித்து, வரும்போகும் நட்புகளை கவனித்து, உள்ளுக்குள்ளே அமைதியாக இருக்க வேறு ஒரு உலகம், வேறு ஒரு பார்வை, வேறு ஒரு நிலை நம்மில் இருப்பதை நாம் உணர முடியும்.

ஆனால், எத்தனை விதமாகச் சொன்னாலும் எழுதி முடித்ததாக எனக்குத் தோன்றவில்லை. நான் சொன்னது உங்களைச் சென்றடைந்ததாகவும் எனக்குப் புரியவில்லை. ஏனெனில் மொழி பலவீனமானது.

எல்லா மொழியுமே ஒரு அளவிற்குத்தான் செயல் படுகின்றன. எல்லா கலைகளுமே ஒரு அளவிற்குத் தான் எட்டி உங்களைத் தொடுகின்றன. இதில் கூத்து என்கிற விஷயம் சற்று வேகமாக மனிதர்களை இறுக்கத் தழுவிக் கொள்கிறது. ஏனெனில் கூத்தில் எழுத்தும் உண்டு. சங்கீதமும் உண்டு. ஆட்டமும் உண்டு. இந்த மூன்றும் கலந்ததாலேயே கூத்து மிகச்சிறப்பாக இருக்கிறது. மிக நெருக்கமாக இருக்கிறது.

ஆனாலும், இது சொல்லுகின்ற விஷயமும் மக்களை விரைவாக, உடனடியாக சென்று அடையவில்லை.

ஆன்மீகம் என்பது வெறும் நீதி நெறிகளல்ல. வெறும் கட்டளைகள் அல்ல. ஆன்மீகம் என்பது தன்னை உணர்வது. தன் உயிர். தன் உடம்பின் விழிப்பு. அதன் நொய்மை புரிந்து தன் அகங்காரத்தை அழிப்பது. தன்னுடைய நிலைமை, யோக்கியதை புரிய, உடனடியாக அகங்காரம் பொடிப்பொடியாக உதிர்ந்து விடும். அகங்காரம் உதிர்ந்த பிறகு ஆடுவதற்கும், பாடுவதற்கும் எதுவுமில்லை. எழுதுவதற்கு நெல்முனையளவும் தோன்றாது.

கடவுள் எங்கே என்று என் குருநாதரைக் கேட்க, இதோ கடவுள் என்று என் முதுகைத்தடவி, தலையைத் தடவி என்னை அணைத்துக் கொண்டு அவர் சுட்டிக் காட்ட எல்லா இடமும் சக்தியின் ஆட்டமாக இருப்பதை நான் தரிசித்தேன். என்னுள்ளும், என் எதிரே இருப்பவருள்ளும், என் குருநாதருள்ளும், என்னைச் சுற்றியும், எங்கள் இருவருக்கும் நடுவேயும் சக்தியின் ஆட்டம் இருப்பதை எல்லா இடத்திலும் ஒரேவிதமான சக்தி இருப்பதை நான் கண்ணாரக் கண்டு அனுபவித்தேன். தாங்க முடியாமல் அலறினேன். என் உடம்பு அதை ஏற்றுக் கொள்ள முடியாமல் முறுக்கித் தவித்தது. சூட்சும சக்கரங்களின் இருப்பும், அதன் சுழற்சியும், அதன் நிறமும், அதன் சப்தமும், அதன் இசையும் எனக்குத் தெள்ளத் தெளிவாக அவரால் காட்டப்பட்டன. இதை எத்தனை சொன்னாலும் நான் அனுபவித்ததைப் போல அது உங்களிடம் வந்து சேருவதே இல்லை.

சக்கரங்களைக் கண்டு அனுபவித்தவர்கள். நான்

அனுபவித்ததை லேசாக சொன்னதும் சட்டென்று புரிந்து கொள்கிறார்கள். முகத்தைப் பார்த்துவிட்டு என்ன விழிப்பு ஏற்பட்டு விட்டதா, எப்போது, எவரால் என்று சட்டென்று கேட்கிறார்கள். எனக்கும் சிலரைப் பார்த்தபோது இவர் இன்னார், இன்னவிதமான விழிப்பு பெற்றவர் என்று புரிந்து விடுகிறது.

புரிந்த பிறகு என்ன.

எதுவுமில்லை. வாழ்க்கை அதேவிதமான சுகதுக்கங்களுடன் ஏற்ற இறக்கங்களுடன் நகர்ந்து கொண்டிருக்கிறது. ஆனால், அதை மனம் பற்றிக் கொள்ளாது. அதை, அந்த சுகத்தை மௌனமாக அனுபவிக்கத் துவங்கி விடுகிறது. எல்லோரும் அழுகிறார்கள். நீயும் அழு. எல்லோரும் சிரிக்கிறார்கள். நீயும் சிரி. எல்லோரும் மௌனமாக இருக்கிறார்கள். நீயும் மௌனமாக இரு என்று கூட்டத்தோடு கூட்டமாய் உலா வந்துவிட்டு, உள்ளுக்குள்ளே தன் இருப்பைப் பற்றி மிகப்பெரிய தேடலை ஆரம்பித்து விடுகிறது. வேறுவிதமான உலகை. சூட்சுமமான சக்திகளை தரிசிக்கத் துவங்கி விடுகிறது.

இடையறாத தரிசனம். தினம் தினம் தரிசனம்.

இது பிரமையா அல்லது கனவா. என்னுடைய ஆசைகளின் கூத்தா என்று நான் உற்றுப் பார்க்க வேறுவிதமான விடைகள் கிடைக்கின்றன.

முதலில் பொறாமை ஓடியே போய் விடுகிறது. தன்னை மற்றோர் எவரோடும் ஒப்பிட்டுப் பார்ப்பதே இல்லை. நான் பெரிய கொம்பு என்கிற அகங்காரம் அடுத்தபடி உடைகிறது. பழக்க தோஷத்தினால் ஏற்படும் கோபங்கள் மெல்ல மெல்ல குறைகின்றன. ஆசைகள் பற்றி மனம் புரிந்து கொள்கிறது. அநியாயம் செய்யாதே என்று அறிவுறுத்துகிறது. அமைதியாய் இரு என்று எச்சரிக்கிறது. அன்போடு வாழ் என்று கூவுகிறது.

எடுத்தவுடனேயே புகழ்வதற்கோ, போலியாக நடப்பதற்கோ, மகிழ்ச்சியாகப் பேசுவதற்கோ தந்திரப்படாமல் மனம் அமைதியாக இருக்கிறது.

இதன் விளைவு என்ன.

இடையறாத ஒரு அன்புமயமான சிந்தனை ஏற்பட்டு விடுகிறது.

எல்லோருக்கும் மிக நிச்சயமாக மரணம் எப்போது வேண்டுமானாலும் ஏற்படும். மரணம் என்கிற தன்மை தெளிவாய்ப் புரிய இந்த குலமென்ன, மதமென்ன, ஜாதியென்ன என்று தோன்றுகிறது. பேராசையிலிருந்து

மிகப்பெரிய விடுதலை கிடைக்கிறது.

இந்தப் பேராசையிலிருந்தும் விடுதலை. அதனால் ஏற்படும் அமைதி என்ன தரும்.

அதுவே சந்தோஷம். அந்தச் சந்தோஷமே நிரந்தரம். எவனொருவன் அனவரதமும் என்னை நினைத்துக் கொண்டிருக்கிறானோ அவனது தினசரி யோகக்ஷேமத்தை நான் கவனித்துக் கொள்கிறேன் என்று கீதையில் ஸ்ரீ கிருஷ்ணர் சொன்னது உண்மை. மிகப்பெரிய சத்தியம். நான் குறிப்பிடும் சந்தோஷம். இந்த கீதை சொல்லும் அடக்கம் தரும்.

ஆனால், அனவரதமும் கடவுளை நினைக்க முடியுமோ.

இது கடவுளுடைய வீடு. இது கடவுளுடைய இடம் என்று கனிந்து இருக்க முடியுமோ.

முதற்கட்டமாக அதற்கு ஒரு மெல்லிய ஒழுக்கம் தேவைப்படுகிறது. மூச்சு சீராக இருப்பின் தான் உள்ளுக்குள் இருக்கின்ற கடவுளை உற்றுப் பார்க்க முடியும். மூச்சு சீராக இருக்க வேண்டுமென்றால் உடம்பின் ரத்த ஓட்டம் மிக அமைதியாக இருக்க வேண்டும். சூடு ஏறாமல் இருக்க வேண்டும். மதுவும், மாமிசமும், காமாந்தக விஷயங்களும் உங்கள் ரத்த ஓட்டத்தை சூடுபடுத்துகின்றன. புத்தி சூடானால் நிச்சயம் ஏகாக்கிரகம் என்ற ஒரு நிலைப்பட்ட தன்மைக்கு மனம் போகவே போகாது. உடம்பின் துடிப்பு அதிகரித்தால் மனம் தறிகெட்டு அலையும்.

மாமிசம் சாப்பிடுகிறவர் ஒரு நாளும் ஒரு புள்ளியின் கீழ் நிலைத்து நிற்க முடியாது. ஒருவேளை மது அருந்தினால் கூட, மூன்று நாளைக்கு அந்த மது உள்ளுக்குள் அசுர வேலைகள் செய்து கொண்டிருக்கும். அகம்பாவத்தின் உச்சிக்கு அது கொண்டு போய் அலைகழித்துக் கொண்டிருக்கும்.

ஆட்டுக் கறிதானே சாப்பிடக்கூடாது. மீன் பரவாயில்லையா. கோழி சாப்பிடலாமா என்று சிலபேர் கேட்பார்கள்.

பூண்டும், வெங்காயமும் கூட உடம்பினுடைய நாடித் துடிப்பை அதிகரிக்கக்கூடிய விஷயங்கள். ஏன் தவறான, ஆத்திரமுள்ள, கோபமுள்ள ஒருவர் சமைத்து, நாம் சாப்பிட்டாலும் அந்த பதட்டம் நமக்குள் வருவதற்கு வாய்ப்பிருக்கிறது என்று பெரியவர்கள் சொல்லுகிறார்கள்.

ஒழுக்கமான உணவுக்குப் பிறகு வருவது சுகமான

மூச்சுப் பயிற்சி, சுகமான மூச்சுப் பயிற்சிக்குப் பிறகு உடம்பின் அங்கங்களை தளர்த்துவதும், இறுக்குவதும் செய்து கொண்ட யோகாப்பியாசம் மிக அவசியம். யோகாப்பியாசத்திற்குப் பிறகு மனம் ஒருமைப்பட, ஆரம்ப வித்தையான மந்திர ஜபங்கள் மிகமிக முக்கியம். மந்திர ஜபத்தின் உதவியால் தியானம் என்கிற வெறுமையான இடம் என்பது ஏற்படும். அதற்குப் பிறகு கடவுள் தரிசனம் கிடைத்தாலும் கிடைக்கலாம். கிடைக்காது போனாலும் போகலாம்.

இதுவரை சொன்னது ஆன்மீகத்தின் எல்.கே.ஜி. வகுப்பு. பல எல்லைகளைக் கடந்து உள்ளுக்குள் சுயம் பிரகாசமாக கடவுள் தரிசனம் ஏற்பட்டுவிடின், அது மிக உன்னதமான விஷயமாக கருதப்படுகிறது. அந்த தரிசனம் மிக மதிப்புடையது. ஆனால் இதற்கு பிறகுதான் இருக்கிறது உண்மையான பிரச்சினை.

## ஸ்ரீ ரத்னகிரீஸ்வரர்

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபதுகளில் சென்னையைச் சேர்ந்த பெசன்ட் நகர், மெல்ல விரிவடைய ஆரம்பித்தது. மயிலாப்பூரிலும், திருவல்லிக்கேணியிலும் இருந்த உயர் தட்டு மத்தியத்தர வர்க்கத்தினர் பெசன்ட் நகரில் கடற்கரை யோரமாக குடியேறினார்கள்.

தியோசோபிகல் சொஸைட்டியை ஊடறுத்துப் போகின்ற மரங்கள்டர்ந்த நீண்ட பாதை வழியே போய் மணலும், தென்னை மரமும், கருவேலஞ்செடியும் நிறைந்த பெசன்ட் நகரை சீர் செய்து, மனைகளாகப் பிரித்து, வீடு கட்டி வாழத்துவங்கினார்கள்.

அமைதியான, காற்றோட்டமான நகரத்திற்கு அருகேயும் அதே நேரம் சந்தடியற்றும் விலகியிருந்த பெசன்ட் நகர் மீது மக்களுக்கு ஒரு கவர்ச்சி இருந்தது.

அறுபதுகளில் ரிசர்வ் வங்கியின் அடுக்குமாடி கட்டிடங்கள் அங்கு தோன்ற, பெசன்ட் நகருக்கு ஒரு முக அழகு கிடைத்தது.

கடும் உழைப்பும், கடவுள் நம்பிக்கையும் கொண்ட அந்த மத்தியத்தர வர்க்கத்து உத்தியோகஸ்தர்கள், தாங்கள் இருக்குமிடத்தில் ஒரு கோயில் வேண்டுமென்று ஆசைப்பட்டார்கள்.

பெசன்ட் நகர் பிள்ளையார் கோயில் சற்று

எட்டியிருக்க, தங்களுக்கு அருகேயே ஒரு நல்ல கோவில் இருக்க ஆசைப்பட்டார்கள்.

அப்பொழுது காஞ்சிபுரத்தில் மடாதிபதியாக இருந்த தாமரை என்று எல்லோராலும் உணரப்பட்ட மகாபெரியவாள் ஸ்ரீ சந்திரசேகர சரஸ்வதி சுவாமிகளிடம் போய் பணிவாக விண்ணப்பித்துக் கொண்டார்கள்.

கண்மூடி சிறிதுநேரம் உட்கார்ந்திருந்த தாமரை, கடலில் ஒரு சிவலிங்கம் இருக்கிறதென்றும், தேடினால் கிடைக்குமென்றும், அதை தேடிக் கண்டுபிடித்து கோயில் கட்டவேண்டும் என்றும் சொன்னார்.

ஒரு மாமல்லபுரம் சிற்பியிடம் சொல்லி எளிதாக முடிய வேண்டிய ஒரு விஷயத்தை, ஒரு தேடல் பணியாக மாற்றினார்.

மனம் முழுவதும் ஒரு கடவுள் எண்ணத்தோடு, கோயில் வேண்டுமென்ற ஆசையோடு, அந்த மத்தியத்தர மக்கள் இடுப்பில் வேட்டியை வரிந்து கட்டிக் கொண்டு கடலில் நின்று சிவலிங்கம் கிடைக்கிறதா என்று தேடினார்கள். தினமும் காலையில் பத்துப் பதினைந்து ஆட்கள் வெள்ளையும், சொள்ளையுமாய் வந்து கடலில் ஏதோ தேடுவதைப் பார்த்துவிட்டு அங்குள்ள வலைஞர்கள் என்னவென்று கேட்க அவர்கள், "எங்கள் குரு சிவலிங்கம் கிடைக்கும், இங்கு இருக்கிறது என்று சொன்னார்." என்று சொல்ல, "நாங்கள் பார்க்கிறோம். தேடித் தருகிறோம். இப்படி நின்று தேடினால் கிடைக்காது." என்று அவர்களை அனுப்பிவிட்டு, வலைவீசி தேடி, மூன்று மாத தேடலுக்குப் பிறகு சிவலிங்கம் கிடைத்தது.

சிவலிங்கம் கிடைத்த கதையை ஊர் மக்கள் மகாபெரியவாளிடம் விண்ணப்பித்துக் கொள்ள, அது இரண்டாயிரம் வருடத்து சிவலிங்கம் என்றும், மிகமிகப் பழமையானது என்றும், அதை வைத்து பூஜித்தல் நலம் என்றும் சொன்னார்.

அவர் கட்டளையின்படி ஒரு கோயில் எழுப்பி ஸ்ரீ அராளகேசி என்று அம்பாளுக்கு பெயரிட்டு, அந்த சிலையையும் நிறுவினார்கள்.

சிவன் கோயில் உருவாயிற்று. அது மட்டுமல்ல பகவான் ரமணர் தன் கையால் பூஜை செய்த விநாயகர் சிலை ஒன்று கிடைக்க, அதையும் கொண்டு வந்து கோயிலில் நிறுவினார்கள்.

மக்களிடையே சமீபமாய் வாழ்ந்த இரண்டு

பரமஹம்ஸர்களின் அனுபூதி. அந்தக் கோயிலுக்கும் அங்குள்ள மக்களுக்கும் கிடைத்தது. பகவான் ஸ்ரீ ரமணரே சென்னையில் வந்து பெசன்ட் நகரில் அமர்ந்தது போல, அங்குள்ள நகரவாசிகள் அந்த விநாயகரை நிறுவி கொண்டாடினார்கள்.

மகாபெரியவாளால் அனுக்கிரகம் செய்யப்பட்ட அந்த சிவலிங்கத்திற்கு, மகாபெரியவாளின் உத்தரவின் பேரில் ஸ்ரீ ரத்னகிரீஸ்வரர் என்று பெயரிட்டு, ஒரு மலை மீது சிவலிங்கம் இருப்பது போல் நிறுவினார்கள்.

முருகன் சன்னதி, கோதண்டராமர் சன்னதி, நவக்கிரக சன்னதி, ஹனுமன் சன்னதி என்று பல சன்னதிகளும் உருவாயின. செவ்வாய்கிழமை பூஜைக்காக துர்க்கை சிலை ஒன்றும் சுற்றுப்புறத்தில் அழகாக நிறுவப்பட்டது. மிகப்பெரிய மண்டபம் கட்டப்பட்டது.

பெசன்ட் நகரைச் சேர்ந்த இந்த பக்த மண்டலியினர் கோயிலை திறம்பட நடத்தி வருகிறார்கள். ஹோமங்களும், பூஜைகளும் இடையறாது செய்து வருகிறார்கள். எல்லோரும் ஒரு முகமாக கோயிலைக் கொண்டாடி வருகிறார்கள். கோயில் வேலைகளில், வழிபாடுகளில் சிறிதளவும் அலட்சியம் இல்லாமல் எதை, எப்பொழுது, எப்படி செய்ய வேண்டுமோ அப்படிச் செய்து வருகிறார்கள்.

மக்களின் மிகுந்த ஆதரவோடும், நல்ல நண்பர்களின் முழு நேர உழைப்போடும், கோவில் பிரகாசமாக விளங்கிக் கொண்டிருக்கிறது. இரண்டு மகான்களின் அனுபூதி கிடைத்த சிலைகள் மிக கம்பீரமாக வீற்றிருந்து சகலரையும் ஆசீர்வதித்துக் கொண்டிருக்கிறது.

இந்தக் கோயில் பிரதோஷ வழிபாடு அற்புதமானது. எல்லாக் கோயில்களிலும் இப்பொழுது சிறந்து விளங்குகின்ற இந்த வழிபாடு இந்த பெசன்ட்நகர் ரத்னகிரீஸ்வரர் கோவிலில் இன்னும் அற்புதமாய் நடந்து வருகிறது. ஒரு பிரதோஷத்திற்கு கிட்டத்தட்ட சிவனுக்கு நானூறு மாலை அணிவிக்கப்படுகின்றன.

எடுத்த காரியம் முடிய வேண்டும் என்று சங்கல்பித்துக் கொண்டு மூன்று பிரதோஷத்திற்கு மாலை கொண்டு வந்து சிவனுக்கு அணிவித்தால் எடுத்த காரியம் முடிகிறதென்று மக்கள் நம்புகிறார்கள்.

இந்த பிரதோஷ வழிபாட்டுக்கென்று சமீபத்தில்

ஒரு ரிஷப வாகனம் வெள்ளியில் பக்த மண்டலியினரால் செய்யப்பட்டிருக்கிறது. இவ்வளவு ஒயிலான ஒரு ரிஷபத்தை நான் இதுவரை பார்த்ததேயில்லை.

நாலடி உயரமுள்ள இந்த ரிஷபம் தன் முகத்தை பரமேஸ்வரன் பக்கம் திரும்பி விழிகள் உருட்டிப் பார்த்து காதுகளை அவர் பக்கம் நீட்டி, ஜயன்மீர் கூப்பிட்டீரோ என்பதுபோல் காட்சி கொடுத்துக் கொண்டிருக்கும் அந்தப் பணிவு, அந்த துடிப்பு ரிஷபத்தின் ஒவ்வொரு அங்கத்திலும் தெரிகிறது. மிக அற்புதமான கலைப் படைப்பு இந்த ரிஷபத்தின் முகத்தில் தெரிகிறது. மிக அற்புதமான கலைப்படைப்பு இந்தப் பிரதோஷ ரிஷபம்.

பிரதோஷ காலத்தில் ஸ்ரீ ரத்னகிரீஸ்வரருக்கு வந்து இந்த ரிஷபத்தையும், ஸ்ரீ ரத்னகிரீஸ்வரரையும், ஸ்ரீ அராளகேசி அம்பாளையும் தவறாமல் தரிசிக்க வேண்டும்.

சென்னையின் பரபரப்புக்கு வெளியே அமைதியான ஒரு சூழ்நிலையில் வாகன இறைச்சல் இல்லாத ஒரு இடத்தில் நல்ல அதிர்வலைகளோடு ஸ்ரீரத்ன கிரீஸ்வரர் ஆலயம் விளங்குகிறது. தொலைவிலிருந்து ஸ்ரீ ரத்னகிரீஸ்வரரைப் பார்த்தால், தாமரை என்று நாம் உணரக்கூடிய அந்த மகாபெரியவர் அமர்ந்திருப்பது போலவே தோன்றுகிறது.

ஸ்ரீ அராளகேசி அம்பாள் நின்று முகம் நோக்கினால் சிரிப்பாள். உதடு பிரித்துப் பேசுவாள். கண்களால் கனிவு பொங்கப் பார்ப்பாள். உள்ளம் குழைந்து அவள் கால்களைப் பற்றிக் கொண்டு கதறத் தோன்றும். அம்பாளிடம் நீங்களும் பேசலாம்.

அங்குள்ள பொதுமக்கள் அவளோடு பேசிக் கொண்டு தான் இருக்கிறார்கள்.

ஒருமுறை பெசன்ட் நகரிலுள்ள ஸ்ரீ ரத்னகிரீஸ்வரர் கோயிலுக்கு விசாரித்துக் கொண்டு போய் விட்டு வாருங்கள்.

## ரா ஜாராமன் ஆன்மீகவாதியாகிறான்

ரா ஜாராமன் வெளிப்படுத்தும் பணிவில் ஒரு

திருட்டுத்தனம் இருந்தது. அந்தத் திருட்டுத்தனம் ராஜாராமனுக்கு மிகுந்த குதூகலத்தைக் கொடுத்தது. பணிவாக யாரிடம் பேசினாலும் மக்கள் சந்தோஷமாகிறார்கள். சொல்வதை நம்புகிறார்கள். சாதாரணமாக வெறுமையான குரலில் அதே விஷயத்தைச் சொன்னால் சந்தேகமாகப் பார்க்கிறார்கள். சற்று அலட்சியமான குரலில் சொன்னால் கோபமடைகிறார்கள். என்வே, மக்களை எதுவும் நம்ப வைக்க வேண்டுமெனில் பணிவாக இருத்தலே உத்தமம் என்பதை ராஜாராமன் புரிந்து கொண்டான். அதனாலேயே அவன் பணிவில் ஒரு திருட்டுத்தனம் இருந்தது.

அந்த திருட்டுத்தனம் ராஜாராமனுக்கு மிகுந்த சந்தோஷத்தைக் கொடுத்தது. அந்தப் பணிவில், குதூகலமான வார்த்தையில், புதழ்ச்சியில் அடிபட்டு சின்னாபின்னமாவதை அவன் ரசித்தான்.

"ராஜாராமன் உள்ள வா."

பென்சிலும், ஷார்ட்ஹாண்ட் நோட்புக்கும் எடுத்துக் கொண்டு உள்ளே போனான்.

அவர் யாரோடோ தொலைபேசியில் பேசிக் கொண்டிருந்தார். அவரது மேஜையில் நோட்டுப் புத்தகத்தையும், பென்சிலையும் வைத்துவிட்டு கைகட்டிக் கொண்டான்.

அவர் பேசத் துவங்க முதுகை வளைத்துக் கொண்டான்.

"யோவ். நீ ஸ்டெனோகிராஃபர் தானே. என்னத்துக்கு கைகட்டற. என்னத்துக்கு முதுகு குனிஞ்சு நிக்கற. சாதாரணமா இருய்யா."

அவர் சட்டென்று தொலைபேசி பேச்சை நிறுத்தி விட்டு அவனை அதட்டினார்.

"இப்படி நின்னு பழக்கமாயிடுத்து. என்னை விட்ருங்கோளேன்." முணுமுணுப்பாக ராஜாராமன் சொன்னான்.

"ஏன். ஏன் அந்தப் பழக்கத்தை ஏற்படுத்திக்கற."

"உங்க மேல ஒரு மரியாதை."

"யோவ். நான் ஆபீஸர்தான்யா. சும்மா அடிமை மாதிரி நிக்காத."

"உங்களுக்கு ஒரு வயசு இருக்கில்லையா."

"என்னா.. கிழவன்னு சொல்றயா."

"வயசு மட்டுமே இல்ல."

"வேற என்னய்யா."

"உங்க ஆங்கில அறிவு. அதுல இருக்கற ஆளுமை. நீங்க தீர்மானம் பண்ற விதம். முடிவெடுக்கிற வேகம். இதனாலயும் நான் உங்க முன்னாடி பணிவா நிக்கறேன்."

"புகழாதய்யா."

"இது உண்மை. புகழணும்னா வேற சில விஷயங்கள் இருக்கு."

அவன் பேச, அந்த அதிகாரி தலைகுனிந்து கொண்டார். மெல்ல நிமிர்ந்து "வேற என்னய்யா இருக்கு புகழறதுக்கு." ஆசை பொங்கக் கேட்டார்.

பறவை, பொறியில் சிக்கிவிட்டதை அவன் உணர்ந்தான்.

"உங்க கண்கள். என்ன பூஜை பண்றேள்னு தெரியாது. நெத்தியில சின்னதா குங்கும பொட்டை இட்டுண்டு உள்ளங்கையில் சந்தனம் மணக்க வரேள். அது பெரிய மரியாதையை ஏற்படுத்தறது ஸார். பேண்ட் சட்டை டையோட இருக்கும்போதே அசத்தறேளே, பஞ்சகச்ச வேஷ்டியும் மேல பட்டு வேட்டியுமா இருந்தேள்னா கால்ல விழுந்துடுவேன். ஏதோ ஒரு டிவைன் பவர் உங்ககிட்ட இருக்கு ஸார். அதனாலதான் நீங்க எடுக்கற முடிவெல்லாம் சரியா இருக்கு."

"போய்யா."

"சரி ஸார்."

அவன் நோட் புக் எடுத்துக் கொண்டு திரும்புவான்.

"யோவ் நில்லுய்யா."

"எஸ்.. ஸார்."

"கை கட்டாத பேசேன்யா."

"முடியாது ஸார்."

"சரி. உன் இஷ்டம்."

அந்த அதிகாரி மெல்லியதாய் புன்னகை செய்தார். ராஜாராமன் என்ன சொன்னாலும் கேட்டார்.

ராஜாராமன் அந்த அலுவலகம் முழுவதும் சுதந்திரமாய் நடைபோட்டான்.

"உங்க பாஸ் உள்ள போயிட்டாரு."

"போகட்டுமே."

"கூப்பிட மாட்டாரா."

"கூப்பிடுவார்."

"எங்கன்னு தேடமாட்டாரா."

"தேடுவார்."

"ஏண்டா இங்க நிக்கற."

"அஞ்சு நிமிஷம் கழிச்சு போனா ஒண்ணும்

தலைபோயிடாது."

மற்ற எல்லா ஸ்டெனோகிராபர்களும் அதிகாரிகளைக் கண்டு பயந்து சுவரோடு ஒண்டி நிற்க, ராஜாராமன் மட்டும் அலட்டலாக நடந்து கொள்வான். அந்நேரம் பயமுறுத்தியவர் டெலிபோனிலிருந்தே ஆபீஸுக்கு தொடர்பு கொள்வான்.

"ஒரு முக்கிய வேலையா அக்கௌண்ட்ஸ் செக்ஷன்ல இருக்கேன். என்னை தேடாதீங்கோ. பத்து நிமிஷம் பொறுத்து வரேன். ஒ.கே."

போனை துண்டிப்பான். எதிரே உட்கார்ந்தவர் அசந்து போவார்.

"நீ என்ன ஆபீஸர்கிட்டதான் பேசறியா. இல்லை, அடுத்தாத்து மாமாவோட பேசறியா. என்னாடா அது."

"அது மாதிரிதான் வச்சுண்டிருக்கேன் அவரை."

கம்பீரமாகச் சொல்வான்.

கம்பெனியின் வெளி உலக தொடர்பு பற்றிய விஷயங்களை அவன் அதிகாரி கவனித்து வந்தார். ஆபீஸுக்குள்ளே இருக்கின்ற மனிதர்கள் நடமாட்டமும், அதிகாரிகளின் அசைவையும், தொழிலாளர்களினுடைய மனோநிலையையும் அவர் ரகசியமாக கவனித்து வந்தார். தொழிலாளர்களின், குமாஸ்தாக்களின் வீடு, சொத்து, விவரங்கள் குறித்த கோப்புகளை வாங்கிப் பார்த்து, அவர் உடல் நலங்களைப்பற்றி கம்பெனி டாக்டர் அனுப்பிய மருத்துவ விவரங்களை வாங்கிப் படித்து, அவர்களின் திறம்பற்றி, திறமையின்மைபற்றி, ஊக்கப்படுத்துதல் பற்றி அல்லது உதறுதல் பற்றி அவர் குறிப்பு எழுதுவார். அவர் சொன்ன குறிப்பை ராஜாராமன் கம்ப்யூட்டரில் டைப் அடித்து அந்தக் கோப்பில் இணைத்து விடுவான். கம்ப்யூட்டரிலும் அந்தச் செய்தி ஏறிவிடும்.

அந்த அதிகாரி வீட்டில் ஒரு துக்கம் ஏற்பட்டது. மூன்று நான்கு நாட்கள் லீவு எடுத்துக் கொண்டார். மிகச் சிறிதளவே ராஜாராமனுக்கு வேலை இருந்தது. ஏதேனும் மும்முரமாக வேலை செய்வது போல் நடிக்க வேண்டிய நிர்ப்பந்தம் அவனுக்கு இருந்தது. எனவே, அவன் கம்ப்யூட்டரைத் தட்டி, சின்னத்திரையை விரித்து ஒவ்வொரு தொழிலாளியின் கோப்புகளாக சோதிக்க ஆரம்பித்தான். அவர்கள் சொந்த வாழ்க்கையைப்பற்றி மிகத் தெளிவாக மனதில் இருத்திக் கொண்டான். குமாஸ்தாக்களை பிறகு நோட்டமிட்டான். பெர்சனல் டிபார்ட்மெண்ட்டில்

மட்டுமே இருக்க வேண்டிய அந்த தகவல்கள். ராஜாராமனுக்கு தெரிந்திருக்கக்கூடும் என்று எவராலும் ஊகித்திருக்க முடியாது. ராஜாராமன் அந்தக் குழுவிலேயே மிகச் சொத்தையாக இருந்த ஒரு மனிதனைத் தேர்ந்தெடுத்து, உணவு முடித்த ஒரு பிற்பகல் நேரம் அவனுக்குப் பக்கத்தில் அமர்ந்து கொண்டான்.

"என்ன ராஜாராமா இங்க உட்கார்ந்துட்ட."

"ஒண்ணுமில்ல. காலை வலிக்கறது. அதனால கொஞ்ச நேரம் உட்கார்ந்துட்டு போகலாமேன்னு.."

"உட்கார்.. உட்கார் நன்னா உட்கார்."

குளிரூட்டப்பட்ட அந்த அறையில் ராஜாராமனை தன் பக்கத்தில் அந்த சொத்தை ஆள் உட்கார வைத்துக் கொண்டான்.

"என்ன.. உனக்கு அல்சரா."

திடீரென்று ராஜாராமன் கண்களை விரிய விழித்து அவனைப் பார்த்துக் கேட்டான்.

"லேசா இருக்கு."

"லேசால்லாம் இல்ல. ரொம்ப சீரியஸாதான் இருக்கு. மேல் வயிறு அடிக்கடி வலிக்கறதில்லையா."

"ஆமாம்."

"இடுப்புலயும் நடுநடுவுல தலைகாட்டறதோ."

"இருக்குடா. என்ன பண்றது."

"அக்கா பொண்ணையே கல்யாணம் பண்ணிண்டிருக்கியோ."

"உனக்கு எப்படி தெரியும்."

"இல்லைடா. உன் விரல் கொஞ்ச நேரம் என் மேல பட்டுண்டு இருந்துதா. டக்கக்குனு என்னமோ தோணித்து. அதான் சொல்லிண்டிருக்கேன். ஒண்ணும் மனசுல வச்சுக்காத."

ராஜாராமன் எழுந்து தன் அறை நோக்கி நடந்தான்.

சொத்தை அவன் நுழைந்த மூன்றாம் நிமிடம் அவனோடு பின்னால் நுழைந்தது.

"என்னடா வந்த. கிடுகிடுன்னு சொன்ன. திடீர்னு போயிட்ட. மேற்கொண்டு சொல்லு." என்று கேட்டது.

"இப்போ முடியாது. எனக்கு ரெண்டு டெலிபோன் வரும். அந்த போன் வரும்போது நீ பக்கத்துல இருந்தா எனக்கு டிஸ்டர்பன்ஸ் ஆகும். நீ போ. நான் உன் டேபிளுக்கு வரேன்."

அவனுக்கு எந்த தொலைபேசியும் வரவில்லை. ஆனாலும், அரைமணிநேரம் கழித்து மிக வேகமாக அந்த

சொத்தை ஆள் இருக்கும் பக்கம் நடந்து போய், "கொஞ்சம், இன்னும் ஒரு அஞ்சு நிமிஷம் பொறுத்துக்கோ. கையில இருக்கற வேலையை முடிச்சுட்டு நிம்மதியா வரேன். முன்னும், பின்னும் அலைந்து, இந்த டேபிளுக்கும் அந்த டேபிளுக்கும் நின்று பேசி, மறுபடியும் தன் அறைக்கு வந்து, ஒரு டெலிபோன் பேசுவதுபோல் நடித்து, மறுபடியும் வந்து இவனிடத்தில் "ப்பா.. என் உயிரை வாங்கறாண்டா. லீவு போட்டு வீட்டுக்காரியத்தை கவனிக்க வேண்டியது தானே. போன்மேல் போன். தொந்தரவான தொந்தரவு. எதுக்கு கூப்பிட்ட."

"நீதாண்டா எதுவோ சொல்லிட்டுப் போன, அப்புறம் விட்டுட்டியே."

"உன் டேட் ஆஃப் பொர்த் சொல்லு."

அவன் பிறந்த தேதியை சொன்னான். பிறந்த தேதியை வைத்து கம்ப்யூட்டரில் ஏற்கனவே ராஜாராமன் நட்சத்திரம் கண்டு பிடித்திருந்தான்.

"ஓஹோ.. ஜூலை மாசமா. பதிமூணாம் தேதியா. அப்படியானால் உன் நட்சத்திரம் திருவோணம். ரைட்டா."

"எப்படிடா."

"அதுவொரு சின்ன கணக்கு."

"உனக்கு ஜோசியம் தெரியுமா."

"எங்க பரம்பரையில எல்லாருக்கும் தெரியும்டா. கத்துண்டே ஆகணும்."

"கை பார்த்து சொல்லுவியா."

"ஒண்ணுமில்லை. பக்கத்துல உட்கார்ந்தே சொல்லுவேன்."

"எப்படிடா இது. புது ஜோசியமா இருக்கே."

"உன் உடம்புலேர்ந்து ஒரு அதிர்வு வருதில்லையா. அந்த அதிர்வு என் மேல படும். என் மேலபட்டு, நான் கண்ணை மூடிண்டு உட்கார்ந்திருக்கும்போது உள்ளுக்குள்ள ஒவ்வொரு விஷயமா சொல்லும். உன் வொய்ஃப் பேர் 'ஆர்'ல ஆரம்பிக்கறதா."

"ஆமா."

"'ஐ' ல முடியறதா."

"ஆமா. எப்படிடா சொல்ற."

"எனக்கென்ன தெரியும். உன்னைப்பத்தி. உள்ள தோன்றது சொல்றேன்."

"வேற என்னடா தோன்றது."

"நீ சின்ன வயசுலயே அப்பாவை இழந்துட்ட."

"யெஸ். யூ ஆர் கரெக்ட்."

"ரொம்ப சிரமப்பட்டு அங்க இங்க அவமானப்பட்டு மேல வந்திருக்க."

"ஆமாண்டா. ரொம்ப அவமானப் பட்டிருக்கேன்."

சொத்தையின் குரல் நடுங்கிற்று.

"உன் கல்யாணம்கூட ஏனோதானோன்னு தான் நடந்திருக்கணும்."

"ஆமாம். அந்தக் குறை எனக்கு உண்டு."

"நீ தாலியை கட்டுடா அப்படின்னு அதட்ட, நீ பயந்து போய் பொண்ணு முகத்தை பார்க்காம தாலியை கட்டியிருக்க."

"ஆமாண்டா. அப்படித்தான் நடந்தது."

"பி.காம். முடிச்சுட்டு மூணு வருஷம் வேலையில்லாம இருந்த."

"இல்லைடா. இந்தக் கம்பெனியில ஒரு சின்ன வேலை செய்துண்டிருந்தேன்."

"அதெல்லாம் வேலையா. அதை செய்யறதுக்கு செய்யாமலேயே இருக்கலாம்."

ராஜாராமன் உரத்த குரலில் அதட்டலாய்ச் சொல்ல, சொத்தை வாய் பொத்திக் கொண்டது.

"ஆமாண்டா வேலை செய்தாலும் அது வேலை இல்லாதது போலதான்."

டா போட்டு பேசுவது ராஜாராமனை உறுத்தியது. அதை எப்படியாவது மாற்றியாக வேண்டுமே. அதைச் சொல்லாமல் அவனிடமிருந்து கிள்ளி எறிய வேண்டுமே. அவன் தீவிரமாய் யோசித்தான்.

"ஒண்ணுலேர்ந்து ஒன்பதுக்குள்ள ஒரு நம்பரைச் சொல்லு."

"ஏழு."

ஒரு ஷார்ட் ஹேண்ட் நோட் புத்தகத்தில் அவன் ஒவ்வொரு பக்கத்திலும் ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு என்று பக்கத்திற்கொன்றாக எழுதியிருந்தான்.

"அடிசக்கை, இந்த ராஜாராமன் ஜோசியம் தப்பாப் போகுமா." என்று சொல்லிக் கொண்டே வேகமாக சொத்தைக்குத் தெரியாமல் ஷார்ட் ஹேண்ட் பேப்பரை நகர்த்திப் பார்த்து சட்டென்று ஏழாம் நம்பர் வந்தவுடன் விரல் விட்டு புரட்டினான்.

"நீ சொன்ன நம்பர் இந்த நோட் புக்ல இருக்கு. நான் எழுதினேனா. எங்கிட்ட பென்சில் இருக்கா.

எதுவுமில்லை. ஆனா, நீ சொன்ன நம்பர் நான் எழுதிட்டேன். ஏற்கனவே, பார்."

எடுத்துப் பிரித்துப் போட்டான். ஏழு என்று இருந்தது.

சொத்தை அதிர்ந்து போய் அவனைப் பார்த்தான்.

"எப்படிடா அது."

"இப்போது அதுவா முக்கியம். எனக்கு எப்படி இந்த சக்தி இருக்குன்றதா முக்கியம். உனக்கு என்ன வேணும். அதைக் கேளு."

"உன்னை எப்படி கேட்கறது ராஜாராமா."

சொத்தை கிட்டத்தட்ட அழும் நிலையில் இருந்தான். ஆனால், எந்த முகபாவமும் காட்டாது ராஜாராமன் உர்ரென்று உட்கார்ந்திருந்தான்.

"எனக்கு.. எனக்கு."

சொத்தை திணறிற்று.

"போதும் நிறுத்து."

ராஜாராமன் கட்டளையிட்டான்.

"உனக்கு குழந்தைப்பேறு இல்லை. ஒரு குழந்தை வேணும்னு ஆசை இருக்கு. உன் பொண்டாட்டி உன்னை கன்னாபின்னான்னு திட்டறா. சரியா."

"ஆமாம் ராஜாராம்.. ஆமாம்."

'டா' மறைந்தது.

ராஜாராமனுக்கு திருப்தியாக இருந்தது. ஆனாலும், போதவில்லை. இன்னும் மதிக்கப்பட வேணடும் என்று விரும்பினான்.

"நாளைக்கு வரும்போது ஒரு கிலோ வெண்ணெய் வாங்கிண்டு வா. நான் என் ரூம்ல வச்சு மந்திரம் ஜபிச்சு அந்த வெண்ணெயில என் சக்தியை இறக்கி கொண்டு வந்து தரேன். அதைக் கொண்டு போய் தினம் ஒரு நெல்லிக்காய் உருண்டை வாயில போட்டுக்கோ. அஸ்வகந்தான்னு ஒரு மாத்திரை இருக்கு. அர்ஜுனான்னு ஒரு மாத்திரை இருக்கு. இதை ரெண்டும் வாங்கி சாப்பிடு. நெல்லிமுள்ளின்னு மருந்துக் கடையில கிடைக்கும். அதை ராத்திரி தண்ணியில போட்டு கார்த்தால டிகாஷன் மாதிரி வரதை வெறும் வயித்துல குடி. உனக்கு குழந்தை பாக்கியம் உண்டு. நிச்சயம் குழந்தை பிறக்கும்."

"ராஜாராம்.."

"இது சத்தியம்."

உரத்த குரலில் கை உயர்த்தி ராஜாராமன் சொன்னான்.

சொத்தை திடுக்கிட்டு எழுந்தது. கைகூப்பியது. "ராஜாராம்" என்று குழறியது.

"நோ.. அப்படிக் கூப்பிடாத."

"வேற எப்படிக் கூப்பிடணும்."

"ஸ்வாமி. என்னுடைய உண்மையான பேர் ஸ்வாமி. ராஜாராம் இல்ல. அது ஆபீஸுக்கு உண்டான பெயர்."

"சரி. அப்படியே கூப்பிடறேன். ஸ்வாமி. எப்படி நான் சொல்றதுன்னே தெரியலை."

"உனக்கு குழந்தை பிறக்கும். அப்போ அந்தக் குழந்தைக்கு, ஆண் குழந்தையா இருந்தா என்ன பேர் வைப்ப."

"ராஜாராமன்னு வச்சுடட்டுமா."

"இல்லை. ஸ்வாமின்னு வை. பொண் குழந்தையா இருந்தா சிவகாமி. அதாவது காமாட்சின்னு வை."

"சரி. உங்க உத்தரவு."

அடேய் என்பது உங்க என்று உயர்திணையாய் மாறி ராஜாராமனை சந்தோஷப்படுத்தியது.

"தயவுசெய்து இந்த விஷயத்தை யார்கிட்டேயும் சொல்லாத. இது உனக்கு மட்டும் நான் கொடுக்கிற ஆசீர்வாதம். புரிஞ்சுக்கோ."

சொத்தை பலமாகத் தலையாட்டியது. கை கட்டியபடியே ராஜாராமனின் அலுவலக வாசல்வரை வந்தது.

முதல் வேலையாய் அவன் நாற்காலிக்கு அடுத்த நாற்காலியில் நிற்பவரிடம் இந்த விஷயத்தைச் சொல்லியது.

ராஜாராமனுக்குத் தெரியும், சொத்தை சொல்லுமென்று. சொல்வதால்தானே அது சொத்தை. ராஜாராமன் வெற்றிச்சிரிப்பு சிரித்தான். மெல்ல மெல்ல அவனுடைய புகழ் அந்த அலுவலகத்தில் ரகசியமாய் பூமிக்கடியே நெளிந்து நெளிந்து நகரும் மண்புழுவாய் பரவியது. எல்லார் வாயிலும் நெளிந்தது.

"கட்டை விரலை பார்த்துட்டு நட்சத்திரம் சொல்றான்ப்பா. எப்படின்னே தெரியலை. ஆறுபேருக்கு பார்த்தான். அஞ்சு பேருக்கு சரியா இருந்தது. நம்ம அக்கௌண்டண்ட்டுக்கு மட்டும் சரியா சொல்லலை. நட்சத்திரம் தப்பா சொல்லிட்டான். நீங்க சொன்ன நட்சத்திரம் தப்புன்னு சொல்லிட்டார். உங்க டேட் ஆஃப் பர்த் சொல்லுங்கோன்னான். அவர் டேட் ஆஃப் பர்த் சொன்னார். இதுவா உங்க டேட் ஆஃப் பர்த் அப்படின்னு கேட்டான். அவன் உத்து பார்த்து

கேட்டவுடனே அவர் கொஞ்சம் ஆடிப் போயிட்டார். சர்டிஃபிகேட்ல வேற, நிஜமா வேற அப்படின்னார். சர்டிஃபிகேட் டேட் ஆஃப் பர்த் என்ன அப்படின்னு கேட்டான். அவர் சொன்னார். அடாடா.. அப்படியானா இதுக்கு நட்சத்திரம் இதுவாதான் இருக்கும் அப்படின்னான். ஆனா, அவருக்கு சொன்ன பலன்கள் எல்லாம் கரெக்டா இருந்தது. இவரு இங்க வேலைக்கு சேர்ந்த அன்னிக்கு ஏதாவது துரதிர்ஷ்டமான சம்பவம் நடந்ததான்னு அக்கௌண்டர்கிட்ட கேட்டான். அக்கௌண்ட்ண்ட் பேசாம இருந்தாரு. யாரோ செத்துப் போயிருக்கணும் அப்படின்னான். ஆமா, எங்க மாமனார் செத்துப் போயிட்டார். வந்து ஒரு மணி நேரம் வேலை செய்துட்டு திரும்பிப் போயிட்டேன் அப்படின்னார். எப்படிடா சொல்ற அப்படின்னு கேட்டேன். அவர் உடம்புலேர்ந்து அதிர்வு வருதாம். அது சொல்றதாம். நம்பற மாதிரியும் இருக்கு. நம்பாத மாதிரியும் இருக்கு."

அலுவலகத்தில் பேசிக் கொண்டார்கள்.

"இல்லைப்பா.. அவன் ஆஞ்சநேயர் உபாசனை பண்றான். அவனால சொல்ல முடியும்."

சொத்தை அவனுக்கு பரிந்து கொண்டு வந்தது.

குழந்தை பிறக்குமென்ற நம்பிக்கையினாலோ அல்லது தினமும் வெறும் வயிற்றில் நெல்லி முள்ளியும், வெண்ணெயும் சாப்பிடுவதினாலோ அல்லது அஸ்வகந்தா, அர்ஜுனா என்ற மாத்திரைகளினாலோ அவனுக்கு உடம்பில் வீர்யம் கூடியிருந்தது. அவன் மனைவி சந்தோஷமாக அவனை ஏற்றுக் கொண்டிருந்தாள். வெண்ணெய் சாப்பிடுங்கள். வெண்ணெய் சாப்பிடுங்கள் என்று பலபேரிடம் உபதேசித்தான்.

ஆபீஸ் வேதனையோடு சிரித்தது.

இந்த மாதிரி பேச்சுக்களாலேயே ராஜாராமனின் புகழ் அலுவலகமும், அலுவலகம் தாண்டியும் பரவியது.

"நீதான் எல்லாருக்கும் ஜோசியம் சொல்றியே எனக்கும் சொல்லேன்."

ராஜாராமனின் அதிகாரி கேட்டார்.

"இல்லை ஸார். சொல்லக்கூடாது."

"ஏன்."

"நீங்க எனக்கு அதிகாரி. நான் சொன்னாலும் தப்பு. சொல்லாது போனாலும் தப்புன்னு இருக்கும். அதனால நான் ஜோசியம் சொல்வன்றதையே மறந்துட்டு

உங்களுடைய வேலைக்காரனாவே நினைச்சுக் கோங்கோ அதான் நல்லது."

அவன் கைகட்டி பணிவாய்ச் சொல்ல, "யூ ஆர் ரைட். நீ எப்போதும் மாதிரியே இரு." என்று சொல்லி விட்டார்.

நீல பேண்ட்டும், வெளிர் நீல சட்டையுமாய் திரிகின்ற அந்த அலுவலகத்தில், கார்த்திகை மாதத்தின் போது ராஜாராமன் மாலை போட்டுக் கொண்டான். மாலை போட்டுக் கொண்டேன் என்று காண்பிப்பதற்காக கழுத்தில் ஒரு கருப்புத்துணி சுற்றிக் கொண்டான். நெற்றியில் சந்தனமிட்டுக் கொண்டான். தாடி வளர்த்தான்.

"என்னப்பா.."

"மலைக்கு போறேன் ஸார்."

வழக்கமான குரலில் அதிகாரியிடம் சொன்னான்.

"எனக்கும் வேண்டிண்டு வாப்பா. இந்தா வச்சுக்கோ."

நூறு ரூபாய் கொடுத்தார்.

"என்ன ஸார் வேண்டிக்கணும்."

கட்டிய கையை பிரிக்காமல் கேட்டான்.

"என் புள்ள சரியா படிக்க மாட்டேன்றான் ராஜாராமா. என்ன பண்ணா படிப்பான்னு தெரியலை."

"அவன் ஜாதகத்தை எங்கிட்ட கொடுங்க ஸார். நான் மலையில கொண்டு போய் ஸ்வாமி முன்னாடி வச்சு எடுத்துகிட்டு வரேன்."

"யோவ் ஆள் போறதே கஷ்டம். ஜாதகத்தை கொண்டு போய் சாமி முன்னாடி வச்சுடுவியா."

"வைக்காம வரமாட்டேன் ஸார். ஜாதகத்த சன்னதில வச்சுட்டுத்தான் வருவேன் ஸார்."

"தூக்கி போட்டுட்டாங்கன்னா."

"என்னை தூக்கிப் போட முடியாது ஸார். அந்த ஆஞ்சநேயர் என்னை பார்த்துப்பார்."

அவன் உரக்கக் கத்தினான். அவர் மிரண்டார்.

அவன் வாய் முழுவதும் காற்று வைத்துக் கொண்டு உப்பென்று வைத்துக் கொண்டு விழி விரிய அவரைப் பார்த்தான். அவர் அதிகம் மிரட்சியாக அவனையே பார்த்துக் கொண்டிருந்தார்.

சட்டென்று பென்சிலை வைத்துவிட்டு இரண்டு முறை ராஜாராமன் அதிகாரி முன்பு குட்டிக்கரணம் அடித்தான். தையா தையா தை என்று குதித்தான். ராம் ராம் என்று இன்னொரு நாற்காலி மீது தாவி

உட்கார்ந்தான்.

அதிகாரிக்கு வயிறு கலக்கிக் கொண்டு வந்தது. பெல்ட்டை இறுக்கப் பிடித்தபடியே எழுந்து நின்று ராஜாராமனை வெலவெலப்போடு பார்த்தார்.

"துளசி மாலை போடு.. துளசி மாலை போடு.. பையனுக்கு துளசி மாலை போடு."

ராஜாராமன் அதட்டலாய்ச் சொல்ல, பிடித்த பெல்ட்டை இன்னும் இறுக்கப் பிடித்து, சரி என்று தலையசைத்தார். ராஜாராமன் தொப்பென்று சேர் மேலிருந்து கீழே விழுந்தான். மெல்ல எழுந்து நின்றான். அவர் காலில் சாஷ்டாங்கமாக விழுந்தான்.

"நான் பண்ணலை. இது எதுவும் நான் பண்ணலை. என்னை தப்பா நினைச்சுக்காதீங்கோ. மன்னிச்சுடுங்கோ."

கை கூப்பினான். அவன் கண்ணிலிருந்து கண்ணீர் வழிந்தது.

"சே.. சே.. எனக்குத் தெரியுது ராஜாராமா. இதை நீ பண்ணலை. உனக்குள்ள ஒரு சக்தி புகுந்து உன்னை ஆட்டமா ஆட்டறது. பயந்தே போயிட்டேண்டா. வயிரே கலங்கிப் போயிடுத்து. சித்த இரு. போய் ரெஸ்ட் எடுத்துக்கோ."

அவர் டாய்லெட் பக்கம் விரைந்தார். மனசிலிருந்த பயம் மொத்தமும் டாய்லெட்டில் பீறிட்டு வந்தது. அவர் பெருமூச்சு விட்டபடி வெளியே வந்தார். அலுவலகத்திலுள்ள குமாஸ்தாக்களிடம் "என்னய்யா.. அவருக்கு சாமி வந்துடுத்து." என்று பதட்டமாகச் சொன்னார்.

"நான் அப்பவே சொன்னேன் ஸார். அவன் ஆஞ்சநேயர் உபாசகன். அவனுக்கு சாமி வரும்னு. இவங்க நம்பவேயில்லை. இப்பவாவது நம்பறீங்களாடா."

சொத்தை உரக்கக் கத்தியது.

ஒவ்வொரு குமாஸ்தாவும் அவன் தங்களுக்குச் சொன்ன ஜோசியத்தை, சொன்ன பரிகாரத்தை, பரிகாரங்கள் பலித்ததை விலாவரியாக சற்று கூடவே அலங்காரத்தோடு அந்த அலுவலக அதிகாரியிடம் தெரிவித்தார்கள்.

அவர் இன்னொரு முறை டாய்லெட் போய் வந்தார். தனது மேலதிகாரியிடம் இதுபற்றித் தெரிவித்தார்.

"அப்படியா, குறியா சொல்றான்."

அவன் விஷயம் மேலதிகாரியிடம் போயிருப்பதைப்

பார்த்து டக்கென்று மேலதிகாரியின் பைலைத் தேடினான்.

இதைப் பார்க்க வேண்டுமெனில் சங்கேத வார்த்தையைச் சொல் என்று கம்ப்யூட்டர் திருப்பிச் சொல்லியது.

ஆஞ்சநேயா.. ஆஞ்சநேயா.. என்ன சங்கேத வார்த்தை தெரியவில்லையே.

அதிகாரியின் கம்ப்யூட்டருக்குப் போய் அங்கேயும் மேலதிகாரியின் ஃபைலைத் தேடினான்.

கம்ப்யூட்டரில் சங்கேத வார்த்தை வந்தது. உடனே அந்தக் கம்ப்யூட்டரை அணைத்து விட்டு தன் கம்ப்யூட்டருக்கு வந்து, அந்த சங்கேத வார்த்தையைப் போட, பளிச்சென்று மேலதிகாரியின் பர்சனல் ஃபைல் விரிந்தது.

ஹா.. வரமாசம். அறுவதுக்கு அறுவதா உனக்கு. சபாஷ். பொண்டாட்டி பேரு ருக்மணிதேவி. உன் நட்சத்திரம் உத்திரட்டாதின்னு சொல்லியிருக்கியே. பிறந்த தேதிக்கு உத்திரட்டாதி வருதா. அட.. வருது. ராத்திரி பத்துலேர்ந்து உத்திரட்டாதி நட்சத்திரம். அப்போ நீ ராத்திரி வேலையில பிறந்திருக்கியா. பதினோரு மணின்னு வச்சுப்போமா. நீ பிறந்தது இத்தனாம் தேதி, இந்த மணி. ஊர் மன்னார்குடி.

அவன் வேகமாக கம்ப்யூட்டரில் வேலை செய்ய, அவர் ஜாதகம் விரிந்தது. விரிந்த அவர் ஜாதகத்தை அவன் உற்றுப் பார்த்து மனதுக்குள் குறித்துக் கொண்டான். மகர லக்னம். மூன்றில் சுக்கிரன், சனி, ராகு. அந்த ஜாதகத்தை மனப்பாடம் செய்தான். சூரிய மகாதசை இருப்பு என்ன என்று கவனித்தான். அவருடைய மற்ற விவரங்களை அணைத்துவிட்டு, ஃபைல்களை அடுக்கிக் கொண்டிருந்தான். அதிகாரி அவனுக்கருகே வந்து "உன்னை பெரியவர் கூப்பிடறார்." என்று சொல்ல, "எந்த பெரியவர்" என்று அப்பாவியாய் கேட்டான்.

"நம்மவர்ரா பார்த்து பேசிட்டு வா."

"என்னை ஏன் ஸார் அங்க அனுப்பறேள்."

"உன்னைப்பத்தி சொன்னேன். உடனே பார்க்கணும்னார்."

"ஸார். தயவு செய்து நீங்ககூட வாங்கோ. என்னை அவர்கிட்ட தனியா அனுப்பாதீங்கோ. அவரைப் பார்த்தாலே எனக்கு பேச்சு ஓடாது."

அவன் அரண்டதுபோல் நடித்தான். அவனால்

நன்றாக நடிக்க முடிந்தது.

"சரி, நானும் வரேன். அவர் போன்னா போயிடுவேன்." என்று சொல்ல, சரி ஸார் என்று தலையசைத்தான்.

அவர்கள் இரண்டுபேரும் அறைக்குள் நுழைந்தார்கள். அவன் கிட்டத்தட்ட முதுகு வளைத்து கையைக் கட்டி குனிந்து நின்றான். கிட்டவா என்று சொன்னதும் இன்னும் அருகே போனான். காலில் விழுந்து நமஸ்கரித்தான்.

"வேண்டாம்.. வேண்டாம். ஆஞ்சநேய பூஜையெல்லாம் பண்ற. என்னத்துக்கு என் கால்ல விழுந்து நமஸ்காரம் பண்ற."

"ஸார். எதுக்கு கூப்பிட்டேள்."

அவன் கையைப் பிரிக்கவேயில்லை/

"இதான் என் ஜாதகம்."

டேபிள் மீது ஒரு நோட்டுப் புத்தகத்தை போட்டார்.

அவன் அதன் மேற்புறம் உற்றுப் பார்த்துவிட்டு முகம் திருப்பிக் கொண்டான்.

"ஏன்."

"நீங்க டேட் ஆஃப் பர்த் சொல்லுங்கோ. நான் ஜாதகம் போட்டுக்கறேன். யாரோ போட்ட ஜாதகம் எனக்கு வேண்டாம்." அவன் தெள்ளத்தெளிவாய் சகல விஷயமும் தெரிந்ததுபோல பேசினான். அவர் தேதியும், நேரமும் ஊரும் சொன்னார். அவர் எதிரே உட்கார்ந்தான். கண் மூடினான். கிடுகிடுவென்று விரல்கள் விட்டு எண்ணினான். கட்டங்கள் போட்டான். மகர லக்னம் என்று எழுதினான்.

அவர் ஆச்சரியத்தோடு அவனைப் பார்த்தார்.

லக்னம் மகரமாக இருந்தால், குரு இந்த இடத்தில்தான் இருப்பார். அவன் மறுபடியும் கணக்கை எண்ணிப்போட்டு குருவை எழுதினான். பிறகு சனி, ராகு, சுக்கிரன் என்று எழுதினான். பிறகு மற்ற கிரகங்களைப் போட்டான். சூரிய மகாதசை இருப்பு ஒரு வருடம், ஆறு மாதம், இரண்டு நாள் என்று எழுதினான்.

"சபாஷ். அற்புதமா போட்டிருக்கியே. எப்படிடா இது."

"ஏதோ பகவான் போட்ட பிச்சை. பெரியவா பண்ண ஆசீர்வாதம்."

"இவ்ளோ நன்னா ஜோசியம் தெரியுமா உனக்கு."

"நான் போர்டு போட்டா ஒரு நாளைக்கு ரெண்டாயிரம் ரூபா சம்பாதிப்பேன். ஆனா,

போடக்கூடாதுன்னு உத்தரவு."

"யார் உத்தரவு."

"யார் இதை கத்துக் கொடுத்தாரோ அவாளோட உத்தரவு."

"யார் கத்துக் கொடுத்தா."

"என் தோப்பனார்."

"சரி. ஜாதகம் சொல்லு."

"வர மாசம் அறுவதுக்கு அறுவது."

"ஆமாம்."

"உங்காத்து மாமிக்கு உடம்பு பருத்தும், யூட்ரஸ் ப்ராப்ளம் வரும் அல்லது வந்திருக்கணும்."

"வந்துடுத்துடா."

"அறுவதுக்கு அறுவது ஒழுங்கா நடத்தணும்னா நீங்க சிலது பண்ணணும்."

"என்னது."

"தினம் அரைகிலோ வெண்ணெய். ஆஞ்சநேயருக்கு சார்த்தணும்."

"எந்த ஆஞ்சநேயருக்கு."

"அது உங்க இஷ்டம்."

"எங்க வீட்டுக்குக்கிட்ட..."

"நோ. மாமிக்கு தெரியப்படாது. நம்ம ஆபீஸுக்கு கிட்டக்கயே ஒரு விஷ்ணு கோயில் இருக்கு. அங்க ஒரு ஆஞ்சநேயர் இருக்கார். அங்க தினம் கார்த்தால சார்த்திட்டு ஆபீஸுக்கு வாங்கோ."

"சார்த்தினா என்ன ஆகும்."

"அறுவதுக்கு அறுவது நடக்கும்."

"சார்த்தலேன்னா."

"தகராறு."

"சார்த்திடறேன்ப்பா."

அவர் கைகூப்பிச் சொன்னார்.

"ராஜாராம் மறுபடியும் ஒரு கேள்வி இருக்கே."

"இது மேஜரான ப்ராப்ளம் ஸார். இது முடியட்டும். இதுக்கப்புறம் மத்த விஷயங்கள் பார்த்துடலாம்."

"சரிப்பா."

"இதை யார்கிட்டயும் சொல்லாதப்பா."

"என்னை குத்தி கூறுபோட்டாக்கூட ஒரு வார்த்தை வெளிய வராது."

அவன் கதவு திறந்து வெளியே வந்தான். நின்று யோசிப்பது போல் பார்த்தான்.

அலுவலகத்திலிருந்த அத்தனை பேரும் அவன் மேலதிகாரி அறையிலிருந்து வெளியே வருவதைப்

பார்த்தார்கள். வாசலில் நின்று யோசிப்பதைப் பார்த்தார்கள். சட்டென்று அவன் கதவைத் தட்டிவிட்டு உள்ளே போனான்.

"என்னப்பா."

"முதல் மூணு நாள் அந்த ஆஞ்சநேயர் கோயிலுக்கு வெண்ணெய் சாத்தறபோது நானும் கூட வரேன்."

"ஆஹா.. ரொம்ப சந்தோஷம்."

அதிகாரி கைகூப்பினார்.

அவன் அதிகாரியின் அறைக்குள் போவதும், வெளியே வருவதும், மறுபடியும் உள்ளே போவதும் வெளியே வருவதுமாய் இருப்பதை அலுவலகம் பார்த்தது. அவன் மதிப்பு இன்னும் உயர்ந்தது.

"ஆஞ்சநேயர் சன்னதியில யார் இருக்கா."

"நரசிம்மன்தான்."

அவன் தொலைவிலிருந்து நரசிம்மன் என்பவனை பார்த்தான்.

என்னத்த ராமர். என்னத்த ஆஞ்சநேயர் என்று வாழ்க்கை முழுவதும் அலுப்பாக நோக்கும் ஆளாகவே அவனுக்குத் தெரிந்தான்.

"நரசிம்மா சௌக்கியமா இருக்கியா." போய் தோளில் கை வைத்தான்.

நரசிம்மன் திடுக்கிட்டு யார் என்று கேட்க, "நான் ஒரு ஆஞ்சநேய உபாசகன். இந்த கம்பெனியில வேலை செய்யறேன்."

"வாங்கோ.. வாங்கோ."

அவன் சன்னதிக்கு அழைத்துப் போனான்.

"என்னப் பண்ணப்போற."

"கற்பூர ஆரத்தி."

"அதெல்லாம் இருக்கட்டும். நான் சொல்றபடி கேட்டேள்னாக்க அரைகிலோ வெண்ணெயும் பத்துரூபா காசும் வரும்."

"சொல்லுங்கோண்ணா."

நரசிம்மன் கைகூப்பினான்.

"ஆஞ்சநேயர் கையில நிறைய நல்லெண்ணையை தடவி வச்சுடு. இங்க விளக்கேத்தி கர்ப்பக்கிரஹத்தை சூடாக்கி வை."

"எதுக்கண்ணா."

"ஆஞ்சநேயர் மேல வெண்ணெய் சாத்தினவுடனே கீழ நழுவி விழணும். விழுந்தா உனக்கு நல்லது."

"விழ வச்சுடறேன்."

"வெண்ணெய் சாத்தினவர் கொஞ்ச நேரம் கண்ணை மூடிண்டு நிப்பார். அப்போ வழிச்சு எறிஞ்சுடு."

"சரிண்ணா. சொல்றபடியே செய்துடறேன்."

மறுநாள் வெண்ணெய் சாற்ற, வெண்ணெய் நின்றது. அப்பாடா என்று மேலதிகாரி கண்ணை மூடிக்கொள்ள நரசிம்மன் சட்டென்று வெண்ணெயை வழித்து கீழே வீசினான்.

"இல்லை ஸார். இதுவும் நிக்கலை. நழுவிடுத்து."

துக்கம் கலந்த குரலில் ராஜாராமன் பேச, மேலதிகாரி கலங்கிப் போனார்.

"என்ன பண்றது. அந்த பட்டருக்கு பத்து ரூபா கொடுங்கோ."

"எதுக்கு."

"எதுவோ பிதுர்ப்ரீதி பண்ணாமவிட்டு போயிருக்கு. அதனால ஆஞ்சநேயர் எடுத்துக்க மாட்டேன்றார். இப்படிப்பட்டவனுக்கு காசு கொடுத்தா பித்ருக்களுக்கு ப்ரீதி உண்டாகும்."

கற்பூரத்தட்டில் பத்து ரூபாய் போடப்பட்டது. நரசிம்மன் காவிப்பல் தெரிய சிரித்தான்.

"நாளைக்கு கொஞ்சம் அரிசி மாவை கையில தேய்ச்சு வை. வெண்ணெய் நிக்கட்டும்."

"சரிண்ணா.. நீங்க சொல்றபடி செஞ்சுடறேன்."

மறுநாள் வெண்ணெய் நின்றது.

மேலதிகாரி பரவசமானார்.

"எப்படின்னு தெரியலையே."

"உங்களுக்காக நேத்து ராத்திரி முழுக்க தூங்காம ஆஞ்சநேய ஜபம் பண்ணேன் ஸார். அதான்."

"ரொம்ப நன்றி ராஜாராமா. ரொம்ப நன்றி."

கட்டிக் கொண்டார். அவரோடு காரில் வந்து ராஜாராமன் இறங்குவதைப் பார்த்து அலுவலகத்தில் உள்ளவர்கள் திகைத்துப் போனார்கள். அந்த செய்தி அலுவலகம் முழுவதும் பரவியது. ராஜாராமன் வந்தால் அதிகாரிகள்கூட எழுந்து நின்றார்கள். வணக்கம் சொன்னார்கள்.

"இப்போ நான் என்ன தரது."

"அன்பு ஒண்ணே போறும் ஸார்."

ராஜாராமன் கைகூப்பினான்.

"அறுவதுக்கு அறுவது கூப்பிடுவேளோன்னோ."

"கூப்பிடறேன்ப்பா.. ஆபீஸ்ல ஒரு பத்துப் பதினஞ்சு பேராவது கூப்பிடணும்."

"என்னை மறந்துடாதீங்கோ ஸார். அப்போ ஏதாவது கொடுங்கோ." என்று மெல்லியதாய் ஒரு விஷயத்தை அவர் நெஞ்சுள் ராஜாராமன் சொருகி வைத்தான். மயில்கண் வேட்டியும், மேல் அங்க வஸ்திரமும், நூத்தியொரு ரூபாய் காசும் அவனுக்கு அறுவதுக்கு அறுபதில் தரப்பட்டன. மற்ற அதிகாரிகள் அவனைப் பார்த்து பல் தெரிய சிரித்தார்கள். மிகப்பெரிய மரியாதை என்று வியந்தார்கள். எல்லாரும் அவனைக் கண்டு பயந்து நடுங்கினர். காலில் விழுந்து நமஸ்கரிக்கின்ற ஒரு பட்டாளம் அலுவலகத்தில் உருவாயிற்று.

"எங்க ஆபீஸ்ல ராஜாராமன்னு ஒருத்தன் இருக்கான். பிரமாதமா ஜோசியம் சொல்லுவான். ஆபீஸ்லெல்லாம் அவனை கட்டித் தழுவிண்டு கொஞ்சிண்டிருக்கா. ஆஞ்சநேய உபாசகன். கார்த்தால ஆபீஸ் வந்துடறான். ராத்திரி முழுக்க ஆஞ்சநேய ஜபம்தான் பண்ணிண்டிருக்கான்."

அவன் புகழ் அலுவலகம் தாண்டியும் வெளியே பரவியது. தெருவோடு போகிறபோது வாசற்படியில் உட்கார்ந்திருந்த பெண்கள் எழுந்து நின்றார்கள். சிலர் ஒதுங்கிப் போனார்கள். அற்புதமான மரியாதை தரப்படுவதை ராஜாராமன் உணர்ந்தான். முற்பகல், பிற்பகல் நேரம் வம்பு பேசுகிற பெண்கள் ராஜாராமனைப் பற்றியும் வம்பு பேசினார்கள்.

"ஹனுமார் உபாசகன்னா சும்மாவா. அது ரொம்ப கஷ்டம்."

ஹனுமார் பற்றியும் எதுவும் தெரியாது. உபாசனை பற்றியும் எதுவும் தெரியாத ஒரு பெண்மணி எல்லாம் தெரிந்ததுபோல் பேசினார்.

ஒரு மதத்தின் அவல நிலைமை ஒன்றுமே தெரியாமல் எல்லாம் தெரிந்ததுபோல் பேசுகிறவர்கள் தான். ஒரு மொழியின் அவலம் அதைத் அதிகம் கொச்சையாய் பயன்படுத்துகிறவர்களால் நடை பெறுகிறது போல, ஒரு மதத்தின் அவலம் அந்த அறிவிலிகளால் நடைபெறுகிறது. இவர்களால் உலகத்தின் சகல நாகரீகமும் க்ஷீணமடையும். தெருவில் கிடைக்கும் மரியாதை ராஜாராமனை புளகாங்கிதமடைய வைத்தது. இங்கேயும் கடை போடலாம் போல் இருக்கிறதே என்று யோசிக்க வைத்தது.

பிறந்த நாள், இதர சந்தோஷ வைபோகங்களுக்கு சம்பிரதாயப்படியான பஜனைப் பாடல்கள் பாடப்படும்

என்று ஒரு விளம்பரம் தரப்பட்டு, கீழே ராஜகோபால சர்மா என்று பெயர் போடப்பட்டு, தொலைபேசி எண்ணும் தரப்பட்டிருந்தது.

ராஜாராமன் தொடர்பு கொண்டான்.

ராஜகோபால சர்மாவை நேரே போய் பார்த்தான். தன்னை ஸ்வாமி ராஜாராம் என்று சொல்லிக் கொண்டான்.

அலுவலகத்தில் வேலை போய்விட்டதால் ராஜகோபால சர்மா இதுவே அலுவலமாக வைத்துக் கொள்ளலாமா என்று யோசனை பண்ணியிருந்தார். இப்படி ஒருவர் வந்ததும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார். வீட்டிற்கு வந்து பாடவேண்டும் என்று அவன் கேட்க, அன்று என்ன விசேஷம் என்று பவ்யமாக ராஜகோபால சர்மா கேட்டார்.

ராஜாராமன் கம்பீரமாகச் சிரித்தான்.

"பிறந்த நாளா." என்று மறுபடியும் ராஜகோபால சர்மா கேட்க, "அப்படித்தான் வச்சுக்கோங்களேன், நான் மறுபடியும் பிறந்த நாள்."

"புரியலையே. அன்னிக்குத்தான் எனக்கு தீட்சை ஆச்சு." என்றான்.

"அடாடா.. அது பெரிய விசேஷமில்லையா. நான் வந்துடறேன் ஸ்வாமி."

அவர் கைகூப்பினார். அவர் கேட்டதில் பாதி தொகையை அட்வான்ஸாக நீட்ட, அவர் குதூகலமானார்.

துளசிமாலை, ஸ்படிகமாலை, நவரத்னமாலை என்று பலதும் கழுத்தில் எடுத்து ராஜாராமன் மாட்டிக் கொண்டான்.

பஜனைப்பாடல்கள் சத்தமாகப் பாடப்பட, அக்கம் பக்கம் இருப்பவர்கள் வந்து சேர்ந்தார்கள். வாசற்படிக்கு நேரே ஒரு சுவரோரம் கம்பீரமாக ராஜாராமன் உட்கார்ந்திருந்தான். பலமணி நேரம் பாடல்களுக்குப் பிறகு பொங்கலும், சர்க்கரைப் பொங்கலும் நிவேதனம் செய்யப்பட்டது.

"என் பங்குக்கு நான் ஏதாவது தரேனே."

யாரோ பாக்கெட்டில் கைவிட்டு காசு எடுத்தபோது அவன் வேண்டுமென்றே மறுத்துவிட்டான்.

"எங்கிட்ட இருக்கு ஸார். இல்லைன்னா கேட்கறேன்." என்று கைகூப்பி பவ்யமாக விலக்கி விட்டான்.

இதுவும் அவன் மரியாதையை அதிகப்படுத்தியது.

அந்த தெரு அவனை சாமி என்றே கூப்பிட்டது.

அவன் மனைவியின் தாய்க்கு தள்ளாமை. அவன் மனைவி போக விரும்பினாள். ராஜாராமன் தீவிரமாக யோசித்தான்.

"ரெண்டு மாசம், மூணு மாசம்னு ஏன் கஷ்டப்படற. போய் ஒரு வருஷம் இரேன். குழந்தை அஞ்சாவது தானே படிக்கறா. அங்கயே படிக்கட்டுமே. ஒரு வருஷம் முழுக்க உங்கம்மாவோடயே இரேன்." என்று அனுப்பி வைத்தான்.

யோக ஆஞ்சநேயா டிரஸ்ட் என்று ஆரம்பித்தான்.

பசுக்களை பராமரிப்பதும், வேத அந்தணர்களை கௌரவிப்பதும், ஏழைக் குழந்தைகளுக்கு நோட்டுப் புத்தகம், பேனா தருவதும், தமிழ்ச் சான்றோர்களை ஆதரிப்பதும், க்ஷீணமான கோயில்களை பராமரிப்பதும் என்று பத்தொன்பது திட்டங்கள் வைத்திருந்தான். பத்தொன்பதாவது திட்டமாக ஒவ்வொரு வீட்டிலும் ராமர் பட்டாபிஷேகப்படம் இருக்க வேண்டும் என்பதும், யோக ஆஞ்சநேயா டிரஸ்டின் விருப்பமாக இருந்தது.

அலுவலகத்தில் சொத்தைதான் முதன் முதலில் ஆயிரம் ரூபாய் கொடுத்தான். பிறகு மற்றவர்களும் கொடுத்தார்கள். மேலதிகாரி ஐயாயிரம் கொடுத்தார். கிட்டத்தட்ட ஒன்பதாயிரம் ரூபாய் காசு கையில் இருந்தது. இந்தமுறை அவன் தனது வீட்டில் சுதர்சன ஹோமம் செய்தான். எல்லோருக்கும் பிரசாதங்கள் அவன் கைப்பட கொடுத்தான்.

"இந்த ஹோமத்துக்கு முன்னாடி நின்னுண்டு என்ன வேணாலும் வேண்டிக்கோங்கோ. நிச்சயம் நடக்கும்." என்று சொன்னான்.

நடந்தது என்று நாலைந்து பேர் சொன்னார்கள். அதைக் கைப்பட எழுதி வாங்கிக் கொண்டான்.

அலுவலகத்தில் கடன் வாங்கி காசிக்குப் போனான். காசியிலிருந்து ரிஷிகேஷும், பத்ரிநாத், கேதார்நாத்தும் போய் பார்த்து வந்தான்.

எவர் வேண்டுமானாலும் பார்த்து வரக்கூடிய இடங்கள்தான் அவை. ஆனால், எவராலும் செய்ய முடியாததை தான் செய்து வந்ததுபோல ராஜாராமன் பீற்றிக் கொண்டான்.

அவன் எடுத்து வந்த இருபத்தைந்து கற்களும் நல்ல விலைக்குப் போயின. அதை அவன் வியாபாரமாகவே செய்யவில்லை. வந்தவருக்கு அந்தக்கல்லை இவன் தானம் கொடுப்பது போலவும்,

அந்த தானத்திற்கு அவர் காசு தானம் கொடுப்பது போலவும் ஒரு நாடகம் நடந்தது. கொடுப்பதற்கு வேறு கற்கள் இல்லாததால் உள்ளூரிலேயே கிடைக்கும் கூழாங்கற்களை எடுத்து வைத்துக் கொண்டான். கண்டகி நதியில் எடுத்து வந்த கல் என்று விற்றான்.

"எங்களுக்கு ஏதாவது நாலு நல்ல வார்த்தை சொல்லப்படாதா. எங்களுக்கு ஒண்ணுமே தெரிய மாட்டேங்கறது."

அந்த வாயாடியான சில பெண்கள் வம்புக்கு இழுக்க, உபந்நியாசம் செய்ய வேண்டியதின் அவசியம் உணர்ந்தான். புத்தகங்கள் வாங்கிப் படித்தான்.

அலுவலகத்திலேயே முழு நேரமாக அவனால் படிக்க முடிந்தது. ஏன் படிக்கிறாய் என்று அவனை யாரும் கேட்கவில்லை.

ஆறேழு இடத்தில் உபந்நியாசங்கள் செய்து பலத்த கைதட்டல் வாங்கியபிறகு, அவனுக்கு அலுவலகத்தின் மீது ஈடுபாடு குறைந்தது. ஒரு நல்ல நாளில் பதவியை ராஜினாமா செய்தான். பெரிய வீடு பார்த்தான். சமையலுக்கு ஆள் போட்டுக் கொண்டான். மனைவியையும், குழந்தையையும், மாமியாரோடு வரவழைத்தான். உதவிக்கு இளைஞர்களை வைத்துக் கொண்டான். அவர்களுக்கு எல்லாம் கற்றுத் தருவதாகச் சொன்னான்.

மக்கள் தொகை அதிகமான காலம். பட்டணத்தில் வேலைக்கு ஆட்கள் எளிதாகக் கிடைத்தார்கள். கிராமத்திலிருந்து வந்த இளைஞர்கள் சோறு போட்டால் போதும் என்று ஒட்டிக் கொண்டார்கள். எவ்வளவு ஏவினாலும், எத்தனை ஏசினாலும் பொறுத்துக் கொண்டார்கள். தினமும் பஜனைப் பாடல்கள், தினமும் உபந்நியாசம், மாதம் தவறாது ஹோமம் என்று ராஜாராமன் முழுநேர ஆன்மீக வாதியானான்.

மந்திரம் கால் மதி முக்கால் என்பது இந்த ஆன்மீக விஷயத்தில் உறுதியாயிற்று.

பித்தளை தாயத்துகளும், தாமிரத்தில் செய்யப்பட்ட யந்திரங்களும், சிறுசிறு வெங்கலப் பதுமைகளும், முடிச்சிட்ட பட்டுக்கயிறுகளும் நல்ல விலைக்குப் போயின. காசு சேர்ந்தது. உடற்பருமன் அதிகரித்தது. நிறம் கூடியது. பழைய காரொன்று தள்ளுபடி விலைக்குக் கிடைத்தது.

சென்னை நகரத்தின் எல்லையில் ஆறு ஏக்கர் நிலத்தை பெரிய தொகைக்கு கடன் வாங்கி வளைத்துப் போட்டான். வேலி கட்டினான்.

ராமகிரஹம், ராஜா மடம் என்று அதற்குப் பெயர் பலகை எழுதி வைத்தான். செங்கல்லாலும், சுதையாலும் பதினாறடி உயரத்திற்கு ஒரு ஆஞ்ச நேயரை வாசலில் நிற்க வைத்தான். ஆஞ்ச நேயருடைய லட்சணம் பற்றி கவலைப்படாமல், உயரம் பற்றி அக்கறை எடுத்துக் கொண்டான். அந்தப் பக்கம் பேருந்தில் போகிறவர்களை அது என்ன என்று பார்க்க வைத்தது. கைகூப்ப வைத்தது. சில சமயம் சிலர் இறங்கி அது என்ன கோயில், என்ன மடம் என்று விசாரிக்கத் துவங்கினார்கள். வார, மாதாந்திர ஆன்மீகப் பத்திரிகைகளில் இரண்டு, மூன்று மாதங்களாக அவன் முகமும், அவன் மடமும், அவனைப் பற்றிய கட்டுரையும் வெளிவந்தன. அவனும் தனியாகக் காசு கொடுத்து கடைசி பக்கத்தில் தன்னைப்பற்றி விளம்பரம் செய்தான்.

வைக்கோல் போரில் நெருப்பு பிடித்துக் கொண்டது போல அவனைப்பற்றி விளம்பரங்கள் பரபரப்பாய் வெளிவரத்துவங்கின.

"நான் நிச்சயமா ஜெயிப்பேன்." என்று மனைவியிடம் அவன் சூளுரைத்தான். ஆனால் எது வெற்றி என்பது பற்றி அவனுக்கு கேள்வி வரவேயில்லை. இதுதான் வெற்றி. இதுதான் வாழ்க்கை என்று அவன் பயணம் சீராக ஓடிக் கொண்டிருந்தது. அதையே அவன் ஆன்மீகம் என்று நம்பினான்.

அவன் உடம்பில் வலி வரும் வரை, அவன் வாழ்க்கையில் தோல்வி வரும் வரை, அவனுக்கு அவமானங்கள் ஏற்படும் வரை இது வெற்றியாகத்தான் அவனுக்குத் தென்படும். இதுதான் ஆன்மீகம் என்று அவன் வாழ்க்கைப் பாதை இருக்கும். ஆனால், எது ஆன்மீகம். இதுதான் ஆன்மீகம் என்று சொல்வது எளிதாக்கவேயில்லை. எப்படி எழுதினாலும் நிறைவாக இல்லை. எழுத்தும், பேச்சும் தாண்டி ஒரு உணர்வு நிலையை உள்ளடக்கியதுதான் ஆன்மீகம். இதைப் புரிந்து கொள்ளலாமே தவிர, பகிர்ந்து கொள்ள முடியாது. ஆயினும், அடுத்த கட்டுரையில் பகிர்ந்து கொள்ள முயற்சிக்கிறேன். ஆனாலும், இந்த பகிர்தல் ஊமை கண்ட கனவுதான்.

# அது

கடவுள் என்ற விஷயத்தை ஆராயப் போகும் போது ஏற்படுகின்ற விதம்விதமான கற்பனைகளும், அந்த கற்பனைகளின் விளைவாக ஏற்பட்ட உருவ வழிபாடுகளும் அல்லது உருவமற்ற வழிபாடுகளும், பிரார்த்தனைகளும், பிரார்த்தனை செய்யும் முறைகளும், சொல்லும் ஜபங்களும், மந்திரங்களும், பாடும் பாடல்களும், படிக்கும் புத்தகங்களும், பக்தி என்ற விஷயத்தைத்தான் ஏற்படுத்தியதே தவிர, அது பிரம்மத்தை அறியும் நோக்கில் நகரவேயில்லை.

பக்தி என்ற விஷயம், தான் என்ற மமதையைத்தான் கொடுக்கிறது. தன்னுடைய மதம், தன்னுடைய பிரதிமை, தன்னுடைய பூஜை விதிகள் என்று தான் என்ற அகங்காரத்தை அதிகரிக்கச் செய்கிறதே தவிர, அது பிரம்மத்தை அறியும் வழியையோ, அதை அடைவதற்குண்டான எளிமையையோ தரவில்லை. உண்மையில் பக்தி குழு மனப்பான்மையை வளர்க்கிறது. குழு மனப்பான்மையை பலப்படுத்துவதற்காக சடங்கு, சம்பிரதாயங்கள் ஏற்படுகின்றன.

அவர் தொப்பி வைத்து பூஜை செய்வார். இவர் தொப்பியில்லாமல் பூஜை செய்வார். இவர் மீசையோடு தாடி வைத்துக் கொள்வார். அவர் மீசையில்லாமல் தாடி வைத்துக் கொள்வார் என்று பிரிவினைகள்தான் ஏற்பட்டன.

தான், மற்றவர் என்ற பிரிவினை எப்பொழுது ஏற்படுகிறதோ, அப்பொழுது அகங்காரம் மிகப் பலப்பட்டு விட்டது. அது அழிக்க முடியாமல் கிளர்ந்துவிட்டது என்பதே அர்த்தம்.

பக்தி, கடவுள் தேடலுக்கு எதிரகத்தான் இருக்கிறது.

ஆழ்நிலை தியானப் பயிற்சி செய்தலும், தனித்திருத்தலும், மிருதுவானப் பேச்சும், தனிமையான வாழ்க்கையையும் கொண்ட, யோகம் பயில்பவர்களுக்கு கடவுள் தரிசனம் கிடைத்துவிடுமா.

யோகம் பயில்வதில் உடம்பை உற்று உற்று கவனிக்க வேண்டியிருக்கிறது. உடம்பின் அசைவுகளை பார்த்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. மனதின் நகர்வு உடம்போடே கிடக்கிறது. உடம்பு பற்றிய

சிந்தனைகளை அறுப்பதென்பது மிகமிகக் கடினமாக இருக்கிறது. உற்றுக் கவனிக்கிறபோது, தான் என்ற எண்ணத்தின் மையப்பகுதிக்கு போக முடிகிறது.

இதிலிருந்து விடுபடுவது எப்படி.

தானாக விடுபட வேண்டும் என்றுதான் யோகம் சொல்கிறது. நீயாக விடுபட முடியாது. நீ முயற்சி செய்ய, முயற்சி செய்ய விடுபடுதலுக்குப் பதிலாய் இன்னும் இறுக்கப் பிடித்தல்தான் வரும். எனவே, யோக சாஸ்திரத்தில் எப்பொழுது விடுதலை வரும் என்று சொல்வதற்கே இல்லை. கடைசி வரையில் தன்னைக் கவனித்தலே, தன் மூச்சு பார்த்தலே, தன் சுவாசக் குழாயின் அமைப்பைக் கவனித்தலே, தன் மனசு எந்த மையத்தில் சிக்கிக் கொண்டிருக்கிறது என்பதை உற்று நோக்குதலே வாழ்க்கையாகப் போய்விடவும் கூடும்.

விடுதலை எப்போது வருமென்று சொல்ல முடியாது. விடுதலைக்கு முயற்சி பண்ணினால் மேலும் சிறைதான் கிடைக்கும். எனவே, யோக சாஸ்திரம் சரியான வழியல்ல.

தன்னை விசாரித்தல் என்கிற ஞான மார்க்கத்தில் போனால் கடவுள் தேடல் பூர்த்தியாகி விடுமா.

அது விளக்க முடியா வழி. விளங்கிக் கொள்ள முடியா வழி. இங்கு சொல்பவரும், கேட்பவரும் இல்லை.

மூச்சை கவனித்து, அதனால் மூச்சை சீராக்கி, மூச்சை சீராக்குவதற்குண்டான உணவுகளையும், அதற்குண்டான ஒழுக்கங்களையும் பின்பற்றும் ஹடயோகிகள் சொல்வதை ஞான மார்க்கத்தில் உள்ளவர்கள் புறக்கணிப்பார்கள்.

மனதை உற்றுக் கவனித்தால் மூச்சு சீராகும். மூச்சை சீராக்கினால் மனது சரியாகும் என்று சொல்ல முடியாது.

மனதைச் சீராக்கி ஒழுங்குபடுத்தினால், அதை உற்று கவனித்தால், அதன் செயல்பாடுகள் எல்லாவற்றிலும் முழு கவனத்தோடு இருந்தால் மூச்சு தானாக சீராகும். மூச்சு சீராகச் சீராக மனம் பக்குவப்படும் என்பார்கள். மனதை கவனிப்பதே, இடையறாது அதை விசாரிப்பதே, அந்த விசாரத்திற்கே ஞான மார்க்கம் என்று பெயர்.

அந்த இடத்திலும் தான் என்ற அகங்காரம் அல்லது அந்தக் கூர்மையான எண்ணம் போவதில்லை.

எப்போது போகும்.

என்ன விதமான நிலையில் இருக்கிறார்கள். என்னவித நிலைக்கு உயர்ந்திருக்கிறார்கள் என்றெல்லாம் பேசப்படவே முடியாது. அது இன்னொருவரோடு பகிர்ந்து கொள்கின்ற இடத்தில் இல்லை. எனவே, ஞான மார்க்கம் என்பது ஒரு வழியல்ல. ஒரு வெட்டவெளி. நீங்கள்தான் உங்கள் பாதையை ஏற்படுத்தி பயணப்பட வேண்டும்.

ஆனால், இவை மூன்றையும் தாண்டி தான் இல்லாது போவதற்கு உண்டான நிலையை அடைவதற்கு ஒரு வழி இருக்கிறது.

ஏதோ ஒரு சொடுக்கு நேரத்தில் தன்னுடைய மனம் முன்னால் தோன்றி, தோன்றிய க்ஷணமே அழிந்து போகிறது. அதுவே தன்னைக் காட்டினாலொழிய அதைப் புரிந்துகொள்ள முடியாது. அது முயற்சியால் விளைவதன்று. தன்னை முன்னிலைப்படுத்திக் கொண்டு அதுவாகவே கிளர்ந்து இதுதான் நான், இதுதான் என் லட்சணம், இதுதான் எல்லாமும் என்று மகத்தான ஒரு கிளர்வு ஏற்பட, அது கிடைத்த நேரத்திலிருந்து வாழ்வியல் மாறிப்போகிறது. இப்படித்தான் பலர் உணர்ந்து பேசியிருக்கிறார்கள்.

இது மரணம் போலும் ஒரு சம்பவம் அல்லது மரணத்தை ஆழ அனுபவிக்கும்போது ஏற்படுகின்ற மனப்பக்குவம்.

இன்னும் தெளிவாகச் சொல்லுகிறேன்.

ஒருவன் கல்யாணம் செய்ய வேண்டுமென்று ஆசைப்படுகிறான். கல்யாணத்தைப்பற்றி மிக ஆவலாக கற்பனை காணுகிறான். பேண்டு வாத்தியங்கள், வாண வேடிக்கைகள், அழகிய பெண், பணக்கார சுற்றத்தார், கார், பங்களா என்றெல்லாம் மனம் விரிகிறது. அப்படி நகர்ந்து போவதற்கு அவனுக்கு விருப்பமும் இருக்கிறது.

இதேபோல உணவு உண்ணுதல், உடை உடுத்தல் என்பது பற்றிய கற்பனைகளும் மனிதருக்கு இருக்கிறது. உடை உடுத்தல் என்ற அனுபவத்தை ஆழ்ந்து யோசிப்பது போல, உண்பது என்ற அனுபவத்தை விதம்விதமாய் மனதுக்குள் கவனிப்பது போல, மரணம் என்ற அனுபவத்தை நாம் ஏன் கவனிப்பதில்லை. அப்படி மரணம் என்ற அனுபவத்தை வரவழைத்து உற்று கவனிக்கிறபொழுது, அந்த தான் என்பது சில சமயம் குளிர்ந்து இதுதான் லட்சணம் என்று காண்பித்து விடுகிறது.

இது பகவான் ஸ்ரீ ரமணருக்கு ஏற்பட்டது. இது பகவான் ஸ்ரீ ரமணருக்கு மட்டும் ஏற்பட்டதல்ல. பல்வேறு ரிஷிகளும், முனிவர்களும், ஞானிகளும் இந்த ஒரேவிதமான அனுபவத்தை அடைந்து, வெளியே சொல்ல முடியாமல் திணறி மூச்சடைத்து அமர்ந்திருக்கிறார்கள். ஏதாவது சொல்லுங்களேன் என்று ஜனங்கள் கேட்கிறபோது பக்தியையோ, ஹடயோகத்தையோ, ஞான யோகத்தையோ சொல்கிறார்களே தவிர இதைப் பரிமாறிக் கொள்ள முடியவில்லை. இதுதான் இந்த மனித வாழ்க்கையில் மிகப்பெரிய சோகம்.

காசு இல்லாது போவதும், பெண் சுகம் இல்லாது போவதும், உண்ண உணவு இல்லாமல் போவதும் சோகமல்ல. இந்த அற்புதமான ஒரு அனுபவத்தை பெற முடியாது போகிற நிலைதான் சோகம். எனவே இந்த உடம்பை, இந்தப் பிறவியை பிணி என்று அவர்கள் சொல்கிறார்கள். இந்தப் பிணி நீக்கம் பெறுவது என்பது, தான் என்ற விஷயம், அகந்தை என்ற விஷயம் முற்றிலும் அழிந்து போய் எல்லாமுமாய் தான் பரவுவதுதான் ஆரோக்கியம். அதுவே இயல்பு. அதுவே சந்தோஷம். இதற்கு மேலும் இதை விவரிக்க இயலாது.

இப்பொழுது சொன்னதே கூட குழப்பமாய் உங்களுக்கு படிக்கும் போது ஏற்பட்டு விடலாம். நான் முழுமையாகச் சொன்னதாகவும் இது ஆகாது. இதுவொரு அனுபவம். ஒரு துளி உணர அதை பெரிதாக்கி விகசித்து கொண்டு போக வேண்டும். மிக மனவலிமை மிக்க ஞானியரால் பாமரர்க்கு இவ்வனுபவம் ஏற்பட்டு விடலாம்.

என்னுடைய சத்குருநாதன் யோகி ராம்சுரத் குமாரால் சில கணங்கள், இந்த அற்றுப் போகின்ற, எல்லாம் அறுந்து போகின்ற, எதுவுமற்று வெறுமே கிடந்த அனுபவத்தை நான் அடைந்திருக்கிறேன். உள்ளுக்குள் தேக்கி மறுபடி மறுபடி மறுபடி அதை விகசித்துக் கொண்டிருக்கிறேன். இது எங்கு கொண்டு போய் விடும். இது முழுமையா, முக்காலா. எனக்குத் தெரியவில்லை. ஆனால், மிகப்பெரிய விஷயம் கடவுள் தேடல். கடவுள் தேடுபவனுக்கு மதமில்லை. ஜாதியில்லை. அவன் மற்ற மனிதரோடு கலப்பதில்லை. அவன் தனியே கிடக்கிறான். அவன் தனியே இருப்பினும் எல்லோர்பாலும் ஈடுபாடு கொண்டிருக்கிறான். அது மிகச் சுகமான ஒரு இருப்பு. மிக அழகான ஒரு இயல்பு.

எந்தவித குறிக்கோளும் இல்லாத குதிப்பில்லாத ஒரு சந்தோஷம்.

இவ்வளவுதான் இப்போதைக்குச் சொல்ல முடிகிறது. இது பரிமாறல் இல்லை. ஒரு வகுப்பு நடப்பது போல உங்களுக்கு நான் சொல்லவில்லை. இது எனக்கு நானே உரத்த குரலில் இது என்னது என்று விசாரித்துவிட்டு, நானாக நினைத்துக் கொள்வதின் வெளிப்பாடு. எந்தவித நோக்கமும் அற்று வெறுமே மலையுச்சியில் நின்று உரத்து கத்துவது போலவும் ஏற்பட்ட த்வனி. ஏனெனில் இது பரிமாறுதலுக்கு அப்பாற்பட்டது.

அது யாரை வரிக்கிறதோ, அவருக்குத்தான் அது நிகழும். இது உபநிடத வாக்கியம். இதனால் தான் இது பற்றி பேசுவார் எவருமிலர்.

மாறாக பக்தி பற்றியும், ஹடயோகம் பற்றியும், ஞான மார்க்கம் பற்றியும், கடவுள் இல்லவே இல்லை என்கிற நாத்திக வாதமும் கனஜோராய் பேசலாம்.

ஆனால் பேசி என்ன..?

சுபம்



கதை, கவிதை மற்றும் கடிதப் போக்குவரத்து, டி.டி. அல்லது எம்.ஒ. இவைகளை SREE AISHVARYA PUBLICATION ஆனந்த நாவல், 77/1, மாதவரம் நெடுஞ்சாலை, காந்தி பூங்கா எதிரில், பெரம்பூர், சென்னை-600 011 என்ற நிர்வாக அலுவலக முகவரிக்கே அனுப்ப வேண்டும்.

போன்: 044-25512661

Anantha Navel Owned & Published by M.P. Chandra Sekaran at 50/1, Pycrafts Road, 1st Street, Royapettah, Chennai -600 014. and Printed by R.Murugan at Wonder Prints, 14, Weavers Street, Triplicane, Chennai - 600 005.

மாதத்தில் திருமணம் நடந்தது. இப்பொழுது அந்தப் பெண்ணின் புகுந்த வீட்டு நண்பர்கள் பலரும் சக்தி ஜெம்ஸிற்கு அடிக்கடி வந்து கொண்டிருக்கிறார்கள்.

நான் சக்தி ஜெம்ஸை உங்களுக்கு சிபாரிசு செய்வதற்கு ஒரேயொரு காரணம்தான் இருக்கிறது. நல்ல கல்லை குறைந்த விலையில் விற்கிறார்கள். இருநூறு ரூபாய் பெறுமானமுள்ள பிரமிடை இரண்டாயிரம் ரூபாய்க்கு விற்பதில்லை. அநியாயம் செய்வதில்லை.

அவர்கள் கடையில் மாணிக்க விநாயகர் வாங்கி நெஞ்சில் டாலராக அணிந்த பல ஆண்கள் தங்கள் பிரச்சினை தீர்ந்திருப்பதை பேசியிருக்கிறார்கள். சக்தி ஜெம்ஸின் வளர்ச்சிக்குக் காரணம் நாணயம். புத்தக விளம்பரத்தைவிட அவர்களால் பயன்பெற்ற நண்பர்கள் மிகப்பெரிய விளம்பரமாக இருக்கிறார்கள். நீங்களும் போய் பேசிப் பாருங்கள்.